# விடியலுக்கு இல்லை தூரம்

எனக்கு உயிர் கொடுத்து, என்னை நல்வழிப்படுத்தி, நல்ல கல்வி கொடு என் தாய் ஶ்ரீ ரெங்கநாயகி என் தந்தையார் R. அத்ந்தசாரி அவர்களுக்கு இந்த சிறுகதை தொகுப்பு சமர்ப்பணம்..

 ...  ...

# விடியலுக்கு இல்லை தூரம்

விடியலுக்கு இல்லை தூரம்

ஆனந்த் ஸ்ரீனிவாசன்

ananthseenu@yahoo.co.in

மின்னூல் வெளியீடு : FreeTamilEbooks.com



அட்டைப்படம் - லெனின் குருசாமி - guruleninn@gmail.com

மின்னூலாக்கம் - ஐஸ்வர்யா லெனின் - aishushanmugam09@gmail.com

# அச்சுப்பதிப்பு

விடியலுக்கு இல்லை தூரம்
ஆசிரியர் - ஆனந்த் ஸ்ரீனிவாசன்

முதல் பதிப்பு - பிப்ரவரி 2022
பக்கங்கள் - 174
தாள் - 80 ஜிஎஸ்எம்
எழுத்துரு - ATM 052 | ATM 280 | 12pt
விலை - ₹ 200 /-
வடிவமைப்பு மற்றும் அச்சகம் - சன் கிரியேசன்ஸ், காரைக்குடி +91-9578078500
பதிப்பாளர் - பாண்டியன் – வைகை பதிப்பகம்,
பிளாட் எண். 102, செல்லப்பா நகர்,
கழனிவாசல், காரைக்குடி - 630 002
அலைபேசி : 9942847919 / 9688303124

# அணிந்துரை

திரு. ஆனந்த ஸ்ரீனிவாசன் அவர்களின் ‘விடியலுக்கு இல்லை தூரம்’ எனும் இந்த இரண்டாவது சிறுகதைத் தொகுப்பும், முதல் தொகுப்பான, ‘வானம் தொட்டுவிடும் தூரம்தான்’ என்பதைப் போல நேர்மறையான தலைப்பு என்பதே என் கண்களுக்கு முதன்மை அணியாகத் தெரிகிறது.

பெரும்பாலான சிறுகதைகள் பிரபல பத்திரிகைகளில் பிரசுரமான சிறு கதைகள் என்பது இந்தத் தொகுதிக்கு மேலும் அணிகளாய் அழகு சேர்க்கிறது.

இந்த வகையில் இது– 21 ம் நூற்றாண்டின் சுவாரசியமான சிறுகதைத் தொகுப்பு என்பேன்.

கதைக்களங்களையும், கதாபாத்திரங்களையும் முற்றிலும் பிரத்யேகமான கோணத்தில் வைத்து கதாசிரியர் ஆனந்த ஸ்ரீனிவாசன் அவர்கள் ஒரு வித்தியாசமான கதை சொல்லியாக பரிணமிக்கிறார்.

இந்தக் சிறுகதைத் தொகுதிக்கு அணிந்துரை எழுதுவதை நான் பெற்ற பெரும் பேறாக எண்ணி மகிழ்கிறேன்.

எழுத்தாளரின் இலக்கிய ஆக்கத்தை ஆக்குனர் அல்லாத ஒருவர் கொடுக்கும் அறிமுகம்தானே.

அவர் சிறுகதைகளுக்கு விமரிசனம் எழுதுவது என் நோக்கமல்ல.

ஒரு வாசகனாக, ரசிகனாக, ஒரு சக எழுத்தாளனை அறிமுகப் படுத்தும் பணியே என்னுடையது. அதற்கு முன் அந்த எழுத்தாளனின் அனைத்துப் படைப்புகளையும் பல்வேறு சூழலில், பலமுறை, John Ruskin அவர்கள் Seasame And Lilies என்ற படைப்பில் One should go through a book syllable by

syllable till to identify the thoughts of the author, then to try to reach the heart of the author என்று சொன்னவாறு, படைப்பின் மூலம் படைப்பாளியின் சிந்தனைகளைப் உள் வாங்கி, உணர்வுகளைப் புரிந்துகொண்ட அனுபவத்தை வாசகர்களோடு பகிர்ந்துகொள்ளலே, அணிந்துரையின் நோக்கம்.

சுருங்கக் கூறின், ஒரு முதல் ரசிகனாய் வாசித்தல் அனுபவத்தைத் தருவதே என் நோக்கம்.

சிற்சில அளவுகோல்களையும், சில சிக்கலான இலக்கண வரையறைகளையும், முன்னுதாரணங்களையும் ஆங்காங்கே வைத்து அளந்து, நீள, அகல, உயர, கன பரிமாணங்களையெல்லாம் துல்லியமாக அளந்து, தீர்ப்பெழுதும் ஒரு முழுநேர விமரிகன் அல்ல நான்.

நானும் ஒரு சிறுகதை எழுத்தாளன். சக சிறுகதை எழுத்தாளனின் கதைகளில் உள்ள புதுமைகளையும், பார்வைகளையும், அதன் மூலம் நான் பெற்றதைவை, கற்றவைகளை வாசகர்களாகிய உங்கள் முன் சமர்ப்பிப்பதில் பெரு மகிழ்வு எய்துகிறேன்.

இந்தப் புத்தகத்தின் தலைப்புச் சிறுகதை, ‘விடியலுக்கு இல்லை தூரம்’

பார்த்துப் பார்த்துச் செதுக்கிய சிற்பம் போல் வடித்திருக்கிறார் இந்தக் கதையை. கட்டம் கட்டமாகக் கதையை நகர்த்திச் செல்லும் உத்தி வாசகனை நேர்மறைத் தளத்தில் இழுத்துச் செல்லும் என்பது உறுதி.

‘Brevity is the soul of wit’ என்பது ஹாம்லெட் என்ற ட்ராஜடியில் வில்லியம் ஷேக்ஸ்பியர் சொன்னது.

அந்தக் கூற்றை மெய்ப்பிக்கும் வகையில் சுருக்கமாகவும், எளிய முறையிலும் பல்வேறு

கதாபாத்திரங்களையும், அதன் உணர்வுகளையும், கூர்ந்து கவனித்து யதார்த்தமாய், எழுதியிருப்பது இந்தக் கதைத் தொகுப்பின் சிறப்பு.

சாரங்கனும் சலூன் சுப்ரமணியனும். என்று ஒரு சிறுகதை (Nostalgic) அதாவது தன் பள்ளிப் பருவத்து நினைவுகளை மீட்டுக் கொணர்ந்து எழுதிய சிறுகதை. மன்னார்குடியில் அப்போது இருந்த கலாச்சாரத்தை கண்முன் கொணர்ந்துள்ளார் ஆசிரியர்.

வி என் ஆர் சார் இன்னொரு பள்ளிப் பருவ நினைவுளைச் சுமந்த (Nostalgic). சிறுகதை.

அமிக்தலாவும் ஆறுமுகமும் : என்பது எனக்கு மிகவும் பிடித்த ஒரு சிறுகதை. காரணம் நான் ஒரு மன நல ஆலோசகர். அமிக்தலாவைப் பற்றியும் அதன் செயல்கள் பற்றியும் நன்கு அறிந்தவன். இந்தக் கதை கல்கியில் வந்தபோது இந்தக் கதாசிரியரை எனக்குப் பழக்கமில்லை. இருப்பினும் கதையைப் படித்ததும் வியந்து போய் ‘நீங்கள் ஒரு சைக்காலஜிஸ்டா சார்’ என்று கேட்டு அவருக்கு எழுதியது நினைவில் உள்ளது.

மூளையில் அமிக்தலா என்கிற பகுதியின் செயல்பாடுகளை ஒரு சிறுகதையில் கலந்து மெஸேஜ் கொடுத்தது எனக்குத் தெரிந்து இந்தக் கதையில்தான் என்பது என் கருத்து.

வளரும், வளரவேண்டிய எழுத்தாளர் இவர். ஃபார்முலா வைத்துக்கொண்டு கதை எழுதாமல், விரிவாகப் பல தளங்களில் சிந்திக்கிறார்.

நாம் சாதாரணமாகப் பார்த்துவிட்டுக் கடந்து போகும் மனிதர்களையெல்லாம் கூர்ந்து கவனிக்க வைக்கும் ரசவாதம் இவர் கதைகளில் விரவிக்கிடக்கிறது.

வாசக நண்பர்களே, படியுங்கள், சுவையுங்கள், வாழ்த்துங்கள்.

Alfred, Lord Tennyson சொன்னதைப் போல் Always roaming with a hungry heart என்ற இவர் குணம் தெளிவாகத் தெரிகிறது.

To follow knowledge like a sinking star,

Beyond the utmost bound of human thought.

இவர் தேடல் தொடரட்டும்...

எந்த ஒரு குறுகிய வட்டத்திலும் இவர் சிக்காமல்,

எந்தக் குறுகிய வட்டமும் இவரைச் சிக்க விடாமல்.....

To strive, to seek, to find, and not to yield. என்ற டென்னிசனின் கூற்றுப்படி ஆனந்த ஸ்ரீனிவாசனின் தேடல் தொடரட்டும்.

இவர் மேலும் மேலும் வளர்ந்து, இன்னும் அழுத்தமான கதைக்கருக்களை உலகளாவிய பார்வையுடன் எழுதி, சாகித்ய அகாதமி தொடங்கி, இலக்கியத்திற்கான நோபல் பரிசு உட்பட பல இலக்கியப் பசிசுகளைப் பெற்று நாடே புகழும் அறிவு ஜீவியாய் வாழ்வாங்கு வாழ வாழ்த்துகிறேன்

ஜூனியர் தேஜ், வரதராஜன்.அ M.A ., (English Lit) M.Sc ., (Counselling Psychology) B.Ed., CLIS.,
உளவியல் ஆலோசகர்
11B/32 - திருமஞ்சன வீதி, சீர்காழி, 609110, செல் 638137796, varadhushakespeare@gmail.com.
https://junior-tej.blogspot.com/
20.02.2023

# என்னுரை

மொத்தம் 15சிறுகதைகள் அடங்கிய தொகுப்பு. விடியலுக்கு இல்லை தூரம். இதுவே இந்த சிறுகதைத் தொகுப்பின் தலைப்பு.

மேற்படி கதை தினமலர் வாரமலரில் பிரசுரம் ஆகி, கிட்ட தட்ட 100வாசகர்கள்மேல் பாராட்டி , அவர்களின் விமர்சன கடிதம் எழுதி அனுப்பியதை, அந்த பத்திரிக்கை எனக்கு ஜெராக்ஸ் காப்பிஎடுத்து பெருமைப் படுத்தினார்கள். .

தன்னர்வமும், விடா முயற்சியும், இருந்தால், தொழிலில், வாழ்க்கையில், அதுவும் ஒரு பெண்ணாக, நேர்மறை எண்ணத்தைக் கொண்டு இருந்தால், ஜெயிக்கலாம்; அத்துடன் உறவு சிக்கல்கள், பகைமை உணர்வுகள், மூத்த தலைமுறை யோடு போகட்டும், நம் இளம் தலைமுறை அவைகளை,மறந்து ஒற்றுமை உணர்வோடு வாழலாம்; கதையின் நாயகி நிலா அழுத்தம் திருத்தமாக சொன்ன கதை.

ஆரம்பகால கொரானா, துன்பங்கள் அதைப் பற்றிய செய்திகள் வந்து மக்களிடம் பீதியையும் பயத்தையும், அதோடு சிங்கிள் பெட்ரூம் இருப்பவர்கள் கொரோனா காலத்தில் எப்படி தனிமை படுத்துவது? அதில் ஏற்படும் பிரச்சினைகளை, எப்படி கையாள்வது? என்கிற செய்திகள் வந்துக் கொண்டிருந்தது.

இதை அடிப்படையாக வைத்து, ஒரு மத்திய தர குடும்பம் படும் சிரமங்கள் பற்றி நகைச்சுவை உணர்வுடன், சொன்ன கதை. ரமாபத்ரனும் கொரோனா வைரஸூம்;

பால்ய பருவத்து நினைவுகள், எப்போதும் படுமையானவை.!! அதுவும், டீன்ஏஜ் என்று

சொல்லப்படும் வயதில், நாம் செஞ்ச குறும்புகள்,செயல்கள் நினைத்து, நினைத்து அசை போடுவது, ஒரு அலாதியான சுகம். சுமையும் இல்லாம, சிறையும் இல்லாம, சுதந்திரமா, ஒரு பட்டாம்பூச்சி மாதிரி பறக்கிற உணர்வுகள்.

அப்படிப்பட்ட பள்ளிப் பருவநினைவுகள்,

தெரு நண்பர்களுடன் விளையாடிய விளையாட்டு, இவைகளைப் பற்றி எழுதிய கதைகள், பாதாளக்கரண்டி,

சாரங்கனும், சலூன் சுப்ரமணியனும்,

மங்களூர் மாதுவும், மங்குஷ் பேட்டும் ,போன்றவை.

இந்த மூன்று கதைகள் படிக்கும் போது அவைகள் உங்கள் வாழ்க்கையில் நடந்த மலரும் நினைவுகளை சுமந்து வரும் என்பதில் துளி கூட சந்தேகம் இல்லை.

குடியின் கொடுமையினால் சீரழிந்து, வேலையும் கிடைக்காமல், அழிவின் விளிம்பில் இருந்த ஒருவனை, மனோதத்துவ முறைப்படி, கவுன்சிலிங் செய்து, அவன் குடியிலுருந்து அவனைமீட்டு, அவனுக்கு வேலை போட்டுக்கொடுத்து,

அவனை நல்வழி படுத்தி, மனிதனாக ஆக்கிய கதை. இது ஒரு உண்மை சம்பவம். நான் ஒரு அதிகாரியாக இருந்து, கையாண்ட விடயம்.

அமிக்டலாவும் ஆறுமுகம் என்கிற கதை.

ஒருஆசிரியர், தன்னிடம் படித்த மாணவன், தன்னை அவமரியாதை செய்ததாக தன்னுள் ஒரு எண்ணத்திலேயே. அந்த மாணவனை அவமதிக்கிறார். காலச் சூழலில், அவன் அந்த ஊருக்கு அஞ்சல் துறை அதிகாரியாக

வருகிறான்.அந்த ஆசிரியரும் அவனை சந்திக்கும் சந்தர்ப்பம் வருகிறது.அவர் செய்த தவறை சுட்டிக்காட்டி, அவருக்கு அலுவலக உதவி செய்கிறான்.

தவறுதல் இயற்கை என்று உணர்த்தி அவருக்கு நல்லது செய்கிறான். இதுவே வி.என்.ஆர் சார் கதை.

பள்ளித் தோழிகள் இருவர். கால இடைவெளியில் சந்திக்கும் போது, ஒருத்தி பணக்காரி ஒருத்தி ஏழை.இந்த ஏழை தோழியின் கணவன், தன் மனைவிக்கு எது உண்மையான செல்வம், என்பதை புரிய வைக்கிறான்.

திருத்தக்க செல்வம் கதையில்.

ஒரு சிறுகதைத் தொகுப்பு, வெளியிடுவது என்பது எல்லோரும் சொல்வது போல, ஒரு தலைப் பிரசவம் மாதிரிதான்!!

என் முதல் சிறுகதைத் தொகுப்பு ,வானம் தொட்டு விடும் தூரம் தான;.

வெளியீட்டு போது, நான் பட்ட சிரமங்கள், அதை எப்படி மேற்கொண்டேன் என்பதை, தெரிவிக்கும் சிறுகதை ,எல்லாம் அவன் செயல்.

இவ்வாறு 15 சிறுகதைகளும் ஒவ்வொன்றும் வித்தியாசமான கோண த் தில் உருவானவை.

என்னுடைய வேண்டுகோளை சொன்ன ,பத்தாவது நிமிடம் என் நூலுக்கு அணிந்துரை வழங்கிய சிறுகதை எழுத்தாளர், ஓவியர், உளவியல் ஆலோசகர் சீர்காழியைச் சேர்ந்த ஜூனியர் தேஜ் என்று அழைக்கப்படும் திரு வரதராஜன் அவர்களுக்கு என் நன்றிகள் பல.

நெருக்கடியான அலுவல் பணியிலும் மிகச்

சிறப்பாக இந்த நூல் வெளியிட்டுக்கு உதவிய திரு பாண்டியன் எழுத்தர், அஞ்சல் துறை காரைக்குடி அஞ்சலகம் காரைக்குடி, அவருக்கும், பாண்டியன் வைகை பதிப்பக உரிமையாளர் பாண்டியன், ஆறுமுகம் அவர்களுக்கும், வடிவமைப்பு செய்து, அழகுற அச்சுக் கோர்த்து, தன் பணியினை நேர்த்தியாக செய்து கொடுத்த திரு லெனின், சன் கிரியேசன்ஸ், அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

மேலும்,என் சிறுகதைகளை, பிரசுரித்து, என்னை ஊக்குவித்த, கல்கி மின் இதழ்,

பாஞ்சாஜன்யம் மாத இதழ்,தினமலர் வாரமலர் ஆசிரியர்களுக்கும் கோடானு கோடி நன்றிகள்.

அன்புடன்
ஆனந்த் ஞீனிவாசன்
சென்னை 600089
9444958521

# விடியலுக்கு இல்லை தூரம்

கடந்த இரண்டு வருடமாக, வேலை கிடைக்காத காரணத்தினால், மன உளைச்சலில் தவித்த, சந்திரன், அம்மா கொடுத்த காபியை குடித்த வாறே, “இன்னிக்கு அட்டென்ட் பன்ற இன்டர்வியூவில் தேர்ச்சி பெற்று, வேலையில் சேரணம்ன்னு நினைக்கிறேம்மா,” என்றான்.

“நிச்சயம் நீ நினைக்கிறது நடக்கும்.”

“கடவுள் கிட்ட வேண்டிக்கோம்மா!” குழந்தை மாதிரி சொன்னான், சந்திரன்

“நான் வேண்டாதா தெய்வம் இல்லைடா! ஆனாலும் கடவுள் இன்னும் கண்ணை திறக்கலையே சந்திரா.!!”

“அம்மா! எனக்கு ரொம்ப நாளாக ஒரு சந்தேகம்.நம்ம நிலைமை, இப்படி ஆனதுக்கு காரணம் நம்ம சித்தாப்பாவுக்கு, அப்பா செஞ்ச கொடுமையாக கூட இருக்கலாம்.இல்லையா?”

படிப்பறிவு இல்லாத சித்தப்பா சொத்தை, ஏமாற்றி பிடுங்கிகிட்டது ஒரு காரணம். அவர் வயத்தரிச்சல், அந்த குடும்பம் சாபமோ என்னமோ, மலருக்கு இன்னும் கல்யாணம் தகையலை, நானும் ஜெர்மனியில், நல்ல வேலையில் இருந்தவன், ஒரே

நேரத்தில் ஓங்க இரண்டு பேருக்கும் ஆக்சிடென்ட் ஆனதால் இந்தியா திரும்பும் படி ஆயிடுச்சு."

“எனக்கும், மனசை அரிச்சுகிட்டு தான் இருக்கு. ஒரேபொண்ணு. பிழைப்புக்கு சொற்ப நிலம் விவசாயம். மேல் வருமானத்துக்கு டீ கடை நடத்தி வந்தார்கள”.

“நீ சொல்றதும் ஒரு காரணமாக இருக்கலாம். கிராமத்தில் விசாரிச்சப்போ, அவங்க, வெளியூர் போய் விட்டதா சொன்னாங்க”.

“இப்போ எங்கே எப்படி இருக்காங்களே?”

பேருதான், தர்மலிங்கம். தர்ம சிந்தனை துளி கூட கிடையாது. ஒரு தனியார் கம்பனியல வேல. தம்பியை அநியாயமா, ஏமாத்தி வாங்கின சொத்து, பாழா போன சூதாட்டம் மூலம், வந்த வழியே போச்சு!.

இப்போ ஓய்வுக்கு பிறகு, ஃபேஸ்புக் வாட்ஸ்அப்பில் கவனமே தவிர, வேறு சிந்தனை இல்லாத ஜென்மம்; என்று அம்மா அப்பாவை திட்டுவது வழக்கமான ஒன்று அந்த வீட்டில்.

“என்றக்காவது, ஒரு நாள், சித்தப்பா, சித்தி அவங்க பொண்ணையையும், பார்த்து மன்னிப்பு நான் கேக்கணும்டா”. சிவகாமி வருத்தத்துடன், சொல்ல நெகிழ்ச்சி ஆனான் சந்திரன்.

இவர்கள் படும் வேதனை பற்றியோ, மலருக்கு கல்யாணம் நடக்காதது பற்றியோ, சந்திரனுக்கு நல்ல வேலை கிடைக்காதது பற்றியோ, கவலை இல்லை.

அல்லது தன் தம்பி குடும்பத்தை பற்றி வருத்தம் படுகிறார்களே என்கிற கவலையும் இல்லாமால், அன்றும் வழக்கம் போல் வாட்ஸ்அப் பார்த்து கொண்டிருந்தார் தர்மலிங்கம்.

“கால நேரம் இரண்டு பேருக்கும் சரியில்லை. ஏழரை சனி இரண்டு பேரையும் பாடா படுத்தி விட்டது”

“நீங்க முடிஞ்சா திருநள்ளார் போயிட்டு வாங்க, இல்லையா, நம்ம ஊர் கோயிலுக்கு போய் சனி பகவானுக்கு அர்ச்சனை பண்ணுங்க எல்லாம் சரியாயிடும்.”

“நீங்களும் ஓங்க ஜோசியமும்” எரிந்து விழுந்தாள் சிவகாமி.

குளித்து தயாராகி, வண்டிய எடுத்து கிளம்பிய சந்திரனிடம், " டிபன் சாப்பிட்டு போடா" என்றாள் சிவகாமி.

“வேண்டாம்மா. !! எனக்கு பசிக்கல! போயிட்டு வரேன்”.

காலம் இப்படியே போய் விடுமோ, என்ற அச்சம் சந்திரனுக்கு மட்டுமல்ல, சிவகாமிக்கும், மனதில் அரிக்க ஆரம்பித்தது.

சந்திரன் போடாத விண்ணப்பம் இல்லை! போகாதா இன்டர்வியூ கிடையாது!!. நடுவில் பாண்டமிக் பீரியட் வேறு!.எங்கும் போக முடியவில்லை.ஒன்றும் செய்வதற்கு இல்லை!!!.

எங்கே இன்டர்வியூ போனாலும் நீங்க படித்துள்ள படிப்பு, “ஓவர் குவாலிபிகேஷன்”சார். எங்களுக்கு செட் ஆகாது என்றும்; சில இடங்களில், சொல்லி அனுப்பறோம் என்றும், சில கம்பெனிகளில், " ஷார்ட் லிஸ்டில்" வைச்ருக்கோம்; “வி வில் கால் யூ பேக்” …..என்றும் கூறினர்.

இது மாதிரியான வசனங்களை கேட்டு புளித்து போயீருந்தது

சந்திரனுக்கு.

ஜெர்மனியில், பழகிய நாட்களில், அந்த நாட்டு கலாச்சாரமும், பழக்க வழக்கங்களும், ரொம்ப பிடித்து போனது.அவனுக்கு

எதிலும் நேர்மையும், இன்வால் மெண்டையும், பார்த்த சந்திரன், தன்னையும், அவ்வாறே வளர்த்து கொண்டான்.

நிர்வாக அனுபவமும், நன்னடத்தை சான்றிதழ் இருந்தும், ஒரு பிரயோசனமில்லை.ஓவர் குவாலிஃபிகேஷன் என்கிற வசனம் தான் எங்கு போனாலும். என்ன உலகம் இது? நேர்மைக்கும் திறமைக்கும் மதிப்பில்லை. எங்கு போனாலும் சிபாரிசு தான்.இப்படி சிபார்சால் மட்டுமே, வேலை வாங்கி கொள்ளும் நபர்கள் மத்தியில், நான் ஒரு செல்லாகாசு ஆகி விட்டேனே? தான் உழைக்க தயாராக இருந்தும், வாய்ப்பே கிடைக்காத வாழ்க்கை.! மலர் கல்யாணம், அப்பா, அம்மா மருத்துவ செலவு, இதற்கெல்லாம் என்ன செய்ய போகிறேன்? சம்பாதித்த பணத்தில் ஒரு வீடு.அதோடு மருத்துவ செலவு. இரண்டு வருடங்களாக சமாளிச்சாச்சு.

மனதுக்குள் புலம்பி தவித்தான் சந்திரன்..

———-——-*—-

அந்த பிரமாண்ட கட்டிடத்தின், பத்தாவது மாடியில், “கோபிநாத் ஐ.டி சொலுஷன்ஸ்” போர்டு வரவேற்றது.

உள்ளே நுழைந்து, வர்வேற்பாளியினிடம், தன்னை, அறிமுக படுத்திக் கொண்டான்.

அடுத்த பத்தாவது நிமிடமே, எச்.ஆர்டமிருந்து, அழைப்பு வந்தது.எச்.ஆர் கேட்ட கேள்விகளுக்கு,

பதில் அளித்த விதம், அவர்களுக்கு பிடித்துள்ளது என்பதை தெரிந்து கொண்டாலும், ரிசல்ட் எப்படி இருக்குமோ? என்ற கவலை அவன் முகத்தில் தெரிந்தது.

“ஓ.கே சந்திரன் உங்க புரபைல் பிடிச்சிருக்கு இன்னும் ஓரிரு நாளில்” வீ வில் கால் யூ பேக்" என்றார்.

“வழக்கமான வசனம் தானே இது!” வெறுப்புடன் வெளிய வந்தவனுக்கு, மனசு, உடம்பு, இரண்டும் சோர்வை கொடுத்தது.

காலையில். சாப்பிடாமல், வந்தது வேறு தலைவலி; காஃபி சாப்பிடலாம், என்று நினைத்தவன்; பிரபலமான அந்த ஹோட்டல் வாசல் அருகே, வண்டியை நிறுத்தி ஸ்டாண்டு போடும் போது, தன்னை ஓரசி, ஒரு கார் வரவும், அந்த காரிலிருந்து, “அண்ணே சந்திரன் அண்ணே” குரல் கேட்டது.

குரல் வந்த திசையை பார்த்த போது, நிலா இறங்கினாள்.

“இவள் இங்கு எப்படி? அதுவும் காரில்!!”

காரை அந்த ஹோட்டலில், பார்க் பண்ணிவிட்டு, காபி சாப்பிட கூப்பிடவும் நிலாவை தொடர்ந்தான் சந்திரன்.

கூட்டம் இல்லாத ஒரு இடத்தில் அமர்ந்த பிறகு,

“என்ன அண்ணே! எப்படி இருக்கீங்க? அக்கா மலருக்கு கல்யாணம் ஆச்சா? பெரியம்மா பெரியப்பா எப்படி இருக்காங்க?”

இன்று காலைதான், சித்தப்பா குடும்பம் பற்றி அம்மாவோடு, பேசியது ஞாபகத்துக்கு வந்தது.

கொஞ்சம் கூட காழ்ப்புணர்ச்சி காட்டாமல், ஒரே மூச்சில், பட படவென நிலா பேசிய விதம் சந்திரனுக்கு, பிடித்து இருந்தது.

“ஆமாம் நீங்க. ஜெர்மனியில் இருக்கிறீங்க” என்று ஓங்க நண்பர் மூலம் கேள்விப்பட்டேன்.".

“அதுஒரு பெரிய கதைம்மா!”

நடந்த விஷயத்தை சுருக்கமா சொன்னான் சந்திரன்.

“கேக்கவே கஷ்டமா இருக்கு அண்ணே”.

“ஆமாம் என் கதை கிடக்கட்டும் நிலா”! நீ எப்படி இருக்கே? கிராமத்தில் இருந்தவளா நீ? ஆளே மாறி போய் இருக்கே!; “சித்தப்பா சித்தி சௌக்கியாமா? எங்கே இருக்கே?” “கிராமத்தை விட்டு வந்துட்டதா கேள்விப்பட்டேன்”

“எல்லாத்தையும் நிதானமா சொல்றேன் அண்ணே.!” “கிராமத்தை விட்டு இங்கு வந்து அஞ்சாறு வருஷம் ஆச்சு..நான் எம்.பி.ஏ முடிச்சப்ப, அப்பாவுக்கு உடம்பு முடியாம போச்சு”. “அம்மா சில வீடுகளில் வேலை செஞ்சுகிட்டு இருந்தாங்க”. “ஒரு நாள் பேப்பரில் பயோ டீசல் பத்தி படிச்சேன். அதை பத்தி ஒரு புராஜக்ட் தயார் பண்ணி, பேங்க் லோன் அப்ளை பண்ணினேன்”.

என் கிளாஸ் மேட் இரண்டு பேரும், நானும் பயோ டீசல் பிசினஸ் பண்றோம்.."

“என்ன நிலா?பயோ டீசல் ன்னு என்னென்னமோ சொல்றே! எனக்கு ஒன்னும் புரியல? என் ஐ. டி மூளைக்கு ஒன்னும் புரியாது நிலா”.

ஒன்னுமில்லை. பெரிய பெரிய ஸ்டார் ஹோட்டல்கள், செயின் ரஸ்டாரண்ட்,

பெரியஹோட்டல்கள். பயன் படுத்தும் எண்ணெய்

இரண்டாவது முறை பயன்படுத்தாமல் வெளியில் விற்று விடுவார்கள்.

அதை நாங்க விலைக்கு வாங்கிக றோம்..

“அது சரி, ஹோட்டல்களில பயன்படும் எண்ணெய் வாங்கறது ஓ.கே”!! “வீட்டில் உள்ளவங்க அவ்வளவு லேசில ஒத்து கொள்ள மாட்டா ங்க? அவங்களை எப்படி கன்வின்ஸ் பண்ணி வாங்க முடிஞ்சுது.”!

“இந்த யூக்கோ UCO அதாவது used cooking oil பற்றிய தீமைகள் பற்றி, ஒரு விழிப்புணர்வு ஏற்படுத்தி, இந்த எண்ணெய் பயன்படுத்தி, அதனால் உடம்புக்கு வரும் வியாதிகள் பற்றி, பேச, பேச, அவர்கள் புரிந்து கொண்டார்கள்”.

“கொஞ்சம் கொஞ்சமா புரிய வைத்து இப்போ சூப்பரா போய்கிட்டு இருக்கு”. " பெரிய பெரிய பிளாட்ஸஸ்ல, இருக்கிறவங்களிடமிருந்து

லிட்டர் ரூபாய் 20 to 25 வரை கொடுத்து கன்டெய்னரில் கலெக்ட் செய்கிறோம்“.”பெரிய ஹோட்டலில் ரூபாய்30க்கும் வாங்கி கிறோம்“. சின்ன, சின்ன, ஹோட்டல்கள் தெரு ஓரம் தள்ளு வண்டியில் விற்கப்படும் வடை பஜ்ஜி எண்ணெய் உட்பட”எல்லாவற்றையும் கலெக்ட் பண்ணி, இங்கு என் பாக்டரியில் பிரித்து பின் ராணி பேட்டைக்கு அனுப்புவோம். அங்கு அது பயோ டீசல் எரிபொருள் ஆக மாற்ற படுகிறது".

“தொழில் முதல் 6 மாசம் சாலேன்ஜ் ஆக தான் இருந்தது. பாண்டமிக் பீரியட் வேறு ஒன்னும் பண்ண முடியலை”

“ஓட் ட லிருந்து கலெக்ட் பண்ண ஒரு டீம்,

வீடுகள், பிளாட்ஸ் மூலமாக கலெக்ட் பண்ண ஒரு டீம், ஃபைவ் ஸ்டார் ஹோட்டல் மூலம் கலெக்ட் பண்ண ஒரு டீம்.”

"முக்கியமா இது ஒரு பார்ட் டைம் வேலை. நிறைய காலேஜ் கேர்ள்ஸ், பாய்ஸ்க்கு வேலை வாய்ப்பு கொடுக்கிறேன்.

தங்களின் செலவுக்கு, இந்த வேலையை செஞ்சு சம்பாதிக்கிறாங்க"

“கார்பரேட் ஸ்டைலில் ஒவ்வொரு டீமுக்கும் யூனி பார்ம் அடையாள அட்டை முக்கியமா இ.வெகிகிள் கொடுத்து கலெக்ட் செய்யறோம்.”

“தினமும் காரை எடுத்து போய் ஒவ்வொரு இடமா மானிட்டர் பண்றேன்”.

“அரசாங்கம் மானியம் கொடுக்குது.RUCO ருக்கோ திட்டம் மூலம் பயன்படுத்தபட்ட சமையல் எண்ணெய் பயோ டீசல் ஆக பயன்படுகிறது”.

“இந்த பயோ டீசல் எரிபொருள் ஆக பயன் படும் போது சுற்று புற சூழல் பாதுகாக்க படுகிறது. கன்ஸ்டிரக்ஷன் ஓர்க் குவாரி போன்ற இடத்தில் இந்த பயோ டீசல் பயன் படுத்திட்டு வராங்கா. விலையும் மிக குறைவு”.

அரசாங்கமும் நல்ல ஆதரவு கொடுக்குது.

இதில் இரண்டு விஷயத்தை நாம் கவனிக்க முடிகிறது. ஒன்று இரண்டு முறைக்கு மேல் பயன் பட்ட எண்ணெயை உபயோக படுத்த கூடாது என்று FSSAI உணவு தர கட்டு ப்பாடு ஆணையம் அறிவுறுத்தல் படி நமக்கு அந்த எண்ணெய் கிடைக்க வழி செய்கிறது. இரண்டாவது, அப்படி வாங்க படும் எண்ணெய் ஃபில்டர் செய்து பயோ டீசல் உற்பத்தி செய்யும் ஆலைக்கு அனுப்ப படுகிறது.அந்த பயோ

டீசல் எரிபொருள் பயன் படுத்தி வரும் புகை சுற்று சூழல் கட்டு படுத்துகிறது. இப்படி நல்ல விசயங்கள் அடங்கிய பிசினஸ்.

“ஆமாம் நிலா நீ சொல்றது நூத்துக்கு நூறு உண்மை.”

“இரண்டே வருடத்தில் நான் ஒரு தொழில்திபர் ஆகிட்டேன்”

“ரொம்ப சந்தோசமா இருக்கு நிலா”. “ஓங்க குடும்பத்துக்கு, எங்க அப்பா செஞ்ச கொடுமை தான், இப்படி இருக்கோம். என்னை. மன்னிச்சிடு நிலா”.

“அம்மாவும் ஓங்கள பார்க்கணும் மன்னிப்பு கேக்கணும்ன்னு இன்னிக்கு காலையில் கூட சொன்னாங்க”.

“அண்ணே என்ன அண்ணே! மன்னிப்பு அது இதுன்னு”.

“பெரியவங்க சண்டை பத்தி நான் ஏதும் பேச விரும்பல. நாங்க அன்னிக்கே மறநது போயிட்டோம்”.

“நம்ம குடும்பதுக்குள்ள, கிட்ட தட்ட 15 வருசம் இடைவெளி ஏற்பட்டு போச்சு” இனி பகைமை வேண்டாம்".

“நம்ம இளம் தலைமுறை ஒற்றுமையா இருப்போம்; மலர் அக்காவையும் வரசொல்லுங்க. கல்யாணம் ஆகிற வரைக்கும் ஆபீஸ் அட்மின் வேலை பார்க்கட்டும்”.

“எப்பேர்பட்ட மனசு நிலா உனக்கு.!”

சந்திரன் நெகிழ்சசியுடன் சொன்னான்..

“அட விடுங்கண்ணா”.

“உங்க திறமை, புத்திசாலித்தனம் ஓங்க நண்பர் மூலம் கேள்வி பட்டு இருக்கேன். என்னை மாதிரி நீங்களும் ஜெயிக்கணும்ன்னு மனப் பூர்வமாக நினைக்கிறேன்”.

“இந்த தொழிலை இன்னும் விரிவாக்கம் செய்யணும். ஒருவெப்சைட், ஆப் உருவாக்கணும். ஆன்லைன் பிசினஸ் பண்ணனும். என் கம்பெனியை, தமிழ்நாடு முழுவதும் மேலும் விரிவு படுத்த, ஒங்கள மாதிரி, ஆள் தேவை”.

“ஓங்க திறமைக்கு, தகுந்த சம்பளமும், மேனஜிங் டைரக்டர் போஸ்ட்டும் தர நான் தயாரா இருக்கேன்”..

“இரண்டு ஆண்டுகள் முன்பு வரை, இந்த பயோ டீசல் பிசினஸ் பற்றி, ஒரு விழிப்புண்ரவு இல்லாமல் இருந்தது. ஆனா, இன்னிக்கு, சென்னையில புற்றீசல்கள் மாதிரி, நிறைய கம்பெனி முளைச்சுருக்கு”

“அவங்க மத்தியில நாமே கட்டாயம் ஜெயிக்கணும் என்ன சொல்றீங்க அண்ணே. ?”என்றாள் நிலா.

“ஓங்க விடியலுக்கு இல்லை தூரம்ன்னு நினைச்சுகோங்க அண்ணே”!!!

“ஆமாம் நிலா. நீ என்னை விட சின்னப் பொண்ணு! ஆனா! எவ்வளவு அனுபவம்? வாழ்க்கையின் ரியாலிட்டி யை மிக அருமையாக நீ புரிஞ்சு கொண்டதோடு மட்டுமல்லாமல், எனக்கும் புரிய வைச்சு, என் கண்ணை திறந்துட்டே”

.

“இவ்வளவு நாள் வேலை வேலைன்னு தேடாமா, சுய தொழில் பண்ணியிருந்தா, நல்லா இருந்திருக்கும்.”

“உனக்கு தோள் கொடுக்க நான் மட்டுமல்ல, மலரும் தயார் நிலா”.

“என்னை ஆசிர்வாதம் பண்ணுங்க அண்ணே” என்று சொல்லி சந்திரன் காலில் விழ, இருவரும் உணர்ச்சி பெருக்கில் தழுவ, மகிழ்ச்சி வெள்ளம் பொங்கியது அவர்களிடத்தில்.

# அமிக்ட்லாவும் ஆறுமுகமும்

நெய்யக்காரப்பட்டி போஸ்ட் ஆபிஸ், சூப்பரின்டடெண்ட் இன்ஸ்பெக்ஷன். என் கண்ட்ரோலில் உள்ள ஆபீஸ். எனவே எஸ்.பி என்னையும் கூப்பிடவே, நானும் கூடபோயிருந்தேன்.

இன்ஸ்பெக்ஷன் முடிந்து மாலை 5 மணி. பழனி ஹெட் போஸ்ட் ஆஃபீஸ் உள்ளே ஜீப்பில்நுழைந்த போது, எதிர்பாராமல் அந்த சம்பவம் நடந்தது. ஜீப் முன்னே "என்னை சாக அடிச்சுடுங்க நான் இருக்க விரும்பல எவ்வளவு ஊழைச்சு இருப்பேன் இந்த இலாகாவுக்கு? கத்தி கொண்டே, குறுக்கே பாய்ந்தான்அந்த இளைஞன்.

நல்ல வேளை டிரைவர் சாதுர்யமாக, பிரேக் போட்டதினால் அவன் உயிர் தப்பினான்.

இவன் சத்தம் கேட்டதும், ஆபீஸ் உள்ளே இருந்து வந்தவர்கள்,

“ஏய் உனக்கு மூளை இல்லை?”

“சாவறத்துக்கு எஸ்.பி ஜீப்தானா கிடைச்சுது”. “குடிகார பயலே. சாகணும்ன்னு நினைச்சா, போய் வர்த்தமா நதி டாம் ல விழுந்து சாகு. இல்லாட்டி கொடைக்கானல் போற பாதையில், சரிந்து விழுந்து செத்து போ.”

“ஜீப் முன்னாடி விழுந்து செத்து போயிட்டா, அய்யா தானே, கோர்ட் கேஸ் ன்னு அலையனும்.”

எங்களுக்காக, வக்காலத்து வாங்கி பேசினவன், ஒரு குறிப்பிட்ட யூனியன் செகரேட்டரி. தான் எஸ்.பி முன்னாடி, நல்ல பேர் வாங்க முயற்சிக்கிறான் என்பது மட்டும் நன்கு தெரிந்தது.

சலசலப்பு அடங்கியதும், சற்று நேரத்தில் மொத்த கூட்டமும் கலைந்தது.

எஸ்.பி. என்னிடம், " வாசு" அந்த இளைஞன் பற்றி விசாரிங்க ? என்று சொல்லிவிட்டு திண்டுக்கல் கிளம்பி போனார்.

நான் என் ஆபீஸ் சேம்பரில் வந்து உக்கார்ந்தேன்.

நான் வாசுதேவன் வயது 32 ஏ. எஸ்.பி ப்ர மோஷன்ஆகி இங்கு வந்து ஒரு வாரம் ஆயிற்று.

———-—-*—-

இந்த ஊருக்கு, போஸ்டிங் கிடைக்கும் என்று எதிர்பார்க்க வில்லை! அது ஒரு சுவாரஸ்யமான நிகழ்வு!!

நான் 10 நாள் லீவில் இருந்த போது, ரிஜினல் ஆஃபீஸ் லுருந்து போன். மதுரை அல்லது சோழவந்தான் இரண்டு டிவிசின்க்குள் ஒன்று போஸ்டிங் என்றார்கள்.

வேலை பார்க்க வந்துட்டோம் எந்த ஊர் இருந்தா என்ன? என்று நினைத்துக் கொண்டேன்.

அன்று விஜயதசமி ஞாயிற்றுக்கிழமை, கலை ஆர்வம் மிக்க நான், தெரு குழந்தைகளின் கிரியட்டிவிட்டிக்கு, தீனி போடும் விதமாக, 15 நிமிடம் அளவுக்கு “நவீன திருவிளையாடல்” நாடகம் என்று மைக்கில் தெரிவித்து விட்டு, இதை நகைசுவையாக

ரசியுங்கள். ஆன்மீகவாதிகள் மனம் புண்பட வேண்டாம்; சீரியசாகவும் எடுத்து கொள்ள வேண்டாம்; என்று ஒரு டிஸ்க்க்ளைமர். கொடுத்து விட்டு நாடகம் அரங்கேற்றம் செய்தேன்..

மாம்பழத்துக்கு பதில் புருேட்டி வைத்துக்கொண்டேன்.

சிவனும் பார்வதியும் கணேசனுக்கு, புருேட்டி கொடுத்ததால், கோபித்து கொண்ட முருகன், ரெஸ்ட் எடுக்க, கொடைக்கானல் போகும் வழியில், மயில், தோள் பட்டை வலி, காரணமாக, பழனியில் இறக்கி விட, “ஏன் என்னை இங்கு இறக்கி விட்டாய்? மயிலே மயிலே” என்று முருகன் கேட்டதற்கு, “அட போ முருகா! ஒன்னை சுமந்து, சுமந்து, தோள் பட்டை வலிக்குது”. “பழனியும் கிட்ட தட்ட கொடைக்கானல் மாதிரி தான். இங்கேயே தங்கி அருள் பாலிக்கவும்” என்று மயில் சொல்வதாக முடித்து இருந்தேன்.

நான் முன் கூட்டியே மன்னிப்பு கேட்டு இருந்தது ஒரு காரணம். குழந்தைகளின் நடிப்பு, அமர்க்களம். ஏகப்பட்ட பாராட்டுகள்.

மறுநாள் திங்கள் 11 மணி அளவில், என் லான்டலைன் போன், அடித்து கொண்டே இருந்தது; ரிஜினல் ஆபீஸ் போன்.

“ஒங்க போஸ்டிங் சின்ன மாற்றம் வாசுதேவன். மதுரயும் இல்ல சோழவந்தானும் இல்ல.”

“பின்ன எங்கே சார்”?

“பழனிசப் டிவிசின்க்கு போஸ்டிங். அடுத்த வாரம் ஜாயின் பண்ணிடுங்க”

ஒரு நிமிஷம் நான் ஆடி போய் விட்டேன்.

"ஏண்டா! என்னை பாத்து கிண்டல் பண்ணி,

டிராமாவா போட்டே, வாடா மவனே, என் ஊருக்கு வாடா என்று, பழனி முருகன் சொல்வது போல் இருந்தது.

அப்படிப் பட்ட பழனியில், இப்போது எனக்கு வேலை. முருகனின் கருணையை என்னவென்று சொல்ல!!

என் ஆர்டர்லியிடம், அவனை, என் ஆபீஸ் சேம்பர்க்கு, அழைத்து வர சொன்னேன்.

அவன், உள்ளே நுழையும் போதே மது வாடை, தலை சரியாக சீவ படவில்லை. கண்களில் ஒளி மங்கி இருந்தது. சிகரெட் வாசம் வேறு. ஒரு ஆபீசர் சேம்பரில் நுழைகிறோம், என்கிற பயம் அவனிடம் தென்படவில்லை.

“சார் மன்னிச்சுடுங்க சார்”

சற்றும் எதிர்பார்க்கவில்லை என் காலில் விழுந்து மீண்டும் மன்னிப்பு கேட்டான்.

கை கட்டி நின்று கொண்டே இருந்தான்.

“உன் பெயர்”

“ஆறுமுகம்”

“எவ்வளவு நாளா இந்த போஸ்ட் ஆபீஸில் வேலை செய்யறே?”

“அஞ்சு வருஷமா அவுட் சைடர்”

“ஏன் உனக்கு அபாய்ண்ட்மெண்ட் யாரும் போடலயா?”

“இதுக்கு முன்னாடி இருந்த அதிகாரிங்க என் கிட்டே துட்டும் வர்த்தமானத்தி டாம் மீனையும், வாங்கி சாப்பிட்டு ஏமாத்திட்டங்கா?”

“யூனியன் கூட உனக்கு ஹெல்ப் பண்ணலையா?”

“இல்லை சார்”அவங்களும் சேர்ந்து, என்னை ஏமாத்திட்டடங்கா"

“அப்பா அம்மா ?”

“அவங்க தம்பியுடன் இருக்கங்கா.”

“தம்பியும் சீனி யாரிட்டி லிஸ்டல் 5 வது ஆள் அவனுக்கு நியமன உத்திரவுகொடுத்துட்டாங்கா சார் !”

“என் பொண்டாட்டி பைத்தியம்ன்னு, என் வீட்டுக்கு அவங்க யாரும் வரமாட்டாங்கா சார்.”

“நான் ஒத்த ஆளு சார் கஷ்டபப்படுகிறேன்.”

உறவில் இத்தனை நிறங்களா?

அதற்க்குள், ஆர்டர்லி சீனியாரிட்டி பைல், மற்ற ரெகார்ட்ஸ்களை, என் டேபிள் முன்னே வைத்தார்.

அவன் சொன்னது சரி தான் .

ஒரு வருடத்தில், 180 நாட்களுக்கு மேல் வேலை பார்த்து, சீனியாரிட்டி லிஸ்டல், முதல் ஆளாக இருந்தும், எனக்கு முன்பு இருந்த அதிகாரிகள் இவனை, புறக்கணித்து விட்டு, இவனுக்கு பிறகு உள்ளவர்களக்கு, பணி நியமனம் உத்திரவு, போடப்பட்டு உள்ளது தெரிய வந்தது.

ஏன் இவனை செலக்ட் செய்ய வில்லை? என்பதற்கு, “ஒழுக்க குறைவு, தண்ணி போட்டு, ஆபீஸில் அதிகாரிகள், கூட வேலை பார்க்கும் ஊழியர்களை தர குறைவாக பேசுவது, இந்த ஒழுக்க கேடுகளுக்காக, இவன் நிராகரிக்க படுகிறான்” என்று “நோட்” போடபட்டு இருந்தது.

என் பார்வையில் அந்த அதிகாரிகள் தான் தரம் கெட்டவர்கள். அபாய்ண்ட்மெண்ட் போட முடியாது, என்று நினைப்பவர்கள், எதற்காக பணத்தையும், வர்த்தமாநதி டாம் மீன்களையும், வாங்க வேண்டும். யாருக்கும் வெட்க மில்லை!

“நெஞ்சு பொறுகதில்லை இந்த நிலை கெட்ட மனிதரை கண்டு விட்டால்” என்கிற முண்டாசு கவிஞன் பாட்டு தான்என்நினைவுக்கு வந்தது.

ஆனால், பழனி கோயிலில் உள்ள, அவன் செல்வாக்கை அதிகாரிகளை அழைத்து போக மட்டும், பயன்படுத்தும் வேடிக்கை மனிதர்கள் என்பதை புரிந்து கொண்டேன்.

எந்த உயர் அதிகாரிகள், பழனி முருகன் கோயில் தரிசனம் பண்ண வந்தாலும், “கூப்பிடு ஆறுமுகத்தை” என்பார்களாம். அந்த அளவிற்கு கோயிலில் உள்ள, அதிகாரிகளுடன் இவனுக்கு, நல்ல உறவு. இந்த காரணத்தினால், ஆறுமுகம் தான், வருகின்ற அதிகாரிகளை, நன்கு கவனித்து, அவர்களுக்கு வின்ச் பாஸ் வாங்கி, முருகன் தரிசனம், ஓசியில் தங்க தேருஇழுக்கவைப்பது, பஞ்சா மிர்தம் எல்லாம் வாங்கி கொடுத்து விட்டு, அவர்களை கெஸ்ட் ஹௌஸ்வரை, கொண்டு விட்டு, அவர்களுக்கு சாப்பாடு, டிபன் வாங்கி கொடுத்துவிட்டு, வருவதற்குலோக்கல் ஏ. எஸ்.பி யிடம், முன் கூட்டியே, பணம் வாங்கிக்கொண்டு, செலவு கணக்கை சொல்லிவிடுவது வழக்கமாக இருந்து இருந்துருக்கிறது.

தரிசனம் பண்ண வந்த அதிகாரிகள் டிப்ஸ் கொடுத்தால் வாங்க மாட்டான்.

ஆனால், வரும் அதிகாரிகளிடம், தான் 180 நாட்கள் வேலை பார்த்தும், தனக்கு இலாகாவில், நியமன உத்திரவு வரல சார்? “கொஞ்சம் ஏ.எஸ்.பி

கிட்ட சொல்லுங்க சார்” என்று கோரிக்கை வைப்பான்..

அவர்களும் சொல்றேன், நிச்சயம் சொல்றேன், என்று தலையாட்டி விட்டு, போவார்கள். ஆனால் யாரும், ஒன்றும் செய்யாமல் போய் விடுவார்கள்.

ஒரு வருடம், இரு வருடம் அல்ல, தொடர்ந்து அஞ்சு வருடங்கள், இதேநிலையில் தான் இருக்கிறான்.

“அவன் ஏன் குடிக்கிறான்?”

குடிப்பதற்கு அவன் சொன்ன காரணம், உண்மையா? பொய்யா? என்று நேரில் விசாரித்த போது, பைத்தியமான மனைவி, தினமும் இவனை போட்டுஅடிப்பதும், அந்த விரக்தியில், இவன் குடிப்பதும் சில நேரங்களில் காலையிலே சண்டை வந்தால், குடித்து விட்டு, ஆபீஸ் வேலைக்கு வருவது. போதை ஏறி, இங்கு ஆபீஸ் உள்ளவர்களிடம், தகராறு செய்வது , என்று தெரிந்தது.

அது மட்டுமல்ல, வேலை கிடைக்காததால், விரக்தியின் உச்சம், குடி கோபம், சண்டை, வேதனை.

வாய்ப்பும், உரிமையும் இருந்தும், நிரந்தர வேலை இல்லை. பைத்தியமான பொண்டாட்டி. பெற்றோர் கூட பிறந்த தம்பி, சப்போர்ட் இல்லாதது.

இன்னொருவனாக இருந்தால், இந்நேரம் தற்கொலை, செய்து கொண்டு இருப்பான்.

அவன் மேல் இரக்கம், எனக்கு தானாக பிறந்தது. இவனை மனிதனாக ஆக்க வேண்டும்.

இவன் இப்படி மாறிய காரணம் எனக்கு புரிந்தது.

அனாடமிபற்றி, தெரிந்ததால் இதற்கெல்லாம் காரணம் மூளையின் ‘அமிக்டலா’ தான் முக்கிய

காரணம் என்று தெரிந்து கொண்டேன்.

என் ஆர்டர்லி டிகிரி முடித்தவர். “அமிக்ட்லா என்றால் என்ன சார்? கொஞ்சம் விளக்கமாக சொல்லுங்க சார்”.என்றார்.

பொறுமைசாலி மனிதன்கூட, யோசிக்காமல் கோபம், சண்டை செய்துவிடுகிறான். அதற்கு என்ன காரணம்? உடனடி எதிர்மறை எண்ணங்கள், மற்றும் கோபத்தை, வெளிப்படுத்தும் தான் செய்வது சரியா? தவறா? என்று முடிவெடுக்க முடியாத செயல். அது; மூளையின் இரு பக்கமும் பாதாம் பருப்பு அளவே. உள்ள, ஓர் உறுப்பு இதற்கெல்லாம் காரணம்.

நமது மூளையின் ‘அமிக்டலா’ (amygdala) என்ற பகுதியும், அங்கு ஏற்படும் மாற்றங்களும்தான் என்கிறது மருத்துவ அறிவியல். உண்மையில், எமோஷனல் ஹை-ஜாக் என்பதை புத்தகத்தில், ‘அமிக்டலா ஹைஜாக்’ என்றே குறிப்பிடும் டேனியல் கோல்மேன் என்ற மனவியல் நிபுணர்

அமிக்ட்லாவுக்கும் உணர்வுகளுக்கும் உள்ள தொடர்பை ஆராய்ந்து சொன்னவர்.

நல்லா இருக்கும் நாமே, சில சமயங்களில், கோபம் வெறுப்பு காண்பிக்கும் போது, ஆறுமுகம் பாதிக்க பட்டவன்.

அவனுக்கு அறிவியல் ரீதியாக, மனோதத்துவ சிகிச்சை. தொடர வேண்டும் என்று முடிவுக்கு வந்தேன்.

எம்.எஸ் உதயமூர்த்தியின் “தன்னம்பிக்கை யும் உயர் தரும் நெறி முறைகளும்” என்ற புத்தகத்தை கொடுத்து, “படித்து விட்டு வா” என்றேன்.

“எனக்கு புக் படிபதில் ஆர்வம் இல்லை சார்.”

“ஒரு நாளைக்கு ஒரு பக்கம் படி உன்னால் முடியும்”

கொஞ்சம் அவன் இறுக்கமான சூழ் நிலையை மாற்ற நினைத்தேன்.

“நீ சினிமா பார்பதுண்டா?”

மௌனமாக இருந்தான்.

“சொல்லு ஆறுமுகம். நீ நின்றது போதும்”

" உன்னை சக மனிதனாக நினைக்கிறேன். மரியாதை மனதுள், இருந்தால்போதும். நீ என்னை பொறுத்து, வெளி ஆள்.இந்த சேர்ல ஒக்காரு"

தயங்கியபடி, சேரை முழுவதும் ஆக்கிரமிப்பு செய்யாமல், சீட்டின் நுனியில், உடகார்ந்து கொண்டான்.

“நான் கேட்ட கேள்விக்கு நீ பதில் சொல்லவில்லையே?”

“சார் கமல் படம் உசிறு சார்”

“அப்படி போடு அருவாளே”

“உன்னால் முடியும் தம்பி படம் பார்த்த தானே?”

“வெள்ளந்தியா ஆமாம் சார் வள்ளுவர் தியட்ட்ர்ல பத்து தடவை பார்த்தேன்”.

“இப்ப இரண்டு நாளைக்கு முன்னாடி இரண்டாவது ரிலீஸ் ஓம் ஷண்முகா டாக்கீசில் பார்த்தேன்.”

“புஞ்சை உண்டு நஞ்சை உண்டு பொங்கி வரும் கங்கை உண்டு”பாட்டு புலமைபித்தன் அருமையா எழுதி இருப்பார் சார்."

இவனுக்குள் ரசனை இருக்கிறது, முழு பாட்டையும் பாடுவான் போல் இருந்தான்.

படத்தோட மைய கருத்து என்ன"?

“உன்னால் எதையும் சாதிக்க முடியும் ன்னு சொல்ற கருத்து சார்”

“குட் இவ்வளவு அழகா பேசற”

“நீ அந்த படத்தில், உன்னால் முடியும் தம்பின்னு, ஒரு பாட்டில், குடியை பத்தி கமல் சொல்லி இருப்பார், அதை நீ கவனிக்கலயா?”

என் கேள்விக்கு அவனால் பதில்சொல்லமுடியவில்லை..

தலையை தொங்க போட்டான். அவன் குற்ற உணர்ச்சி, மேலே பேச முடியவில்லை. விசும்பல் தெரிந்தது

“சரி சரி விடு”

“கோபத்தை அடக்குவது எப்படி ?” என்று தமிழ்வாணன் எழுதிய புக் அவனுக்கு கொடுத்தேன்.

“யோகா கிளாஸ். போறீயா?”

தலையை ஆட்டினான்.

"திருச்சியில் எனக்கு தெரிந்த மனநல மருத்துவரிடம், நீயும் உன் மனைவியும் போங்க.

நீ செலவு செய்ய வேண்டாம் அவர் பிரீயாக சிகிச்சை கொடுப்பார்."

“நான் சொன்னதை எல்லாம் செய்து விட்டு, ஒரு வாரம் கழிச்சு வா. திருச்சி போனதும், எனக்கு போன் செய். டாக்டர்கிட்டபேசறேன்”

“ரொம்ப தாங்க்ஸ் சார்”

ஒரு வாரம் லீவு எடுத்து கொண்டு, மனைவியை, நான்சொன்ன, கிளினிக்கில், சிகிச்சைக்கு இருவரும் கிளம்பி போனார்கள்.

ஒரு வாரம் கழித்து, திரும்பி வந்ததும், நான் ஆபீஸ் இன்ஸ்பெக்ஷன் எடுக்கும் ஊர், எல்லாவற்றுக்கும், ஆர்டர்லி உடன், அவனையும் அழைத்து போனேன்

சந்தர்ப்பம் கிடைக்கும் போது, தன்னம்பிக்கை வளர்ப்பது பற்றி, உதயமுர்த்தி சொல்லியிருந்தை பற்றி, ஞாபக படுத்தினேன்.

மறு வாரம், அவனை, ஹெட் போஸ்டாப்பிஸ்க்கு, வர சொல்லிவிட்டு, நானும் அங்கு சென்றேன்.

ஆர்டர்லியை கூப்பிட்டு, காந்தி படத்தை எடுக்க சொன்னேன்.

“இத பாரு ஆறுமுகம் நீ சொன்ன விஷயம் எல்லாம் நியாயமான ஒன்று தான்”

“உன்னை ஏமாறியவர்களுக்கு, ஏதோ ஒரு விதத்தில் தண்டனை கிடைக்கும்.”

“அவை எல்லாவற்றையும் மறக்க முயற்சி செய்.”

“இப்ப நீ ஒரு மனுஷனா வாழனும்ன்னு, நினைச்சா, கடவுள் படம் எதுவும் வேண்டாம், காந்தி படம் மீது சத்தியம் பண்ணு”.

“ஒரு மாசம் உன்னை கண்காணிப்பேன். நீ குடிக்காமல், உன் முகத்தில் ஒரு தெளிவு வந்தால் மட்டுமே, நீ பெர்மனன்ட் ஆக்க படுவாய்.”

மற்றவர்கள் எல்லாம் இது விஷ பரீட்சை என்று என்னை எச்சரித்தார்கள்.

"அவன் மேல் எனக்கு நம்பிக்கை இருக்கு.

என் நம்பிக்கை பொய்க்காது. என்றேன்"

அவன் மூன்று முறை, காந்தியின் படத்தின் மீது சத்தியம் செய்தான்.

ஒரு மாதம் கழித்து பார்த்தபோது, முன்பை விட தெளிவு, சுறுசுறுப்பு கண்டேன்.

அவன் பணி நியமன உத்தரவு கடிதத்தை கொடுத்தேன்.முகத்தில் சந்தோச ரேகைகள்.

"சார் இதுக்கு முன்னாடி இருந்தவங்க, என்னை புழுவாக நினைச்சங்கா!

ஆனா, நீங்க சார் தான், என்னை நல்லா புரிஞ்சு.புக் படிக்க சொல்லி

என்னை மனுஷனா ஆக்கி இருக்கீங்க!! "

அவன் கண்களில் அனிச்சையாக கண்ணீர்.

அவனுக்கு எவ்வளவோ சந்தர்ப்பம் கிடைத்தும், குடிக்காமல் இருக்கிறான், என்வார்தைக்கும் சத்தியத்துக்காகவும்.

..

இனி எப்போதும் அவன் குடிக்கமாட்டான். எனக்கும், மனதில் திருப்தி ஒரு குடிகாரனை திருத்தி நல்வழி படுத்தியதற்கு..

பின்குறிப்பு. Pl refer google

‘அமிக்டலா’ (amygdala)பற்றி

ஒவ்வொருவாரின் மூளைக்குள்ளே ஓர் ஓரத்தில் அடியில் இருக்கும் ஒரு தக்கினியூண்டு சதைக்கட்டு, மூளையின் இரண்டு பக்கமும், பக்கவாட்டுப்

பகுதியில் பாதுகாப்பாக புதைக்கப்பட்டுள்ள சிறிய சைஸ் பாதாம்பருப்பு அளவே உள்ள ஓர் உறுப்பு. பாதாம்பருப்பில் கிரேக்கப் பெயர் - அமிக்டலா. 'ஜோசப் லே டவுக்ஸ்' என்ற நரம்பியல் நிபுணர்தான் முதன்முதலில் அமிக்டலாவுக்கும், உணர்வுகளுக்கும் உள்ள தொடர்பை ஆராய்ந்து சொன்னவர்.

# சாரங்கனும் சலூன் சுப்ரமணியனும்

கண்ணாடியில், என் அழகைப் பார்த்தபோது, “சே சே” நான் என்ன மன்மதனா? என்ற எண்ணம் தோன்றியது.

என் முகத்தையும், தலை முடியையும், பார்த்த போதுக் குறைக்க வேண்டும், என்று மனதில் பட்டது. கிருதா வேறு, அரை அங்குலம் வளர்ந்து இருந்தது. நல்ல வேளை, அம்மா கண்ணாடி போடவில்லை;

போட்டுருந்தால், அதுக்கும் திட்டு விழும். நெற்றிச் சுருக்கங்களை, கொஞ்சம் மயிர் வந்து, மறைத்தால் போதும், அம்மாவுக்கு பிடிக்காது.

“ஏண்டா தடியா !காடு மாதிரி முடி வளர்ந்திருக்கு!! தலையை வெட்டிண்டு வாடா” ஒரு வாரமா சொல்றேன் காதிலே போட்டுக்க மாட்டேங்கிறே? அப்படி என்ன குடி முழுகி போகிற வேலை அய்யாவுக்கு?"

கிண்டலுடன், கோபமும் வார்த்தையில் தெறித்தது அம்மாவிடமிருந்து.

“முடி திருத்திட்டு வாடா” என்கிற வார்த்தை, அம்மா அகராதியில், தலையை வெட்டிட்டு வாடான்னு அர்த்தம் ன்னு" புரிய ரொம்ப நாள் ஆச்சு.

அம்மா ஆயிரம் தலை வாங்கிய அபூர்வ

சிந்தாமணி படத்தை நிறைய தடவை பார்த்ததன் பாதிப்போ என்னவோ?

அம்மா என்னை, கோபமாக திட்டும் போது, அப்படித்தான் திட்டுவார். ஆனால் என் உண்மையான பெயர் சாரங்கன்.

“வேறே எந்த கடைக்கும் போகாதே? வழக்கமா காந்தி ரோட்டில் இருக்கும் சுப்பிரமணி கடைக்கு போ”.

1968களில், மன்னார்குடியில் நிறைய சலூன் கடைகள் கிடையாது.

முதல் தெரு, இரண்டாம் தெரு வாசிகள் எல்லாம், சுப்பிரமணி கடையில் தான் முடி வெட்டி கொள்ளும் பழக்கம்.

பெரியவர்கள் வந்தால் “வாங்க சாமின்னு” அன்புடன் கூப்பிடும் விதம்,

அடக்கம், அவருள் இயற்கையாகவே இருந்த காரணமே, அவரை நிறைய பேருக்கு, பிடிக்கும்படி செய்தது.

கட்டிங் சேவிங், செய்து கொண்டு இருக்கும் போதே. “ஏன் சாமி ஒங்க மூத்த பையன் இப்ப டெல்லி தானே?. பாப்பா பெங்களூரில் கட்டி கொடுத்தீங்களே! சௌரிய மா இருக்கா?”

இப்படி வரும் கஸ்டமர் எல்லாம்ரகிட்டயும், பேமிலி மெம்பர் மாதிரி, விசாரிக்கும் நல்ல பண்பே, அவருக்கு நிறையவாடிக்கையாளர் களை, கொடுத்துருந்தது. அதனால் தான், அம்மா அப்படி சொல்லி இருந்தார்.

பக்கத்தில் நின்று இருந்த, என் தம்பியை காமிச்சு, அவனுக்கும் தானே காடு மாதிரி, வளர்ந்து இருக்கு,

அவனையும் வர சொல்லு, என்று அம்மாவிடம் வாதிட்டேன்..

எனக்கும், அவனுக்கும் இரண்டு வயசு தான் வித்தியாசம்.

நான் 9ம் வகுப்பிலிருந்து 10 ம் வகுப்பு போகிறேன். அவன் 7ம் வகுப்பிலுருந்து 8 ம் வகுப்பு. எல்லோரும் நேஷனல் ஹை ஸ்கூல் தான்.

அம்மா யார் மீதும் “ஆஹா ஓஹோன்னு” பாசம் கிடையாது. எலோரிடமும் ஒரே மாதிரி தான்.

“யான் பெற்ற துன்பம் அவனும் பெறட்டும்” என்கிற எண்ணம் அவன் மேல் தலை தூக்கிற்று.. அதற்கு காரணம் இல்லாமல் இல்லை. ஶ்ரீராம் தியேட்டரில், “பூவும் பொட்டும்” படம் இரண்டு பேரும் ஸ்கூல் கட் அடிச்சு, விட்டு தான் மேட்னி பார்த்தோம்.

ஆனால் அவன், தான் யோக்கியன் மாதிரி, நான் மட்டும் க ட் அடித்து, படம் பார்த்த விஷயத்தை, போட்டு கொடுத்தான் அம்மாவிடம்.

அம்மா, முதலில் அதை நம்பவில்லை. “நுணலும் தன் வாயால் கெடும்” என்பார்களே, அது போல எப்போதும், எந்த சினிமா போயிட்டு வந்தாலும், நாள் முழுவதும், அந்த படத்தின் ஏதாவது ஒரு" பாட்டை மூணு முனுக்கும் கெட்ட பழக்கம் எனக்கு. அன்னிக்கும் அது மாதிரி “நாதஸ்வர ஓசையில தேவன் வந்து பாடுகின்றான்” என்று அருமையான பாட்டை அடிக்கடி மூணு முனுத்தத்தை கண்டு பிடுச்ச, என் கூட பொறந்த அக்கா, “எம காதகி” . “ஶ்ரீராம் சொன்னது, கரெக்ட் தான் அம்மா” என்றாள்.

கூடவேதுணி தோய்க்கும் போது, என்சட்டையிலுருந்து, இரண்டு சினிமா டிக்கெட்டையும், அம்மாவிடம் காமிச்சு, நான் அவனுடன் கட் அடிச்சு, சினிமா பார்த்தது நிஜம்

என்று, அம்மாவை நம்ப வைத்து விட்டாள். வேறு வழியில்லை ஒத்து கொண்டேன்.

அம்மா அடிக்கவில்லை ஆனால் திட்டு நிறைய வாங்கினேன்.

“அண்ணன் என்னடா தம்பி என்னடா! கோபம் கொள்வதில் அர்த்தம் என்னடா?”ன்னு என்னை பார்த்து, பாட்டு பாடிவிட்டு கிரிக்கெட் விளையாட கிளம்பிட்டான் என் தம்பி ஸ்ரீராம்.

ஆனாலும், எட்டப்பன் என் தம்பியை, எப்படியாவது, பழி வாங்க வேண்டும், என்ற எண்ணமும். அதற்கான திட்டமும் உருவானது.

“ஒரே வெயிலா இருக்கே, சரி நாளைக்குப் போலாம். ஒரே தலைவலியா இருக்கே, சரி நாளைக்குப் போலாம். ஐயோ! பக்கத்து வீட்டு பூனை செத்துப்போச்சே, சரி நாளைக்குப் போகலாம்”. இப்படியே ஒரு வார காலம், சாக்கு போக்கு சொல்லி ஓடிபோனாலும், எப்படியாவது தம்பியை கட்டாயம், அழைத்து போகணும் என்ற முடிவில், சற்றும் மனம் தளராத, விக்ரமாதித்தன் வேதாளம் மாதிரி இருந்தேன்.

நமக்கும் ஒரு ‘மூட்’ வந்து, ‘சரி இன்னைக்கு கண்டிப்பா போறோம்’ என்று முடிவெடுத்து, அழுக்கு சட்டை ஒன்றை மாட்டிக்கொண்டு கிளம்பும்போது, ‘டேய்… வெள்ளிக்கிழமை முடி வெட்டக்கூடாது. உள்ளே போ…’ என பிரேக் போடடார் அம்மா.

சரி! மறு நாள் சனிக்கிழமை காலை ஏழு மணிக்கே, சலூன் கடைக்கு ஆஜர் ஆகிவிடுவோம் ஸ்ரீராமையும் அழைத்து போகலாம்; “ஸ்ரீராமையும் வர சொல்லும்மா” என்று கேட்டு ஒரு வேளை, அம்மா ஓ.கே சொன்னால், என் சபதம் நிறைவேறும் என்று ஆசைப்பட்டேன்.

தம்பியின் அழகான கர்லிங்க் முடி ஓட்ட வெட்டப்பட்டு, கிட்ட தட்ட பாதி மொட்டை மாதிரி இருந்தது பார்த்து விட்டு நக்கலாக அவனிடம் “நினைத்ததை முடிப்பவன் நான் நான்” என்று பாட்டு வேறு பாட ஆரம்பித்தேன்.

"டேய் தடியா! என்ன யோசனை? பகல் கனவா சே எல்லாம் கனவா? நான் தம்பியை பழி வாங்க முடிய வில்லையே?

அண்ணனும் தம்பியும், ஒரே நாளில் தலை வெட்டிக்க கூடாது, சாரி முடி வெட்டிக்க கூடாதுன்னு சாஸ்திரம் சம்பரதாயம்ன்னு சொல்லி, அவனை வர விடாமல் தடுத்து விட்டார் அம்மா. என் கனவும் பியூஸ் போன பல்பு மாதிரி ஆயிடுச்சு.

"என்னடா அநியாயமா இருக்கு, தெரு கிரிக்கெட் மாட்சில் தான், அண்ணனும், தம்பியும் ஒரே டிமில் இருக்க கூடாதுன்னு, தெரு கேப்டன் குண்டு கோபாலு சொல்லுவான்.

ஓப்பனிங் பேட்ஸ்மேனா இறங்கிய என்னை, 5 வது ஓவரில் குண்டு கோபாலிடம் தான், ரகசிய ஆலோசனை நடத்தி, ஆப் பிரேக் ஸ்பின் பவுலிங் மூலம் ஸ்டும்பபை தகர்த்து விடுவான் என் தம்பி. அதில் அவனுக்கு ஒரு சந்தோசம்.

இவ்வளவு வருஷம் விளையாடி, அவன் பௌலிங்கை, சரியா கணிக்காமல் கிளீன் பவுல்ட் ஆனது வெட்கக்கேடு தான். எனக்கு.

இந்தியா டீமிக்கு பிஷன் சிங் பெடின்னா, மன்னார்குடிக்கு ஸ்ரீராம் இன்னொரு பிரசன்னா இன்னொரு பெடி என மத்த தெரு பசங்களும், இவனைகொண்டாடுவாங்க..

கிரிக்கெட்ல தான் ஒண்ணு சேரக்கூடாதுன்னு, குண்டு கோபால் எழுதாத சட்டம் போட்டான்னு

சொன்னா, அம்மாவும் ஒரு புது சட்டம் போட்டு வைக்கிறாளே? என்று அம்மாவை சபித்தேன்.

சனியும் போச்சு. அவன் வருவதாக இல்லை.இனி அவன் எக்கேடு கெட்டு போகட்டும்ன்னு தோல்வியை ஒப்பு கொண்டு, " சட்டி சுட்டதடா கையை விட்டதடா" என்று மனதுக்குள் பாடி விட்டு

நான் பேசாமல் இருந்தேன்.

ஆறு மணிக்கே, அம்மா எழுப்பி, இன்னிக்கு “நீ தலை வெட்டிண்டு வரலே ஒனக்கு மத்தியானம் சாப்பாடு கிடையாதுன்னு” கண்டித்தாள்.

“ஐயோ அம்மா இன்னிக்கு மேட்ச் 10 மணிக்கு இருக்குமா; நான் அடுத்த வாரம் போறேம்மா”. கெஞ்சி பார்த்தும் ஒன்னும் முடியலே.

எப்படியாவது என்னை சலூன்க்கு அனுப்பினால் வர லேட்டாகும். நெட் ப்ராக்டிசுக்கு நான் வர முடியாதுன்னு நினைச்சு, “நல்லவன் எனக்கு நானே நல்லவன் சொல்லிலும் செயலிலும் நல்லவன்”படித்தால் மட்டும் போதுமா சிவாஜி மாதிரி ஆக்ஷன் கொடுத்தான் ஸ்ரீராம்.

ஒட்டு மொத்த குடும்ப உறுப்பினர்கள், எல்லோரும் என்னை சலூனுக்கு அனுப்புவதில், குறியா இருந்தார்கள்.

“வாங்க தம்பி அப்பா அம்மா அக்கா தம்பி சௌக்கியமா?”

மணி வரவேற்ற விதமே, எனக்கு ராஜ மரியாதை, கொடுத்த மாதிரி இருந்தது.

ஏழு மணிக்கே, போனாலும், எனக்கு முன்பு, அங்கு ஏழு பேர் வெயிட்டிங் லிஸ்ட்டில் இருந்தார்கள்.

இரண்டு மாதத்துக்கு ஒரு முறைக்கு அங்கு

நடக்கும் களேபரங்களை பாத்திருக்கேன். வேடிக்கையாக இருக்கும்.

எப்படியும் ஒரு மணி நேரம், அங்கே காத்திருக்க வேண்டியதிருக்கும் என்று தோன்றியது. எப்படியும் 8 மணிக்குள், என் காரியம் முடிந்தால், நான் நெட் பிராக்டிஸ்க்கு போயிடலாம்.

மூலையில் இருந்த, ஒரு நாற்காலியின் மேல், சில செய்திப் பத்திரிக்கைகளும், அதன் மேல் வார இதழ்களும் இருந்தன. அவற்றை எடுத்து, ஓர் ஓரமாக வைத்து விட்டு, நாற்காலியில்- உட்கார்ந்தேன்.

அது இலேசாக ஆடியது.

எல்லா சலூன்களிலும் இருப்பது போல, அங்கு மேலாக இருந்த வாரப் பத்திரிக்கையில், ஓர் இளம் பெண்ணின் கவர்ச்சிப் படமும், அதற்கு விளக்கமும் தருவது போல, மகா கவர்ச்சியான தலைப்பும் இருந்தது.. அதை எடுத்துப் படிக்க ஆசையாக இருந்தாலும், அங்கே எல்லோர் முன்பு, அதை வாசிக்க வெட்கமும், பயமும் இருந்தது.

சலூனைச் சுற்றி கண்களை சுழல விட்டேன்; மணியின் ஒரு தம்பி, ஐம்பது வயதானவருக்கு, நரைமுடிக்குக் கறுப்புச் சாயம் போட்டு, அவரை இருபது வயது ஹீரோவாக, மாற்றிக் கொண்டிருந்தார்.

வேலை முடிந்ததும், அவரும் அதே கண்கள் ஹீரோ மாதிரி “லவ் லவ் எத்தனை அழகு இருபது வயதனிலே” பாட்டை மூணு முணுத்தார்.

எனக்குப் பக்கத்திலிருந்தவர் சின்னதாடியும், முள்ளம் பன்றி மாதிரியான முடியலங்காரமும், வைத்திருந்தார். நிச்சயம் அவர் நம்மூர் இல்லை; என்பது மட்டும் தெரிந்தது.

மணியும் அவரை வித்தியாசமா பார்த்தார். இவர் காரியம் முடிய, எப்படியும் அரை மணி நேரமாகும். அவருக்குப் பக்கத்திலிருந்த பையனுக்கு ஓர் அரை மணி நேரம்.

இந்த நேரம் பார்த்து, நடக்க முடியாத அப்பாவை ரிக்சாவில் ஏற்றிக்கொண்டு வந்த இன்னொருவர், ‘அப்பாவுக்கு ஃபுல் ஷேவ் பண்ணிடுங்க...முடிஞ்சா முடியே திரும்ப மொளைக்காத மாதிரி, மொட்ட அடிச்சு விட்டுடுங்க...’ என்று சலிப்புடன் சொல்லிவிட்டு, அங்கிருக்கும் வார இதழ் ஒன்றைப் புரட்ட ஆரம்பித்தார். அது பழைய வாரஇதழ் எனத் தெரிந்தும்.

மொத்தம் ஒரு மணி நேரம். என் கணக்கு சரிதான். அதற்கு அப்புறம்தான், என் முறை வரும். எனக்குப் பின்னாலேயே இரண்டு பேர் வந்துவிட்டனர். ஏற்கனவே உட்கார்ந்து கொண்டிருந்தவர்களை, நகரச் சொல்லிவிட்டு, அவர்களும் நெருக்கி உட்கார்ந்து கொண்டனர்.

எனக்கு மட்டுமல்ல அங்கு இருக்கும் எல்லோருக்கும், ஒரே ஆறுதல், சிலோன் ரேடியோ தான். பி.ஹெச் அப்துல் ஹமீத், மயில்வாஹனம், கே. எஸ்.ராஜா. ராஜேஸ்வரி சண்முகம் வர்னணையில், பலமுறை கேட்டு சலித்துப்போன, அதே பாடல், ஆனால் நிகழ்ச்சி தொகுப்பாளர் கொடுக்கும் சுவாரசியமான தகவல், அன்று ஏனோ புதிதாக தெரியும்.கோடிக்கணக்கான ரசிகர்களில் நானும் ஒருவன்

ரகசிய போலீஸ் 115 படத்தில் அழகான பாட்ட “கண்ணே கனியே” பாடல்.ராஜேஸ்வரி சண்முகம் அந்த பாட்டு பற்றி விபரமாக, விளக்கம் கொடுக்கவே, நான் பாடலினுள் ஐக்கியமாகி, காலையிலேயே கற்பனைகளில் மூழ்கிப்போனேன். என்னை எம்.ஜி ஆர் ஆக நினைத்து கொண்டு ஜெயலலிதாவுடன்

டுயட் பாட ஆரம்பித்தேன்.

சற்று நேரத்தில் உண்மையில் நாம் முடி வெட்ட தான் வந்தோமா? என்ற எண்ணம் ஏற்பட் டது..

‘என் செல்லம்ல... ஒழுங்கா காமிச்சா, அப்பா உனக்கு சாக்லேட் வாங்கித் தருவேன் சரியா...’ என கெஞ்சிக்கொண்டிருந்த சந்திரமௌலி யை பார்த்தேன். பாவமாக இருந்தது. அவன் எங்க தெரு சீனியர் பிளேயர். இப்போ, மெண்டர், பௌலிங், பேட்டிங் கோச். எல்லாமே பத்து பைசா காசு வாங்காமால் ?

“என் பாப்பாவுக்கு சூப்பர் பாப் வெட்டுங்க.”

இது மாதிரி வேலையெல்லாம், அவர் பையன் சோமு தான் செய்வார்.

“என்ன சாரங்கா? இன்னிக்கு நம்ம தெருவுக்கும், மூன்றாம் தெருவுக்கும், பைனல் மேட்ச்.”நீ பிராக்டிசிக்கு போகலயா?"

நான் இன்னும் அரை மணியில் கிளம்பிடுவேன்.

நீ வரலின்னு வைச்சுக்கோ “நோ சான்ஸ் ஒன் தம்பி ஸ்ரீராம் தான். என்ன பிரில்லியன்ட் ஆப் பிரேக் பௌலர்.”

என் எதிரியை, எனக்கு நேரில் பாராட்டி பேசியது. “எரிகிற கொள்ளியில் எண்ணெய் ஊத்தின மாதிரி” இருந்தது.

வேறு யாராவது, இருந்தா சண்டைக்கு போயிருப்பேன்.

சீனியர் கோச். வேறு வழியில்லாமல் “ஆமாம் ஆமாம்” என்று தலையாட்டி னேன்.

வருடா வருடம், லீக் மேட்ச் எல்லாம் ஜெயிச்சு

கடைசியில், பைனல் என்னவோ, மேல இரண்டாம் தெரு வெ ர்சஸ் கீழ மூன்றாம் தெரு தான்.

10 வருஷமா. இந்தியா பாகிஸ்தான் மேட்ச் மாதிரி, அவ்வளவு விறு விறுவிறுப்பு.எப்போதும் மூன்றாம் தெரு பசங்க தோத்து கிட்டே இருப்பாங்க.

சற்று நேரத்திற்கு முன்புதான், ஷேவிங் செய்துவிட்டுப் போன நடுத்தர வயது ஆசாமி ஒருவர், திரும்ப ஓடி வந்து. அசட்டு சிரிப்புடன், ‘தம்பி...இங்க பாரு. இந்த முடிய நீ கவனிக்கல’ என்று தலையைத் திருப்பி தாடையைக் காண்பிக்க, மணியின் இன்னொரு தம்பி, குத்துமதிப்பாக எதையோ ஒன்றை பார்த்துவிட்டு, ‘அட ஆமா சார்’ என்றார்.

பின்பு, கூரான கத்தியை வைத்து அந்த இடத்தை ஒரு இழு இழுக்க, சிவப்பு நிறத்தில் மெல்லிய ஒரு கோடு ஒன்று அங்கு விழுந்திருக்கும். வலியை வெளியே காட்டாமல், ’ நான் வரேன் தம்பி...ரொம்ப தேங்க்ஸ்!’ என்று சொல்லிவிட்டு அங்கிருந்து போனார்..

அப்போது, மணி காதில் கேட்கும்படி " ‘உச்ச்ச்.....’ என்று சொன்னதும். உடனே அவர், ஒரு ஃபைவ் மினிட்ஸ் பொறுங்க தம்பி! ; ஞாயிற்றுக்கிழமை தானே தம்பி கொஞ்சம் பொறு தம்பி".

“எனக்கு 10 மணிக்கு, இரண்டாம் தெரு வெர்சஸ் மூணாம் தெரு கிரிக்கெட்மேட்ச் பைனல், கிரௌண்டில் 9 மணிக்கே இருக்கணும். நான் போகாவிட்டால், எனக்கு முன்னாடி, என் தம்பி ரெடியா இருப்பான். நான் வரமாட்டேன்னு சொல்லி அவனை டீமில் சேர்த் துடுவாங்க. அதை முறியடிக்கணும் மணி சார்.”

ஆனால் மணி நான் சொன்னத காதில் வாங்கிக்கொள்ளவே இல்லை.

“மணி சார் மணி ஆயிடுச்சு.”

பல ஃபை மினிட்ஸ் கடந்த பிறகு ஒரு வழியாக, ‘அடுத்தது நாம தான்’ என எழுந்தபோது, முறுக்கு மீசையுடன், ஒருவர் என்னை தடுத்து, ‘தம்பி உனக்கு முன்னாடியே நான் வந்து துண்டு போட்டுட்டேன் பாரு’.

இனியும் பொறுக்கமுடியாமல், “‘மணி, சார் நான் இன்னொரு நாள் வந்து வெட்டிக்கறேன்’” என்று சொல்லிவிட்டு அங்கிருந்து கிளம்பும்போது, ’தம்பி. ..கொஞ்சம் நில்லுங்க.

அவருக்கு ஒரு நிமிஷம் முன்னையே நீங்க வந்துட்டீங்க. ஸோ இந்த டர்ன் நீங்க தான்’ என்று என்னை தடுத்தார். மணி.

அந்த நொடியில், தர்மத்தை மீட்டெடுத்த நீதியரசராகவே என் கண்ணுக்கு மணி விளங்கினார்.

"சார், நீங்கள் வெளியில் டீ குடிக்க போயீடேங்க. நீங்க வர லேட்டாகும், என்பதால் இவருக்கு, முடி வெட்ட ஆரம்பித்து விட்டேன்” என்றார் மணி.

“வெட்டுங்க. போனா போவுது.” எனக்கு அவர் பிச்சை போட்ட மாதிரி இருந்தது.

“தம்பி தம்பி” வெட்டலாமா தம்பி ? என்று மணி சொன்னதும், நான் சரி என்றுசேரில் உக்கார்ந்தேன்..

எனக்கு முடி வெட்ட ஆரம்பிக்கும் முன்பு சில கேள்விகள் கேட்டார்

“கட்டிங்கா, ?மொட்டையா?”

மிஷினா, கத்தரிக்கோலா?’ ஏதோ ஒன்னு’.

‘ஃபுல் கட்டிங்கா, ஆஃப் கட்டிங்கா?’

சலூன்காரரர் சொன்னதை பார்த்து வெயிட்டிங் லிஸ்ட் ஆள் கமெண்ட் கொடுத்தார்.

“தம்பி என்ன ‘சரக்கா அடிக்க போகுது. நீ மாட்டுக்கும்’ கேள்வி கேட்டுகிட்டு இருக்கே?”

எனக்காக, ஒரு ஜீவன் சப்போர்ட் பண்ணுதே, என்று உள்ளூர மகிழ்ந்தேன்.

வரிசையாகக் கேள்விகளை அடுக்கிவிட்டு, பின்னர் ஒருவழியாக நம்மிடம் வந்து, தலையில் தண்ணீர் அடித்து, சீப்பை இரண்டு தட்டு தட்டி சீவிய பிறகு, கத்தரிகோலை தலையில் வைத்து, வேலை ஆரம்பிக்கும் சமயம், வாசலில் யாரோ இவர் பெயரை, இரண்டு மூணு தடவை கூப்பிட, “இதோ 5 நிமிடம் தம்பி வரேன்”.

5 நிமிடம் 10 நிமிடம் ஆச்சு. திரும்பி வந்து உதட்டோர சிரிப்புடன்,

“வார்டு கவுன்சிலர் தம்பி அதான் அவாய்ட் பண்ண முடியல” என்றபடியே வந்தார் மணி.

முதற்கட்டமாக, தலையின் இரண்டு பக்கங்களிலும், மிஷின் கட்டிங் போடப்பட்டு. பிறகு, முடியின் அளவுக்கேற்ப கத்தரிக்கோல் செலக்ட் செய்தார்.

கத்திரிக்கோலை, சரியாக காதின் அருகே கொண்டுவரும் நேரம், ஆடாமல், அசையாமல், நான் உட்காந்திருந்தேன். அவரும் பதிலுக்கு ஆடாமல், அசையாமல், நின்றுகொண்டிருந்தார். என்னவென்று ஓரக்கண்ணால் பார்த்தால், சிலோன் ரேடியோவில் கே.எஸ்.ராஜா திரை விமர்சனம் சொல்ல தயாரா இருந்தார்.

"வீட்டுக்கு வீடு வானொலி பெட்டி அருகில் குழுமிருக்கும் கோடிக்கணக்கான ரசிக பெருமக்கள்

அனைவருக்கும். உங்கள் கே. எஸ். ராஜாவின் அன்பு வணக்கம்.

இன்றைய திரை விமர்சனம் பணமா பாசமா? அங்கு இங்கு நகராமல். கே.எஸ்.ராஜாவை ரசித்து கொண்டுருந்தார் மணி.

நானோ காதின் அருகே இருக்கும் கத்தரிக்கோலுக்காக பயந்திருக்க, அவரோ வீட்டைவிட்டு துரத்தப்பட்ட பணமா பாசமா ஜெமினி சரோஜாதேவி மாதிரி பரிதவித்தார்.

கத்திரியை, சரியாக அவர் நம் புருவத்தில் வைக்கும் போது, ‘இவருக்கும் நமக்கும் முன் பகை ஏதும் இல்லையே...’ என்ற சந்தேகம். உருவானது

எல்லாம் முடிந்த பிறகு, முகத்திலும் கழுத்திலும் ஒட்டிக்கொண்டிருக்கும் முடிகளை, அப்புறப்படுத்திக்கொண்டே, டெட்டால்போடாம, ஒரு வெள்ளை கல்லு வெச்சு மேல நெத்தியிலுருந்து முகம் முழுவதும் தேய்ச்சார்.

அப்பப்பா என்ன ஒரு எரிச்சல் இந்த வெள்ளகல்லுக்கு என்ன பேரு ன்னு? ஒரு தடவ நான் கேட்ட போது, அவர் படிகார கல்லுன்னு சொன்னது, என் காதில் பரிகார கல்லுன்னு விழுந்தது.

அதை தேய்க்கும் சமயம், ஒரு முடி சரியாக, நம் மூக்கினுள் ஏற, பிறகென்ன? ஒரே தும்மலில் ஒட்டு மொத்த தலை மயிர்களும், கீழே கொட்டிக்கிடந்தது.

அங்கேயும் இங்கேயும் பறக்க, நல்ல வேளை கடை பையன், அதை உடனே கூட்டிவிட்டான்..

‘வரேன்ங்க’ என்று சொல்லிவிட்டு பணத்தைத் தரும் போது, திரும்பி “நீ வரவே வராதடா” என்பதைப் போல முறைத்தார் அவர்.

நொந்துபோய் வீடு வந்த என்னை பாத்து, அம்மா கேட்ட ஒரு கேள்வி அதிர்ச்சியா இருந்தது.

அம்மாவுக்கு எக்னாமிக்ஸ் பாடத்திலே, கன்சூயூமர் சர்பல்ஸ் தேரி மாதிரி, கொடுத்த காசுக்கு திருப்தி இல்லன்னா, இப்படித்தான். பேசுவாள்.

“ஏண்டா ஓட்ட வெட்டடிட்டு வரக்கூடாதா. முள்ளங்கி பத்தையா ரூபா 20 கொடுத்துருக்கேன்”

“அம்மா இனிமே மொட்டை தாம்மா. அடிக்கணும்”

குளிச்சு, பழையது சாப்பிட்டு கொண்டே, “ஸ்ரீராம் எங்கம்மா?”

“மேட்ச் விளையாட போறேன்னு சொல்லிட்டு போனான்”.

அப்படியே எழுந்தேன் ;

மணி 08:45 ஆகியிருந்தது.

அரக்க பரக்க சைக்கிளில் கிரௌண்ட்க்கு பறந்தேன்.

# பாதாளக்கரண்டி

30 வருடத்துக்கு பிறகு, சொந்த ஊர் செல்கிறேன். நான் வசித்த வீடு. எங்கள் முதலாளி முதலியார் வீடு பார்க்க தயாரானேன்

எங்கள் வீடு, நாங்கள் விற்றவர் கையலுருந்து, இன்னொரு கை மாறியிருந்தது. என்னை அறிமுக படுத்தி கொண்ட பிறகு, உள்ளே வர சொன்னார்கள்.. வீட்டை சுற்றி பார்த்துவிட்டு கிணறு பக்கம் வந்தேன்.

இந்த கிணற்றுக்கும் எனக்கும் உள்ள சம்பந்தம் நினைவுக்கு வந்தது.

சுகமான நினைவுகளை சுமந்து கொண்டு மூன்றாம் தெருவில் உள்ள முதலியார்வீட்டுக்கு சென்ற போது, ஒரு பையன் ஒரு வாளிய, அடமானமாக வைத்து பாதாளக்கரண்டியை, கேட்டு கொண்டுருந்தான்.

வீட்டுக் கொல்லைபுறத்தில் கிணற்றை பார்த்த தலைமுறையோடு இதன் பயன்பாடு இல்லாமல் போய்விட்டது..! அன்று வீட்டில் முக்கியமாக இருந்தது. இப்போ எங்கோ மூலையில் கிடக்கலாம்..! என்று நினைத்த போது பாதளக்கரண்டி யை பாரத்தும் என் நினைவுகள் பின் நோக்கி சென்றது.

எல்லோருடைய வீட்டிலும், சமையல் கட்டு; அதன் பின் புறம் தட்டு முட்டு சாமான்கள் போடப்பட்டு, ஒரு ரூம் இருக்கும்; இல்லாது போனால் ஒரு ஹால் மாதிரி

நீண்டு இருக்கும்.

அதைத் தாண்டி, கொல்லை கதவை திறந்து போனால் பின்புறம் இருக்கும். கொல்லையில். 40 அடி தள்ளி கிணறு இருக்கும்.

போகும் பாதை பெரும்பாலும், ஒத்தையடி பாதையாக தான் இருக்கும் ஒற்றையடி பாதையின் இருபுறமும் அருகம்புல், துளசி செடிகள், மற்றும் நந்தியாவட்டை பூ செடி ரோஜா.முல்லை சாமந்தி கனகாம்பரம் செம்பருத்தி செடிகள் தாண்டி தான் போக வேண்டி இருக்கும். வாசம் நுகர்வதற்காகவே அடிக்கடி கிணற்று பக்கம் போகும் சூழ்நிலை ஏற்படும்.

மழைக்காலத்தில், கிணற்றுக்கு போக கொஞ்சம் சர்க்கஸ் வேலை பண்ணவேண்டுருக்கும். ஆனால் வெயில் காலத்தில இந்த பாதையில் நடந்தால் கால்கள் சுடாது.

இப்படியொரு வீட்டுக்கொரு கிணறு என்பது, கிராமங்களில் மட்டுமல்ல எங்கள் ஊர் மன்னார்குடியில் அவ்வாறான கிணறுகள் ஒவ்வொரு வீட்டிலும்உண்டு.

ஆனால் நாங்கள் இருந்த வீட்டில் மட்டும் வாசல் முகப்பில் கிணறு.

என்ன வித்தியாசமாக இருக்கே ?என்று நினைத்தால் அது தான் நிஜம்!!!

கீழ நாலாம் தெரு, எங்கள் வீட்டுக்குள் நுழைந்தால், முதலில், வாசல்மெயின் கேட்டை திறந்து, உள்ளே பத்து அடி நீளம் அஞ்சு அடி அகலத்தில் சிமெண்ட் பிளாட் பாரம், இடது பக்கம் 150 சதுர அடியில் பூ செடிகள்.

வீட்டுஉள் கேட்டை திறந்தால், பெரிய ஹால்

அதன். இடது புறம் தான் நான் சொல்லும் கிணறு அமைந்திருந்தது.

60 அடி ஆழமுள்ள கிணற்றில், மற்ற காலங்களில், தண்ணீர் அதல பாதாளத்தில் இருக்கும். ஆனால் அக்டோபர், நவம்பர் டிசம்பர் மாதங்களில் மட்டும் கிணறு நிரம்பி வழியும். ஏதோ தொட்டியில், சொம்பை கொண்டு மொண்டு எடுத்தால், எப்படி இருக்குமோ அப்படிப்பட்ட உணர்வு எங்களுக்கு கிடைக்கும்.

அந்த மாதங்களில், நான் என் தம்பி, தங்கை மொண்டு மொண்டு குளிப்பது குற்றால நீர்விழுச்சியில் குளித்த மாதிரி ஒரு புத்துணர்வு

கொடுக்கும்.

ஒரு சொம்பு அல்லது ஒரு வாளி தண்ணீர் உடம்பில் படும் போது மட்டும் குளிர் எடுக்கும். அதன் பின் ஒரே ஜாலி தான். குடத்தையோ அல்லது வாளியையோ ஜகடையில் போட்டு இழுக்க வேண்டாம்..

“டேய் பசங்களா !! குளிர்காலத்தில் இப்படி காணாது கண்டது மாதிரி கொட்டம் அடிக்கிறீங்களே? உடம்புக்கு ஜூரம் வந்துச்சுன்னா, யாரு கவனிக்கிறது ?”

இந்த திட்டு தினமும் எங்கள் அம்மாவிடம் இருந்து விழும் ஆனா, நாங்க அதை கேர் பண்ணவே மாட்டோம்.

மற்ற கிணறுகள் மாதிரி நெல்லிக்கிளையை வெட்டி போட வேண்டிய அவசியம் இருக்காது. அது என்னவோ தண்ணீர் கல்கண்டு மாதிரி இருக்கும்.

அக்டோபர்லருந்து டிசம்பர் வரைக்கும் மட்டுமே. தண்ணீர், பக்கத்துல உள்ள செங்குளம் தண்ணீர்

மாதிரி சேப்பும் பழுப்பும் கலந்த தண்ணீர் மாதிரி இருக்கும்.. தண்ணீர் செம்மண் வாசனை கலந்து இருக்கும். கொஞ்சம் மண் கலந்து இருக்கும்.ஆனாலும் சுவை இருக்கும். மற்ற காலங்களில் கிரிஸ்டல் கிளியராக இருக்கும்.

நான் சொன்ன மாதங்களில், என் அக்கா பாத்திரங்களை அலம்பி, கிணற்று மேடையில் வைக்கும் போது, சிலநேரங்களில் கயிறு தட்டியோ, வாளி தட்டியோ, கைதவறியோ, கிணத்துக்குள் விழுந்து விடும்.

அந்த மாதிரி காலங்கள் மிகவும் சோதனை தான். அப்போதான், நாங்க மனித கரண்டி பாலுவ கூப்பிடுவோம்..

பாலு என்கிற பாலசுப்ரமணியன், கிணத்துக்குள் நான் சொன்ன மூணு மாதத்தில், ஏதாவது பொருள் கிணத்துக்குள் விழுந்து விட்டால், எடுத்து கொடுக்கும் மனிதர்.

சுற்று வட்டாரதெருக்களுக்கு மனித கரண்டி பாலு தான் ஆபத்பாந்தவர்..

வயது 40லிருந்து 45க்குள் இருக்கும். கீழ நாலாம் தெரு கடைசியில், வலது பக்கம் கோபிநாதன் குளம் போற தெருவில் அவர் வீடு.

வீட்டு வாசலில் சின்ன ஷெட் போட்டு, வெல்டிங் பட்டறை அது பிரதான தொழில்; கூடுதல் வருமானத்துக்கு இப்படி கிணத்திலே விழும் பொருளை எடுத்து கொடுப்பது. அதில் வரும் பணம். குடும்ப சிலவுக்கு.

சுற்று வட்டார தெருக்களில் உள்ள கிணறு அக்டோபர், நவம்பர், டிசம்பர் வரை தண்ணீர். நிறைய இருக்கும்

அந்த மாதங்களில். யார் வீட்டு கிணற்றுக்குள் பொருள் விழுந்து விட்டால் “கூப்பிடு பாலுவை” என்று அவரை கூப்பிடுவார்கள்.

அவருக்கும் நல்ல வருமானம் கிடைக்கும். ஆனால், உயிரை பணயம் வைத்து கிணற்றுக்குள் மூழ்கி, முழ்கி, அவர் கிணற்றில் விழுந்த பொருள்கள் எடுத்து கொடுப்பது, என்பது மிகவும் சிரமம். சாமனியப்பட்ட வேலை அல்ல.

அவ்வாறு எடுக்கும் போது, எப்போதோ போட்ட சீப்பு சோப் டப்பா, சின்ன கிண்ணம் சேர்த்து எடுத்து வருவார்.

நான் சொன்ன 3 மாதம் தவிர்த்து, மற்ற மாதங்களில், எங்கள் வீட்டில் அக்காவோ இல்லை, வேலைக்காரம்மாவோ, அலம்பி வைத்த பாத்திரம், கவனக்குறைவில் கிணற்றுக்குள் கீழ விழுந்து விட்டால், கூப்பிடு "ஆபத்பாந்தவன் வாசுவை’ என்று என்னை தான் கூப்பிட்டு எடுக்க சொல்வது வழக்கம்.

அம்மா கண்டிப்பு. யார் கவனக் குறைவாக பாத்திரம் போட்டாலும், கிணத்துக்குள் விழுந்த பாத்திரத்தை மீண்டும் எடுத்து காமிச்சத்தான், அடுத்த வேளை சாப்பாடு. அப்படி என்ன பொம்பளைக்கு கவனக் குறைவு? என்று அக்காவை திட்டுவார்.

அம்மாவின் கண்டிப்பில், கீழ விழுந்த பொருள் கிடைக்காதநிலையில், ஒரு வேளை சாப்பாடு, பல சமயங்களில் அக்காவுக்கு கட் ஆகி இருக்கிறது

அப்ப எனக்கு பாவமா இருக்கும்.

அக்காவுக்கும், எனக்கும் சண்டை வந்து என்னை திட்டும் போதெல்லாம் “இவ செஞ்ச தவறுக்கு நான் ஏன் கிணத்திலே விழுந்த பொருளை எடுத்து கொடுக்கணும்”? அப்படின்னு நினைச்சு ரொம்ப பிகு பன்னுவேன்.

என்னிடம் வந்து கெஞ்சுவாள். "ப்ளீஸ்ஸ்டா... வாசு நான் தையல் மூலமா சம்பாதித்த காசுல, ஒனக்கு சினிமா பாக்க காசு தரேண்டா... பீளிஸ்...

அம்மா ராத்திரி சாப்பாடு போட மாட்டடா!!"

இப்படி இரண்டு மூணு தடவை என்னிடம் கெஞ்சுவா.

எனக்கும் பாவமா இருக்கும். ஆனா சினிமாவுக்கு, பைசா வாங்கிய பிறகு தான், பின் பாதாளக்கரண்டி வாங்க மூணாம் தெரு முதலியார் வீட்டுக்கு ஓடுவேன்.

இதற்கு முன்னாடி பாதாளக் கரண்டி வாங்க எங்க தெரு பாலக்காடு மணி அய்யர் வீட்டிக்கு தான் போவேன். அவர் வீட்டில் மட்டும் தான் இருக்கும்.

அவர் ஹோட்டல் இரண்டாம் தெரு முனையில் இருக்கு. அவர் வீட்டில் இருந்தால் உள்ளே நுழைய முடியாது ஆஜனு பாவ உடம்பு. நாலு அண்டாவை ஒரே மூச்சில் தூக்கும் லாவகம். எப்போதும் சிடு சிடுப்பு.

மாமி சாப்தீகம். மாமி மட்டும் இருந்தா நீ போய் ஏதாவது பாத்திரம் கொண்டு வைச்சுட்டு, கரண்டியை எடுத்துண்டு போ என்பார்.

அந்த தெருவில் அவர் வீட்டில் மட்டும் பாதாளக்கரண்டி இருப்பதால், எப்போதும் ஒருவர் மாற்றி ஒருவர் வாங்கி கொண்டே இருப்பார்கள்.

"இத பாருடா அம்பி !இன்னிக்கு, சாயந்திரத்துக்குள்ள கரண்டி வந்துடனும். !!!

டிலே பண்ணினே !அடுத்த தடவை கொடுக்க மாட்டேன்னு “நச்சுன்னு சொல்லிட்டா”.

ஒரு முறை இரண்டு நாள் கழிச்சு கொண்டு போய் கொடுத்த போது “இனி நீ பாதாளக்கரண்டி

கேட்டுண்டு வராதே?". "ஒங்க அம்மாகிட்ட நான் சொன்னேன்னு சொல்லு இனி ஒங்களுக்கு பாதாளக்கரண்டி கிடையாது" கண்டிப்புடன் சொன்னதால், இனி மாமி சங்காத்தம் வேணாம்ன்னு முடிவு பண்ணி, அப்பா வேலை பார்க்கும் முதலியார் வீட்டில் பாதாளக்கரண்டி வாங்கி பொருளை எடுத்து கொடுக்கும் பழக்கம் தொடர்ந்தது.

அண்ணியும் ரொம்பவும் கறார் தான் "பாத்திரம் கொண்டு வந்துருக்கியா.? அப்படி ரேழி ஓரம் வைச்சுட்டு கரண்டியை எடுத்துண்டுபோ".

அது என்ன பழக்கமோ; மணி அய்யர் மாமியும் சரி, அண்ணியும் சரி இதே டயலாக்கை ஒவ்வொரு தடவையும் சொல்லிட்டு கொடுப்பாங்கா.

பாதாளக்கரண்டியை, கிணத்துக்குள் இறக்கி சுருட்டி, சுருட்டி, வட்ட வட்டமாக ஆட்டி கொண்டே வந்தால், நம் அதிர்ஷ்டம் 5 நிமிடத்தில் கூட கிடைக்கும்; இல்லாட்டி போனா 50 நிமிசமும் ஆகலாம்.

அப்போதெல்லாம், எமகாதாகி அக்காவை திட்டி கொண்டே இருப்பேன். கூடுதல் நேரம் ஆச்சுன்னா; டபுள் பேட்டா மாதிரி இன்னொரு சினிமாவுக்கும் காசு வாங்கிடுவேன்.

இப்படி பலமுறை நடந்துள்ளதால், ஒரே ஸ்ட்ரோக்கில் பொருள் பொருள் கிடைக்கனும்ன்னு ஒத்தை தெரு ஆனந்த் விநாயகரை வேண்டி கொள்வாள். கூட 10 தோப்பு கரணம் அல்லது உண்டியலில் காசு போடுகிறேன் என்று வேண்டுதல் ஒவ்வொரு முறையும் மாறும்.

நேர்த்தியாக நான் பாதாளக்கரண்டி கொண்டு எடுக்கும் திறமையை பார்த்த பக்கத்துவீடு, எதிர் வீடு பிறகு கூப்பிட ஆரம்பித்தார்கள். அதில் எனக்கு ஒரு

திருப்தி. கூடவே டிவியில் கிரிக்கெட் மேட்ச் பார்க்கணும்ன்னு சொன்னா, உடனடி பெர்மிஷன்.

நவம்பர் மாதம் ஒரு நாள் நான், இன்னொரு அக்கா பையன் இரண்டு வயது இருக்கும்; கிணத்துக்குள் நிறைய தண்ணீர் இருக்கும் போது மொண்டு மொண்டு விளையாட்டு காமிக்கும்போது, வெயிட் இல்லாத பிளாஸ்டிக் சோப்பு பெட்டியை, போட்டு போட்டு, விளையாட்டு காட்டிக்கொண்டுருந்தேன். எதிர்பாராமல், குழந்தையும் தன் கையிலிருந்த தங்க வளையல் கழட்டி, கிணத்துக்குள் போட்டு விட்டது..

அவ்வளவு தான், வளையல் ஒவ்வொன்றும் ஒரு பவுன் கிணத்தின் அடியில் போய் விட்டது. விஷயம் கேள்விப்பட்டதும் “குய்யோ முறயோ”ன்னு சத்தம்.

“என் மாமியாருக்கு என்ன பதில் சொல்லுவேன் ? இரண்டு வளையல் குழந்தை கிணத்துக்குள்ள போடற வரைக்கும், என்ன பண்ணிக்கிட்டு இருந்தே?”

“அய்யோ அக்கா அம்மா, நான் சொம்பு மொண்டு தண்ணீர் எடுத்த நேரத்தில் குழ்ந்தை போட்டுட்டான். கவனிக்கல; சாரிம்மா”.

“பாலு தான் எக்ஸ்பர்ட்ம்மா எப்படியும் பாலுவை கையோடு அழச்சிட்டு வரேன். அக்கா கவலைபடாதே? அம்மா, அக்காவுக்கு ஆறுதல் சொல்லும்மா”.

சைக்கிளில் பறந்தேன்.

குளிக்க போயிருந்த பாலுவை கையோடு கூட்டிகிட்டு வந்தேன்.

"ஏம்மா பதறீங்க? பாப்பா கவலை படாதே?

கைலியை அவிழ்த்தான்; ஜட்டியோடு கிணத்துக்குள் குதித்தான். இரண்டு மூணு மொங்கு

முழ்கி, கடலில் முத்து எடுப்பது போல கையில் வளையல்கள் கிடைத்தவுடன் உற்சாகமாகி, “ஆழ கடலில் தேடிய முத்து” என ஜானகி குரலில் வேறு பாட்டு பாடி இரண்டு தங்க வளையல்களுடன் மேல வந்த போது தான் அக்காவுக்கும் அம்மாவுக்கும் நிம்மதி ஆச்சு!

அம்மா உள்ளே போய் ரூபாய் 500 கொண்டு வந்து கொடுத்த போது.

“என்னம்மா இது! யார் கிட்ட காசு வாங்கணும் எனக்கு தெரியும். மக்கு சாம்பிரணியா இருந்த என் பையன், இன்னிக்கு தொடர்ச்சியா 6, 7, 8ம் வகுப்பில் முதல் ரேங்க் வாங்கிறான்னு சொன்னா, அதுக்கு காரணம் நம்ம வாசு தம்பி, சொல்லி கொடுக்கிற டியூஷன் மூலம் தான்”.

"ஏன் தம்பி ட்யூசன்க்கு பீஸ் எவ்வளவு தம்பி ? என்று கேட்டதுக்கு

“படிப்பு சொல்லி கொடுக்குறது ஒரு புண்ணிய செயல்.”அதுக்கெல்லாம் காசு கொடுக்கிறேன்னு என்கிட்ட சொல்லாதீங்கன்னு" வாசு தம்பி சொல்லிச்சு".

“வாசுக்கு அந்த மாதிரி உயர்ந்த எண்ணம் இருக்கும் போது, நான் எப்படி கூலி வாங்குவேன்?” “குழந்தையை பாருங்க அந்த சிரிப்புக்கு நான் அடிமை”. “டேய் செல்லம், இந்தா 100 ரூபாய் பணத்தை குழந்தை கையில் வச்ச கொடுத்துட்டு, வரேன் வாசு !வரேம்மா” என்று கிளம்பி போனார்.

கால சக்கரச் சூழலில் நான் காலேஜ் படிக்க திருச்சி வந்து விட்டேன். தீபாவளி லீவுக்கு, வந்த நேரம்.

அதே கிணறு இந்த தடவை நான் குளித்து கொண்டு இருந்த போது கையில் போட்டு ருந்த மோதிரம், சோப்பு போடும் போது, நழுவி

கிணற்றுக்குள் விழுந்து விட்டது. கண்ணில் சோப் பட்டு எரிச்சல். கண் திறக்க முடியவில்ல.

அய்யோ அம்மாவுக்கு பதில் சொல்லணும்?

எப்படியோ காதும் காது வைச்ச மாதிரி, பாலு வீட்டுக்கு போய் கூட்டிகிட்டு வந்து எடுத்துடலாம் என்று சைக்கிளில் கிளம்பினேன்.

பாலு பையன் மட்டும் ஷெட்டில் இருக்கவே, என்னை பார்த்ததும் அழுது கொண்டே வீட்டுக்குள் போனான்.

நானும் அவனை தொடர்ந்து போக பாலு படத்தின் முன் அழுது கொண்டு இருந்தான்

பாலு மனைவிக்கு என்னை நல்லா தெரியும்.

“எல்லோருக்கும் கிணத்துக்குள் முழ்கி மூழ்கி பொருளை எடுத்து கொடுத்த இவருக்கு தண்ணில கண்டம்ன்னு தெரியாம போச்சு வாசு”.

“என்னம்மா என்ன நடந்துச்சு?”

விசும்புல், அழுகையுடன், பாமணி ஆத்திலே, உபரி தண்ணீர்; அதோடு மழை தண்ணி சேர்ந்து கரை புரண்டு ஓடிருக்கு. கைலாச நாதர் படித்துறையில் 3 வயது குழந்தையை, படிக்கட்டில் உக்கார வைத்து குளித்து கொண்டு இருந்த பெண்மணி, கரை ஏறுவதற்குள் இது கிடு கிடுவென கீழ இறங்கிடுச்சு; சுழலில் மாட்டி இழுத்து போக. இவர் குளிக்க போனவர் உடனே குதித்து குழந்தையை காப்பத்தி கரையில் சேர்த்த அடுத்த நொடி; குழந்தையை பெற்ற அம்மா, மறுபடியும் அழ, என்னவென்று பார்த்தால் காலில் போட்டுருந்த தங்க கொலுசு கீழ விழுந்துருச்சுன்னு அழுகை.

துளி கூட தாமதிக்கமால், மீண்டும் ஆற்றில்

இறங்கி, கொலுசு தேட ஏதோ ஒரு இரண்டு ஊத்து கிணற்றில் மாட்டி சுழல் இழுத்து போய், புது தண்ணி காவு வாங்கும் சொல்ற மாதிரி, அவரை பலி வாங்கிடுத்து".

“பயர் சர்வீஸ் காரங்க வந்தும் தேடி தேடி பிரயோசனமில்லை. பிணமா தான் வந்தாரு. சேரங்குளம் ஷட்டர் கிட்ட பிணமா ஒதுக்கி இருந்துச்சு”.

நூறுக்கணக்கான கிணறுகள் இறங்கி, நிறைய பொருள்கள் எடுத்து கொடுத்த பாலுவுக்கு, கிணற்று மூலம் சாவு என்று நினைக்கும் போது கண்ணில் நீர் துளிகள். ஒரு நல்ல மனிதரை இழந்து விட்டோமே என்று.

# வி என் ஆர் சார்

அந்த தலைமை தபால் அலுவலகத்தின் , கவுண்டர் முன்பு, அந்த கஸ்டமர் வயது 60 க்கு மேல் இருக்கலாம். கேள்வி மேல் கேள்வி கேட்டுக்கொண்டுருந்தார்.

“மேடம் நான் டூப்ளிகேட் பாஸ் புக் அப்ப்ளிகேஷன் கொடுத்து இரண்டு மாசம் ஆச்சு; புக் வந்துருச்சா ? அப்புறம் எஸ்.பி அக்கவுண்ட் என் மனைவி பெயரில் உள்ளது கிளைம் அப்ளிகேஷன் கொடுத்து, 3 மாசம் ஆச்சு இன்னும் கிடைக்கல?”. “ஏன் இவ்வளவு டிலே?”

“எனக்கு தெரியாது சார் !வந்துருச்சுன்னா, நான்கொடுத்துடுவேன் சார்!”

“இதோட அஞ்சாறு வாட்டி வந்துருப்பேன். இதே பதில் தான் மாத்தி மாத்தி இந்த சீட்ல இருக்கறவங்க சொல்லிக்கிட்டு வரிங்க”

“நம்பலண்ணே பாருங்க சார்!”

வந்தவர் முன்னாடி மற்ற பாஸ் புக்குகளைக் கொட்டி காண்பித்தார் அந்த அலுவலக பெண்மணி..

“நீங்க வேணுமின்னா, உதவி போஸ்ட் மாஸ்டர் ஐ பார்த்து கேளுங்க” என்று சொல்லிவிட்டு தன் வேலையில், மூழ்க ஆரம்பித்தார் அந்த பெண்மணி.

உதவி போஸ்ட் மாஸ்டரரை பார்த்த போது

அவருக்கு அதிர்ச்சியா இருந்தது.

அங்கு இருந்தவர் உறவுக்காரர். இவனுக்கும் நமக்கும் பகை வேறு. இவன் தஞ்சாவூர்ல வேலை பார்த்தவன். இங்கே எப்படி?

எண்ண அலைகள் ஆர்பரிக்க மீண்டும் கவுண்டர் பெண்மணியிடம் விசாரித்த போது, “அவர் இந்த ஊருக்கு ட்ரான்ஸ்ப்ர் ஆகி வந்து மூன்று மாசம் ஆச்சு சார்.”

நான் நாலைந்து தடவை பார்த்த போது கவனிக்க வில்லயே?

இவனிடம் முறையிட்டு பிரயோசனம் இல்லை உள் பகையை மனதில் வைத்து பழி வாங்கினாலும் வாங்கலாம். விதண்டாவாதம் தான் பதிலாக வரும்.

“மேடம், ஒங்க மேல் அதிகாரியை இப்ப பார்க்க முடியுமா?”

“ஓ எஸ்! இப்ப தான் அவர் சேம்பர் உள்ளே போயிருக்காரு”. “நீங்க உடனே போய் பாருங்க ஒங்க க்ரிவன்ஸ் எதுன்னுசொல்லுங்க”. “கேம்ப் கிளம்பி போனாலும் போகலாம்”.“இப்படியே வெளியில் போய் முதல் மாடியில் இருப்பார் பாருங்க”.

அந்த கவுண்டர் பெண்மணி அவர் நிலைமையை பார்த்துதுரித படுத்தினார்.

அந்த கவுண்டர் பெண்மணி சொன்ன மாதிரி, முதல் மாடி போய் அவர் அறை முன்பு உள்ள போர்டை பார்த்த போது, கே.வாசுதேவன் பி.காம் பி.ஜி.எல் துணை கண்காணிப்பாளர் என்று இருந்தது.

“எக்ஸ்குயிஸ் மீ சார்”

“மே ஐ கம் இன்.”

“எஸ் பீளிஸ்”

கதவை தள்ளிக்கொண்டு உள்ளே நுழைந்தவரை பாரத்தும், அனிச்சையா நான் எழுந்து கொண்டேன்.

“சார் !சார் நீங்களா!எங்க சார் இவ்வளவு தூரம்?”

வந்தவரை சேரில் உக்கார வைத்து விட்டு, குடிக்க என் கையினால், தண்ணீர் கொடுத்துவிட்டு, நின்று கொண்டே பேசினேன்.

அவர் முகத்தை பார்த்தபோது, சோர்வாக காணப்பட்டார்.. காலையில் டிபன் சாப்டுருக்க மாட்டார் என தோன்றியது.

“சார் ஒரு நிமிஷம்”.

வெளியே வந்து, ஆர்டலியிடம், ஸ்வீட் அவருக்கு பிடித்த முறுகலான ரவா தோசை, காபி, ஆரியபவனில் வாங்கி வர சொல்லி விட்டு, மீண்டும் என் இடத்துக்கு வந்தேன்.

“சார் சொல்லுங்க சார்”.

“ஐ ஆம் வெரி ஹாப்பி வாசு. ஐ ஆம் வெரி ப்ரௌட் ஆஃப் யூ.”

“தாங்ஸ் சார். எல்லாம் நீங்க போட்ட பிச்சை சார்”.

“நீ முதலில் உக்காரு. நின்று கொண்டு பேசாதே”

“சரிங்க சார்! இப்ப சொல்லுங்க!”

மூன்று மாதம் முன்பு, தன்னுடைய பாஸ் புக் தொலைந்து விட்டதால், டூப்ளிகேட் பாஸ் புக் அப்ளை பண்ணியதாகவும், தன் மனைவி இறந்து விட்டதால், அவர் பெயரில் போட்டு இருந்த எஸ்.பி அக்கவுண்ட்ல், உள்ள பணம் திரும்ப பெறுவதற்கு, கிளைம் அப்ப்ளிகேஷன் வெரிபிகேஷன் ஆகி,

இன்னும் வராத காரணித்தினால் தனக்கு பாஸ் புக் கிடைக்கவில்லை, கிளைம் பணமும் கிடைக்க வில்லை என்றார்.

“பேப்பர் உங்க ஆஃபீஸ்லுருந்து வெரிஃகேஷன் ஆகி வரலேன்னு சொல்றங்கா?”. “நீங்க போய் நேர்ல வேண்டுமானால் கேளுங்க ன்னு, கவுண்டர்ல இருந்த மேடம் சொன்னங்கா” அதான் வந்தேன்.

அதற்குள் டிபன் வந்து விடவே சாப்பிட சொன்னேன். “ஸ்வீட் அல்வா, அவருக்கு பிடித்த ரவா தோசை பார்த்ததும், என்ன வாசு இதெல்லாம்?”

“இருக்கட்டும் சார்”

“சாப்பிடுங்க. உங்க முகம் சோர்வா இருக்கு. மணி 11 ஆகுது. இன்னும் சாப்பிடலின்னு தோணுச்சு.அதான் வாங்கிட்டு வரசொன்னேன்”.

“நான் இந்த ஊருக்கு வந்து 6 மாசம் தான் ஆகுது சார். வந்ததில்ருந்து ஒரே வேலை பளு. சார்”

வந்தவர் சாப்பிட்டு, காபி குடித்தவுடன் தெம்பாக, “ரொம்ப தாங்ஸ் வாசு”

“சார் விடுங்க இதை போய் பெரிசா சொல்லிக்கிட்டு”

“கோபால் இன்வர்ட ரிஜிஸ்டர் எடுங்க”!.

“சார் சொன்ன தேதியில், இவரோட அப்ப்ளிகேஷன் வந்து இருக்கான்னு பார்ப்போம்”. “அப்படியே பெண்டிங் பேப்பர்ஸ் எல்லாம் எடுங்க”.

அவர் சொன்ன மாதிரி, என் ஆபிஸ்க்கு, போஸ்ட் மாஸ்டர் அலுவலகத்திலிருந்து, எந்த பேப்பரும் வரவில்லை.

’கோபால், கவுண்டர்ல இருக்கிற ஏ.பி.எம் ஐ

கூப்பிட்டு வாங்க" நான் உத்திரவிட்டேன்.

அடுத்த 5 வது நிமிடம் உதவி போஸ்ட் மாஸ்டர் பாஸ்கர் உள்ளே வந்தார்.

வந்தவர் உட்கார்ந்து இருந்த நபரை பார்த்து, அதிர்ச்சியான போது, நான் கவனிக்க தவற வில்லை.

“என்ன மிஸ்டர் பாஸ்கர் ? ஒங்க கிட்ட இருந்து, எனக்கு பேப்பர்ஸ் ஒன்னும் வரலேய”!

“இல்லை சார் நான் அனுப்பிட்டேன் சார்”.

“நீங்க அனுப்பியிருந்தா, என் இன்வர்ட ரிஜிஸ்டர்ல, பதிவாகி இருக்குமே?” “பெண்டிங் பேபர்ஸ் ஒரு முறைக்கு இரண்டு தடவை பார்த்தாச்சு” என்னிக்கு அனுப்பி இருக்கீங்க? ஒங்க அவுடவேர்ட் ரிஜிஸ்டரல என் ட் ரிபோட்டு இருப்பீங்க.! கொண்டு வாங்க"

அதை எடுத்து வர அவர் கிளம்ப எழுந்த போது, “நீங்க ஒக்காருங்க பாஸ்கர்”

“கோபால் போய் அந்த ரிஜிஸ்டர் ஐ கேட்டு வாங்கிட்டு வாங்க”

“லெட் மீ செக்”

அடுத்த 10 வது நிமிடம் ரெஜிஸ்டர் ஐ பார்த்த போது, என் ஆபிசுக்கு, அனுப்பிய மாதிரி, எந்த விபரமும் காணப்படவில்லை.

“என்ன பாஸ்கர்”, வாட் ஹே பண்ட் டு கிளைம் பேப்பர்ஸ்? “வாட் ஏ சீரியஸ் இஸ்யூ ?”

“ஒரு சீனியர் வாடிக்கையாளாரை அலக்கழிச்சு இருக்கீங்க?”

“பேப்பர் இன்னும் வெரிஃகேஷன் ஆகி வரல்ன்னு,

ஒரு பொய் தகவல் வேறு சொல்லிகிட்டு இருக்கீங்க?”

“என்ன பண்ணு வீங்களோ தெரியாது! தேடி கண்டுபிடித்து இன்னும் அரை மணியில் என் டேபிளுக்கு பேப்பர் வந்தாகணும்”.

“போய் தேடி கொண்டாங்கா”!

இவ்வளவு கடுமையான உத்தரவு நான் போட்டதை பார்த்தும், வந்தவருக்கு, நம்பிக்கை கொடுத்து இருக்க வேண்டும். மனதுக்குள் சந்தோசமானதை பார்க்க நேர்ந்தது.

“தாங்ஸ் வாசு”

'“சார், இது என் கடமை”

"ஆமாம் சார்?ஒங்க மனைவி அக்கவுண்ட்ல நாமினேஷன் போட்டு இருக்கா?

யாரு நாமினி ? நீங்க தானா? இல்லை வேறு யார் பெயராவது போட்டு இருக்கா?"

கேள்வி மேல் அடுக்கினேன்.

“இல்லை வாசு நாமினேஷன் போடல”.

“என்ன சார் ஒரு அக்கவுண்ட் ஓபன் பண்ணும் போதே, யார் நாமினின்னு கேட்டு இருப்பங்காளே !”

"அவங்க சொல்லாட்டி போனாலும், படிச்ச நீங்க, ஒங்க குடும்பத்தில் உள்ள ஒங்க பெயர், அல்லது குடும்ப உறுப்பினர் பெயர் போட்டு இருக்கலாமே?

“இப்ப பாருங்க ! நாமினி பேரு போடததால், எவ்வளவு சிரமங்கள்ன்னு”?

நான் கேட்ட கேள்விக்கு அவரால் பதில் சொல்ல முடிய வில்லை.

தலையை தொங்க போட்டு கொண்டார்; நான் பேசிய பேச்சு நிச்சயம் அவருக்கு அவமானமாக இருந்துருக்க வேண்டும்.

“இதே மனிதர் தான் என் பள்ளி வாழ்க்கையில், என்னை அசிங்க படுத்தியதோடு அவமானபடுத்தியவராச்சே?”

என் நினைவலைகள் பின் நோக்கி சென்றது.

அந்த புகழ் பெற்ற பள்ளியில் பதினோராம் வகுப்பு “பி” செக்ஷன் .

மொத்தம் 56 பேர். அதில் நான்கு மாணவிகள். அரையாண்டு வரை மற்ற மாணவர்கள் மத்தியில், என்னை கொண்டாடியவர், அந்த சம்பவத்துக்கு பிறகு, என்னை வெறுப்புடன் பார்க்க ஆரம்பித்தார்..

அவர் எங்கள் தெருவில் மைய பகுதியில் உள்ள வீட்டில் குடி இருந்தார்.

நாங்கள் தெருவின் ஆரம்பத்தில் நாலாவது வீடு. யார் வந்தாலும் எங்கள் வீட்டை கடந்து போக வேண்டும்.

அன்று ஞாயிறு மதியம் 4 மணிக்கு, வேட்டியை மடித்து கட்டிக் கொண்டு, கால் சட்டை தெரியும் படி, கையில் கிரிக்கெட் பேட்டை வைத்து கொண்டு, வீட்டுக்குள் இருந்து வேகமா, வெளியே ஓடி வரவும், அவரை கடந்த அடுத்த நொடி, கையில் இருந்த பேட் கீழ விழுந்து விட, அவரை பார்த்த பயத்தில், அனிச்சையா வேட்டியை இறக்கி விட்டு, “சாரி சார்” என்றேன்.

ஆனால் அவர் காதில் வாங்காமல் என்னை கடந்து போக, மறுநாள் வகுப்பில், ஜாடை மாடையாக என் பெயர் குறிப்பிடாமல் என்ன பிரயோசனம்? ரேங்க் வாங்கியும் வாத்தியார்ன்னு, சிலருக்கு

மரியாதை துளி கூடதெரியவில்லை என்றார்.

நான், சாரி கேட்டும், அவர் மனது, என்னை மன்னிக்க வில்லை என்று, பின் வரும் வகுப்புகளில், என்னையே அவர் டார்ச்சர் செய்த போது தெரிந்தது.

ஒரு நாள் மதிய உணவு இடைவேளை முடிந்து, முதல் பீரியட் ஷேக்ஸ்பியர் “டெம்பஸ்ட்”பாடம் ரிவிஸன்.

அன்று வீட்டில், ஏதோ விசேஷ சாப்பாடு சாப்பிட்டு வந்த மயக்கம்; தூங்கி தூங்கி, பக்கத்து சீட்டில் இருக்கும் சுப்பிரமணி தோளில் விழுந்த, என்னை அவன் நிமிர்த்தி விட, இதை கவனித்த வாத்தியார், என்னை எழ சொல்லி கேள்வி கேட்டார்.

"ப்ரோஸ் பரோ யார்? என்று கேட்டதற்கு, மிரண்டாவின் மனைவி என்று தூக்க கலக்கத்தில் சொல்லிவிட வகுப்பு முழுவதும் நக்கல் சிரிப்பு. உண்மையில் ப்ரோஸ் பேரோ மிரணடாவின் தந்தை என்று சொல்லியிருக்க வேண்டும். பலமுறை அப்படித்தான் சொல்லி உள்ளேன்.

ஆனாலும் அவர் என்னை “கெட் அவுட் பிரம் தி கிளாஸ்” என்று என்னை விரட்டி விட்டது எனக்கு அவமானமாக போனது.

இப்படி, இவர் எடுக்கும் அக்கவுண்டன்சி வகுப்பில், செகரட்டரியல் கோர்ஸ் வகுப்பில், ஏதாவது ஒரு குறையை கண்டு பிடித்து வெளியில் அனுப்புவதோடு மட்டுமல்லாமல், “இவன் எல்லாம் பேசிக் நாலேட்ஜ் இல்லாமல் இருக்கான். எப்படித்தான் பாஸ் பண்ண போகிறோனோ. ?” என்று நக்கல் வேறு.

“பாருங்க உங்களை விட இந்த நாலு பொண்ணுங்க தான், முதல் நாலு ரேங்க் வாங்க போகுதுன்னு” அடிக்கடி வகுப்பில் சொல்லி கொண்டு இருந்தார்.

ஆண்டு தேர்வு பப்ளிக் எக்ஸாம்; ஹால். டிக்கெட் வாங்கிய பிறகு, அவரிடம் வாழ்த்து வாங்க போன போது, அவர் முகத்தை திருப்பி கொண்டார்.

அவர் என்னை அவமானபடுத்திய விதம், எனக்கு ஒரு படிப்பில் ஒரு வெறியையும், புத்துணர்ச்சியையும் கொடுத்தது..

எல்லா பரிட்சைகளையும் நன்றாகவே எழுதினேன்.

அவருக்கும் அந்த வருட பேட்ச் மாணவர்கள் 56 பேரும் பாஸ்.

நான் ஒருங்கிணைந்த, கீழ் தஞ்சை மாவட்டத்தில் முதல் மாணவன். பள்ளியிலும், முதல் மாணவன்; என் போட்டோ தாங்கி நின்றது. எல்லா பாடங்களிலும் 80 விழுக்காடு. கணக்கில் 100க்கு 100. 1968 களில் 80 சதவீதம் வாங்குவது மிகவும் சிரமம்.

தன் வாத்தியார் வாழ்க்கையில், முதல் முறையாக எல்லோரும் வகுப்பில் அதுவும் அந்த பள்ளியில் இவர் வகுப்பு மட்டும் “ஆல் பாஸ்” என்றதும், சக ஆசிரியர்கள். தலைமை ஆசிரியர், வகுப்பு மாணவர்கள், எல்லோருக்கும் தன் சொந்த செலவில், ஒரு தேநீர் விருந்து, ஏற்பாடு செய்து, விருந்து தினம் அன்று என்னை கூப்பிட்டு அனுப்ப நான்கு முறை ஆள் அனுப்பியும், நான் கலந்து கொள்ள வில்லை.

இதோ 36 வருடங்கள் கழித்து, வி. என் ஆர் என்று அழைக்கபடும் ராமமூர்த்தி வகுப்பு வாத்தியார் என் முன்பு.

இப்போது என்னிடம் உதவி கேட்டு அவர்! காலம் யாரையும் சும்மா விடாது.? படித்த வாத்தியார், அதுவும் செகரட்ட ரியல் கோர்ஸ் வகுப்பில் , பேங்கிங் பாடம் எடுத்தவருக்கு நாமினேஷன் பற்றிய விபரம் தெரிந்தும், அக்கவுண்ட் ஓபன் பண்ணும் போது

எப்படி கோட்டை விட்டார்?.

தவறுதல் இயற்கை தானே! என்று சமாதானம் ஆனேன்.

இதே தவறு தானே அன்று அவர் டெம்பஸ்ட் பாடம் நடத்தும் போது நான் செய்தேன்.

ஆனால் அன்று என்னை எப்படி எல்லோர் முன்னிலையில் அவமான படுத்தினார்! !

வேட்டி ய, மடித்து கட்டிய ஒரு குற்றத்துக்கு நான் அனுபவித்த அவமானம் நிறைய.

“சார் நான் போய் பாஸ்கர் சார் என்ன பண்ணிட்டு இருக்கார்ன்னு பாத்துட்டு வரேன்னு” ஆர்டர்லி கோபால் சொன்னதும். மீண்டும் சகஜ நிலைக்கு திரும்பினேன்.. .

“சாரி சார் பேப்பர்ஸ் எல்லாம், டேபிள் டிராயர் அடியில் மாட்டி கொண்டுள்ளது. கவனிக்காமல் விட்டேன் சார்”.

பாஸ்கரிடம், அவருடய தவறுக்கு, ஒரு வாக்கு மூலம் வாங்கி, அவரை அனுப்பிய பிறகு, எஸ்.பி கிளைம் அப்ப்ளிகேஷனை செக் செய்தேன்.

டெத் சேர்ட்டிபிகேட். வாரிசு சேர்ட்டிபிகேட் மற்ற விபரங்கள் சரி பார்க்கபட்டது.

ஓரிரு குறைகள் பெரிதாகவே காணப்பட்டது. இருந்தாலும். அதை பெரிது படுத்தாமல், இன்னும் ஒரு சில நாட்கள் இவரை தாமத படுத்த வேண்டாம் என்று நினைத்து, போஸ்ட்மாஸ்டர் லிமிட்டுக்குள், இருப்பு தொகையும், வட்டியும் இருப்பதால், உடனடி நடவடிக்கை எடுக்கப்பட்டது.

உடனே சான்க்ஷன் ஆர்டர் போட ஏற்பாடு துரிதமாக செயல் பட உத்திரவு இட்டேன்.

நான் சாங்சன் மெமோவின் ஒரு காப்பியை , அவரிடம் கொடுத்து, இன்னொரு காப்பியை, போஸ்ட்மாஸ்டரிடம் கொடுத்து, வட்டியுடன் சேர்த்து பெறப்பட்ட தொகைக்கான காசோலை யை, பெற்று, அவர் கையில் கொடுத்தபோது,

அனிச்சையா அவர் கண்களில் கண்ணீர்.

“36 வருடம் முன்பு நடந்த விஷயத்துக்கு, நான் மன்னிப்பு கேக்கிறேன் வாசு”

“சார் அப்படி சொல்லாதீங்க நீங்க அப்படி செய்தது ஒரு விதத்தில், எனக்கு நன்மையை தான் செய்தது”. “இல்லாட்டி போனா நான் ஸ்கூல் பஸ்ட். வர முடியுமா சார்”. அதற்கு நன்றி கடன் தான் இந்த என்னுடைய அலுவலக உதவியோ?

அவரை ஆட்டோவில் ஏற்றி வழி அனுப்பினேன்.

# மங்களூர் மாதுவும் மங்குஷ் பேட்டும்

மன்னார்குடி குண்டப்பா விஸ்வநாத்ன்னு பெயர் வாங்கிய கோச், கட்ட கோபால், இப்படி கவலையா, அதுவும் அவன்வீட்டு, இடிஞ்ச சுவரில் உக்கார்ந்து, யாரும் பார்த்தது இல்லை.

“கவலைப்படாதே சகோதரா நம்ம ஓதைத் தெரு பிள்ளையார் பாத்துபாரடா”

காதல் கோட்டை பட பாடலை சொந்த மெட்டில் பாடிக் கொண்டே வந்தான் மங்களூர் மாது.. கூடவே சீனுவும்.

MPL ல் தன் தெரு டீம் ஐ செலக்ட் செய்த, உசிலமணி சைஸ், ஏத்தகுடி எதிராஜ் ஐயங்கார், "காச் மூச்ன்னு’ கோபாலிடம், கத்தி கொண்டுருந்தார்.

“இரண்டு வருடமா, உங்களை ஏலம் எடுத்து ஜெயிக்கமாபோயிடேங்க.?இந்த தடவை ஜெயிக்கல அவ்வளவு தான்”. தன் பெருத்த உடம்பை வைச்சுண்டு, கையில் எங்க வீட்டு பிள்ளை எம்.ஜி. ஆர் மாதிரி, சாட்டையை சுழற்றின மாதிரி தன் அஞ்சு முழம் துண்டை ஒரு முறுக்கு முறுக்கி ஒரு சுத்து சுத்தினார்.. நல்லவேளை யார் மீதும் படவில்லை இதில் பாட்டு வேறு“. நான் ஆணையிடடால் நீங்க ஜெயிக்கமா போனால்!.”

கோபாலுக்கு பயம் தொற்றிக் கொண்டது.

“என்ன தான் நடக்கும் நடக்கட்டுமே. தன்னாலே வெளி வரும் தயங்காதே” என்று மாது பாடியதும் ஏத்தகுடி ஐயங்கார் க்கு இன்னும் கோபம் அதிகமானது.

மங்களூர்லிருந்து வந்த மாது, கூடவே ஒரு வித்தியாசமான பேட்டும் கையுமா, சீனு வீட்டில், ஒரு வருஷமா கொட்டம் அடிக்கும் அவன் தான்.ஆஃப் தி பீல்ட் ஆன் தி பீல்ட் எல்லாமே.!!!

மாது சீனுவோட கசின்; சும்மா பேருக்கு தான் கேப்ஸ் சீனு.

MPL ன்னா மன்னார்குடி பிரீமியர் லீக். மூணு வருஷம் முன்னாடி, ஊர்ல இருக்கிற பிக் ஷாட் எல்லாம் சேர்ந்து, இந்த MPL உருவாக்கி, .DCB கிட்ட அதாவது District Cricket Board கிட்ட ப ர்மிஷன் வாங்கி உருவானது.

ஸ்ரீனிவாசா மெடிக்கல் ஓனர், இரண்டாம் தெருவில் வசித்தாலும், அவர் தெரு பசங்களை, ஏலம் எடுக்காம, ஹரித்ரா நதி டீமை எடுத்தது.யாருக்கும் பிடிக்கல.குறிப்பா ஏத்தகுடியாருக்கு பிடிக்கல.

கட்ட கோபாலும், கேப்ஸ் சீனுவும் சேர்ந்து, ஸ்ரீனிவாசா மெடிக்கல் சம்பந்தி, ஏத்தகுடி எதிராஜ் அய்யங்காரை, உசுப்பி விட்டு, தங்கள் தெரு டிமை ஏலம் எடுக்க வைத்துவிட்டார்கள்.

மொத்தம் மன்னார்குடிக்குள் 10 டீம். T20 மேட்ச். A பிரிவில் 5 டீம் B பிரிவில் 5 டீம்.

A பிரிவில் மேல இரண்டாம் தெருவுடன், ஹரித்திரா நதி. டீம் முதல் லீக் மேட்ச்.

அந்த டீம் ஸ்டராங். அதுவும் ஸ்ரீராம், வெங்கிட்டு,

குமார் ராஜு போன்றவர்கள்வெரி ஸ்டராங் பேட்டிங் லைன். ஆஸ்திரேலியா, நியூசிலந்து இரண்டும் சேர்ந்த கலவை டீம்ன்னு சொல்லுவா.. அதுவும் குமார் இருக்கானே அவன் பேட் கம்மின்ஸ் மாதிரி, அதே உயரம் . சீம் பௌலிங் 149.5 கி. மீ ஸ்பீட். வெங்கிட்டு.வார்னர் மாதிரி

“கவலைபடாதே சீனு. நாம ஜெயிக்கிறோம்”; “இதென்ன கிட்டி பில் விளயாட்டா!ஜெயிக்கறம்ன்னு சொல்றதுக்கு. மாதுவை கடித்தான் சீனு”.

“இது வரைக்கும் எந்த மேட்ச் அவங்கள நாம ஜெயிச் சு இருக்கோம்.?”

“போன வருடம், ஒத்தை தெரு வத்தலும் சொத்தலுமா ஒரு டீம்.. அதைய கஷ்டப்பட்டுதான் ஜெயிச்சோம்.” அதுக்கு முதல் வருடம் எல்லா டீம் கிட்டையும் செம அடி."

“ஹரித்தி ரா நதி டீம் இரண்டு தடவை சாம்பியன் டா. இப்ப ஹாட்ரிக் அடிக்க போறங்கா!!. ஒட்டு மொத்த மன்னார்குடியும், அவங்களுக்கு தான் சப்போர்ட்”.

“மன்னாரகுடி டைம்ஸ் வேற, பக்கம் பக்கமா எழுதி புகழ்ந்து தள்ளி இருக்காங்க”.

“இருக்கட்டுமே.அதனால் என்ன?”அசால்டா சொன்னான் மாது“. ஒன் மேல நம்பிக்கை வை”. உன்னால் முடியும் தம்பி என்று கமலஹாசன் மாதிரி வேறு பாடினான்.

மாது, “நம்ம டீம் ஒன்னும் அவ்வளவு ஸ்ட்ராங் கிடையாது. என் தம்பிஸ்ரீராம்.ஆப் பிரேக் ஸ்பின்.. பாஸ்ட்பௌலர்க்கு ஷாஹுல். லெகஸ்பினுக்கு அன்வர் பாட்சா. மீடியம் பேஸ் க்கு ஜேம்ஸ்..ஓமகுச்சி நந்து வயது 22சீனியர்அவன் ஒரு பார்ட் டயம் சீம் பௌலர்; தான். இப்போ நீ.”

“உன்னை நம்பிதான் இருக்கம்டா”

“யாமிருக்க பயமேன்” பேட்டில் ஒட்டிருந்த ஸ்டிக்கர் வாசகத்தை காமிச்சான் மாது.

அப்படி இப்படின்னு 15 பேர் தேத்தி, நல்ல நாளில், எதிராஜ் ஐயங்கார் முன்னாடி, டீம் செலக்ட் ஆனது.

“எதிராஜ் அய்யங்கார் ரொம்ப நல்லவருடா”

மாது ஐஸ் வைக்க,

அவர் காலடி மண்ணை எடுத்து பூசி கொண்டனர்.

எல்லோரும்.

“எஜமான் காலடி மண் எடுத்து”பாட்டை பாட ஆரம்பித்தான். மாது.

அய்யங்கார் முகத்தில் 1000 வாட் பல்ப் வெளிச்சம் மாதிரி சந்தோசம்.

முதல் மேட்ச் மாது சீனு ஸ்ரீராம் மூணு பேரும் வீட்டில் பழையது பிளஸ் மாவடு ஊறுகாய் புல்வெட்டு, வெட்டி விட்டு கிளம்பும் போது,

“போகாத போகாதே என் பசங்களா!! பொல்லாத சொப்பனம் நானும் கண்டேன்!!!. நீங்க தோக்கிற மாதிரி சொப்பனம் நானும் கண்டேன்”சொப்பனம் கண்டேன்.!!!!"

முகாரி ராகத்தில் சீனுவோட அம்மா, இப்படி பாட,

“ஐயோ என்ன மாமி? இப்படி அபசகுணம் மாதிரி பாடறேள்.. கட்ட கோபால் அலற,”

“போன வருஷம், அதுக்கு முதல் வருஷம், பாடினேன் தோத்துட்டுவந்தேள். இப்போ ஹாட்ட்ரிக். அடிப்பேள்ன்னு ஒரு அல்ப சந்தோசம் அதான்.

ஆட்டோமேட்டிக் சாவி கொடுத்த பொம்மை மாதிரி பாடிட்டேன். ரிபிட்டு”

"சாரிடா கோபால். எங்க அம்மா பாடின பாட்டுக்கு, வேணா ப்ராயசித்தமா, ஒரு வா பழையது, சாப்பிட்டு போடா!!

கல் சட்டி பழையதுடா டேஸ்ட் டா இருக்கும்!!!.. சீனு கெஞ்சினான்.

“எங்கேடா அன்வர் ஷாஹுல், பாட்சா?”

“மூணு பேரும் ஒத்தைத் தெரு பிள்ளையார்கிட்ட ஆசிர்வாதம் வாங்க போய்ருக்காங்க?”

“என்னது !” ஆச்சர்யமாக கேட்டான் மாது.

“அவங்க மசூதிக்கு தானே போவாங்க?”

“டேய் மாது !ஒனக்கு தெரியாது; ஒவ்வொரு மேட்சுக்கும், ஒத்ததெரு ஆனந்த் விநாயகர்கிட்ட ஆசிர்வாதம் வாங்கிட்டு வந்தாதான், அவங்களுக்கு. விக்கட் விழும்”

எதிர் பார்த்த மாதிரி ஹரித்தரா நதி டீமின், சீம் பௌலிங்கில், தாக்கு பிடிக்க முடியாமல் 20 ஓவரில் 120ரன் எடுத்தது. அவர்களது இரண்டாம் டீம்.

மங்களூர் மாது மட்டும் 28 ரன். டாப் ஸ்கோரரர்.

ஸ்ரீராமின் ஆப் பிரேக், மாதுவின் ஹூக்ளியில் 110 ரன்னில் சுருண்டது. ஹரித்திரா நதி 3 விக்கெட் 28 ரன் எடுத்த “மாதுமேன் ஆப் தி மேட்ச்”. .ஷாஹுல் அன்வர்க்கு தலா 2 விக்கெட்.

“டேய் மாது! பாத்தியா ஆனந்த் விநாயகர் அருள் ஆசியை. வைட் டல் விக்கெட் நான் எடுத்து இருக்கேன்.”

"சாரிடா ஷாஹுல். உன்னை இப்போ புரிஞ்சுகிட்டேன்.

அடுத்தடுத்து லீக் மேட்ச் கீழபாலம் டீம், கீழ மூணாம் தெரு, திருப்பாற்கடல் தெரு டீம் ஜெயிச்சக்கு காரணம் மாது ஆலோசனை தான்.

இதோ செமி பைனல் அசேஷும் டீம்.

இந்த நேரம் பார்த்து ஸ்ரீராம் வயத்து வலின்னு ஒதுங்க, “டேய் நம்ம ஒல்லிக்குச்சி நந்துவை பௌலிங் போட சொல்லிசமாளிச்சுடலாம்” என்றான் மாது.

“அது முடியாதுடா”?

“அவனுக்கும் ஏத்தகுடிக்கும் ஆகாதுடா.அதான் இந்த நாலு மேட்ச் பூரா அவன் 12வது மேன்.”

“ஏண்டா என்ன தகராறு”?.

“ஒன்னுமில்லடா, அவர் பொண்ணு வசுமதி கிட்ட போய்,”காதலிக்க கற்று கொள்ளுங்கள்; என் அழகினலே என் இதழ்களிலே"ன்னு பாடி இருக்கான்.

மறு நாளும் “என் அத்தை மக ரெத்தினமே! ஆசையுள்ள பெண்மயிலே” ன்னு பாடி கிண்டல் பண்ணி இருக்கான்.

"சொந்தம் தான் இருந்தாலும், இவனோ ஓணான் ஒல்லிக்குச்சி.

எப்பிடடா வசு இவனை லவ் பண்ணுவா சொல்லு?". வேற வழி இல்லாமல் சும்மா டீமில் வச்சுருக்கார்.

“அவன் உயரத்துக்கு ஜேசன் ஹோல்டர் மாதிரிடா! ஆனா உடம்பு சேப்புடா.புத்திசாலி கூட. பால் யார்க்கரா; இல்ல புல் டாசான்னு தெரியாத மாதிரி, அவுட் ஸ்விங்கர் இல்லை, இன் ஸ்விங்கர் போட்டு

தாக்குவான்”.

“நெட் ப்ராக்டிஸ் ல, என் பேட் மூலம் டிபண்ட பண்ண முடியல. அவ்வளவு ஸ்பீட்” ஸ்டும்ப் தெரிச்சு ஓடுச்சு. மாது சொன்னான்.

“திறமை இருந்தும் அவன் 11 பேர்ல் இருக்க கூடாதுன்னு சொல்லிட்டார்டா” ஏத்தகுடியார்.

“நான் என்னடா செய்ய முடியும்?” புலம்பினான் சீனு.

“அவனை, இது வரைக்கும் சரியாயூஸ் பண்ணவே இல்லை; இப்ப இந்த செமில யூஸ் பண்ணலாம் நான் ஏத்தகுடியார்கிட்ட பேசிக்கிறேன்”.

மாது இப்படி சொன்னதும், நந்துக்கு வாயெல்லாம் பல் தெரிய சிரித்தான்..

“மாப்ளே நீ செம பிளேயர் டா !செமில நீ விளையாட போறே”.!!!

மாது கணிப்பு சரியா ஒர்க் அவுட் ஆச்சு.

ஒவ்வொரு ஒவர் பால் போடும் போது, ஒல்லிக்குச்சியை,

தன் உயரத்துக்கு குனிய சொல்லி, மாது டிப்ஸ் கொடுத்தது வீண் போகலை.! ஒமகுச்சிக்கு 6 விக்கெட்.

அசேஷம் டீம் 90 ரன் ஆல் அவுட்.

மாது ஒல்லிக்குச்சி ஒப்பனிங் இறங்கி 6 ஒவர்ல மேட்ச் ஒவர்.மேன் ஆப் தி மேட்ச் ஒல்லிகுச்சிக்கு.

வாழ்நாளில் கிரிக்கெட்ல தான் வாங்கின, சின்ன வெள்ளி கப்பை, நூறு தடவ முத்தம் கொடுத்து இருந்தான் ஒல்லிகுச்சி நந்து.

ஏத்த க்குடி எதிராஜ் ஐயங்கார்க்கு சந்தோசம்

தாங்கலை! தன் மருமான் மூலம் பைனல் வந்ததுக்கு.
.

“இப்போ ஹரித்திரா நதி டீமும் பைனல். நிச்சயம் நம்மள பழி வாங்குவாங்க”.

மாது அலட்டிக்கவே இல்லை;

“நாம் இருக்க பயமேன் ன்னு” பேட்டில் எழுதி இருந்த ஸ்லோகனை மீண்டும் காமிச்சான்.

“இது சாதாரண பேட் இல்லாடா. மங்குஸ் பேட்”.

“அப்டின்னா என்னடா?”

“அப்ப்பவே கேக்கனும்ன்னு நினைச்சேன்; ஒரு வருஷமா நீ சொல்லவே இல்லை”.

சீனுவும் மத்த வங்களும் நச்சரிக்கவே, “ஒரு sprite ஆர்டர் பண்ணு அப்ப தான் ஒரு sprit டு டன் சொல்வேன்” என்றான் மாது..

நன்றிக் கடனா ஒல்லிக்குச்சி ஓடிப்போய், நாடார் கடையில், sprite வாங்கி கொடுக்கspritவர ஆரம்பித்தது மாதுவுக்கு;

கட கடவென குடித்துவிட்டு, “இந்த பேட் மூலம், டிபன்ஸ் விளையாட முடியாது. ஷாட் தான். அடிக்க முடியும்”. 2010 மே த் யூ ஹைடேன் சி. எஸ்.கே க்கு டெல்லி டேர்வில்ஸ்க்கு எதிரா விளையாடினப்ப யூஸ் பண்ணி 43 பாலில் 93ரன் எடுத்தான்.

“டே நீ சமீபத்தில், 83 படம் பார்த்தல்ல; ஜிம்பாபாவிக்கு எதிரா, 175 ரன்கபில்தேவ் அடிச்சது இந்த மங்கூஸ் பேட் மூலம்தான்; காஷ்மீர் போனபோது வாங்கினது;”இந்த பேட் வைச்சு தான், ஒல்லிக்குச்சிக்கு பிராக்டடீஸ்கொடுத்து, செமி பைனல் விளையாடினான்; இப்போ பைனல் செகண்ட் டவுன் இறக்க போறேன்".

“வேண்டாம்டா விஷ பரிட்சை?” கட்ட கோபாலும், சீனுவும், சொன்னதை காதில் வாங்கவில்லை மாது.

“அவன் மேல எனக்கு நம்பிக்கை இருக்குடா”!

கேட்டு கொண்டிருந்த ஒல்லிக்குச்சி உணர்ச்சி மேலிட அழ ஆரம்பித்தான்.

“நினைத்ததை நடத்தியே முடிப்பவன் நான் நான்னு” பாடிட்டு போயிட்டான்.

"ஶ்ரீராம் வயத்து வலி தீரல. இப்ப என்னடா பண்றது?

மாட்ச்க்கு முன்னாடி 200 கிராம் மொச்சகொட்டை சுண்டல் வயிறு முட்ட சாப்பிடடா இப்படித்தான்?. அவன் தொப்புள் சுத்தி 100 எம். ல் விளக்கெண்ணை ராத்திரி தடவி விட்டு தூங்க சொல்லு; எல்லாம் சரியாயிடும். காலையில் பிரஷ் ஆயிடுவான். எதுக்கும் அவன் கையிலே ஒரு பால் கொடு. ராத்திரி பூரா மேட்ச்சை நினைச்சுண்டு பாலை கையில் வைச்சுண்டு, ரிஸ்ட். மூலம் முறுக்கிக்கிட்டு இருப்பான். இது ஒரு சைக்காலசி டரிட்மெண்ட்"

“பாரேன் நாளைக்கு பாலும் கையுமா எழுந்துப்பான்.”

மாது சொன்னபடியே நடந்தது.

மறுநாள் சாயந்திரம் சீனு, அம்மாவிடம், “இது பகல் இரவு மேட்ச்ம்மா. மறுபடியும் அதே பாட்டு பாடி குங்குமம் இட்டு விடுமா!”!

" உன் பாட்டுநெகட்டிவ் ஆக இருந்தாலும், நீ பாடினா பாசிட்டிவு மாதிரி நாங்க ஜெயிப்போம் நீ அதே பாட்டை பாடு.."

“பாடு சாந்தா பாடு சாந்தா.”

கொஞ்சும் சலங்கை ஜெமினிசாவித்திரி யை கெஞ்சின மாதிரி, அம்மா பேரை , சந்தடி சாக்கில் சொல்லி கெஞ்சினான் சீனு.

முகாரி ராகத்தில் அதே பாட்டை, அம்மா பாட, வீறு நடை போட்டுகிரெளண்ட் க்கு போனது மேல் இரண்டாம் தெரு டீம்.

டாஸ் ஜெயிச்ச ஹரித்திரா நதி டீம், சேஸ் பண்ணி ஜெயிக்கலாம்ன்னு பெளலிங் செலக்ட் செய்தது.

Dew (பனிப்பொழிவு) இருக்கும்; தங்களுக்கு சாதகமா இருக்கும்ன்னு நினைச்சங்கா.

ஒரு சேஞ்சுக்கு, சீனுவோட அன்வர் இறங்க, முதல் ஓவர்ல இரண்டு ஓப்பனிங் பேட்ஸ்மேன்அவுட். பூஜ்யத்துக்கு 2 விக்கட் அவுட்.

3வது ஆளா இறங்கிய மாதுவும், 4 வது ஆளா இறங்கிய ஒல்லிக்குச்சியும்,

நாலா பக்கமும் அடிச்சு 178 ரன்க்கு ஆல் அவுட். மாது மட்டும் 68 ரன். சப்போர்ட் பண்ணிய ஒல்லிக்குச்சி 50 ரன்.

179 ரன்எல்லாம் ஜூஜூபி ஹரித்திரா நதி டீமிக்கு. எல்லோரும் ஆரவாரம் செயதார்கள்.

ஓப்பனிங் ஷாஹுல் அருமையான பெளலிங்.10 ஓவரில் 70 ரன் ஆனா விக்கெட் விழாமல் இருந்தது.

ட்ரிங்க்ஸ் பிரேக்கில்;

கட்ட கோபால், தானே வாட்டர் பாட்டிலை எடுத்து கொண்டு ஓடி, மாது சீனு ஒல்லிக்குச்சி, ஸ்ரீராம்.

அன்வர் எல்லார்கிட்டையும் சீரியஸ் டிஸ்கசன் பண்ணினான்.

“மிச்சம் 10ஓவர்ல பொளந்து கட்டுவாங்களே”.

மாது போட்ட, இன்ஸ்விங்க்ர் ஒர்க் அவுட் ஆகி ஒரே ஓவரில் 2 விக்கெட். விழ, மாது அடுத்த ஓவர் ஒல்லிக்குச்சியை கூப்பிட்டு பௌலிங் போட சொல்ல ரிசல்ட் கை மேல. ஒல்லிக்குச்சி நந்துவின் யார்க்கர்அடுத்தடுத்து 3விக்கெட்கொடுத்தது. ஸ்ரீராம் அன்வர் தலா இரண்டு விக்கெட்.

20வது ஓவர்12 ரன் தேவை...ஷாஹுலை டெத் ஓவரில் கொண்டு வந்தான்.மாது.

ஒல்லிக்குச்சி யை, லாங் லெக் பௌண்டரியில், நிக்க சொன்னான்.

“கோயில் புளியோதரை வாங்கற மாதிரி, இரண்டு கையையும் தயாரா வைச்சுக்கோ. கேட்ச் கோட்டை விட்ட தொலைச்சுடுவேன்”.

ஷாஹுலிடம், குமார் லெப்ட் ஹாண்ட். நீ ஆப் சைடுல் போடு.

முதல் 3 பால் டாட் பால் ஆனது டென்ஷன் ஆனது.. 4வது பால் ஷார்ட் பிச்சு 4 ரன், 5வது பால் 2 ரன், கடைசி பால் 6 ரன் தேவை.

பிள்ளையாருக்கு சந்தன காப்பு சாத்தறேன் ஷாஹுல் வேண்டிக்கொண்டான்.

“எப்படியாவது ஜெயிக்கணும்”.

ஒட்டு மொத்த கிரௌண்டும், மயான அமைதி. திக் திக்கென்று இருந்தது.

“யார் ஜெயிப்பா?”

“மாதுவும் சீனுவும் மறுபடியும் ஷாஹுல் கிட்ட வந்து ஷார்ட் பிச்சு பால் நல்ல லெங்க்த் ல போடு.. கம் ஆன் சியர்ஸ்”

சீனு நீ லெக் சைடு நில்லு. நான் டீப்மிட் புக்கட்ல நிக்கறேன். ஒல்லிக்குச்சி லாங் லெக்கில. எப்படியும் குமார் சிக்ஸர்க்கு தூக்கி அடிப்பான்.

மாது எதிர்பார்த்த மாதிரி குமார் சிக்ஸர்க்கு, தூக்கி அடிக்க, பால் பௌண்டரிக்கு 5 அடி முன்னே நின்றுந்த ஒல்லிக்குச்சி கையில், லட்டு மாதிரி விழ!!!

பிறகென்ன! ஹரித்திரா நதி டீம் 173 ரன்னுக்கு ஆல் அவுட் ஆனது.. 5 ரன்னில் தோல்வி.

இரண்டாவது முறையா ஒல்லிக்குச்சிக்கு மேன் ஆப் தி மேட்ச் அவார்ட்

முதல் முறையாக MPL கப் சீனு மாது வசம்.

ஏத்தகுடி எதிரராஜ் அய்யங்காருக்கு, சந்தோசம் பிடி படலை.

எல்லாத்துக்கும் காரணம் ஒல்லிக்குச்சிதான். 50 ரன் 4 விக்கெட் அதோடமங்குஸ் பேட்டிங் டெக்னிக் தான்னு தல மேல கொண்டாடினார்.

மேட்ச் பார்க்க வந்த வசு, கையை, ஒல்லிக்குச்சி கையோடு, சேர்த்தார்.

ஒல்லிக்குச்சிக்கு மட்டுமல்ல. மொத்த டீமிக்கும் ஆச்சர்யம்.

செமியிலும், பைனல் மேட்ச்லும், ஒல்லிக்குச்சியை சேர்த்து, ஒருவேளை அவன் தன் திறமையை ப்ரூப் பண்ணி, கப் ஜெயிச்சுட்டா, வசுவை, நந்துக்கு கல்யாணம் பண்ணி கொடுக்க ஓகே வா, என்று ஏத்தகுடி அய்யங்கார் கிட்ட, மாது, தைரியமாகேட்டதும், அவரும் நல்ல வேலை நல்ல சம்பளம் தான். ஆனா ஜெயிக்க முடியுமா?

ஜெயிச்சா ஓ கே. தான்! என்று சத்தியம் பண்ணியதும் இருவருக்கு மட்டுமே தெரிந்த ரகசியம்.

“எங்கள் கல்யாணம் கலாட்டா கல்யாணம்ன்னு” பாட்டு பாடி நந்துவும் வசுவும் கிரௌண்ட்டில் ஓட, அவர்களை மற்ற பிளேயர்கள் துரத்தினார்கள்.

# திருத்தக்கசெல்வம்

இரவு டிபன் சப்பாத்தியை, செய்து முடித்து ஹாட் பாக்ஸில் வைத்து விட்டு, பாமா மணியை பார்த்த போது மணி இரவு 7.30ஆகியருந்தது.

எட்டு மணிக்குள், சன்னதியை மூடி விடுவார்களே? இன்னிக்கு லேட்டாயாயிடுச்சே! தன் கணவருக்கு காபி கொடுக்க வேண்டுமே! என்று புலம்பியவாறே, அவசர அவசரமாக, புடவைமாற்றிக் கொண்டு, பக்கத்து போர்சன் பத்மாவிடம் வீட்டு சாவியை,கொடுத்தவாறே, “பத்மா, ரவியோ ரம்யாவோ, டியூசன் முடிச்சிட்டு, வந்தாலும் சாவியை கொடுத்துடு”நான் கிளம்பறேன்".

பார்க்கைத் தாண்டினால், ஊரின் மைய பகுதியில், அருள் பாலித்து கொண்டு இருக்கும் ஸ்ரீ ராஜகோபாலஸ்வாமி சமேத செங்கமல தாயாருடன் சன்னதி.

ஆஞ்சேநேயர் சன்னதியும், சக்கரத்து ஆழ்வார் சன்னதியும் இருப்பதால், சனிக்கிழமை மட்டும் கூட்டம் கொஞ்சம் அதிகமாக காணப்படும்.

பாமாவின் நடையில் இப்போது, வேகம்.. காணப்பட்டது.

தன் நடையின் வேகத்தை மீறி, சொகுசு கார் ஒன்று, தன்னை உரசி கொண்டு போன வேகத்தில், ரிவரஸில் வந்து அவள் பக்கத்தில் நின்றது.

காரிலிருந்து பளிச்சென ஒரு பெண்மணி, இறங்கி வந்து தன்னிடம், “நீங்க !நீங்க !! நீ ! நீ!! பாமா தானே”, கண்களை அகலமாக விரித்து, புன்னகையுடன் விசாரிக்க, ஒரு நிமிஷம் பாமாவுக்கு ஏதும் புரியாமல் போனது.

“ஓங்கள எங்கோ பார்த்து பழகின மாதிரி இருக்கு, ஆனா யாருன்னு சட்டென்று ஞாபகம் வரல?”

“என்ன பாமா என்னை தெரியல?”

“நான் தான் ருக்மணி. உன் கிளாஸ்மெட்”.

“ஓங்க வீட்டிலுருந்து இரண்டு வீடு தள்ளி குடி இருந்தாரே, ராமானுஜம் நாயுடு அவரோட பொண்ணு. ஒன்னோட பெஸ்ட் பிரண்ட்..”

“இப்போ ஞாபகம் வருதா?”

பாமாவுக்கு ஞாபகம் வந்தது.

“ஏய் ருக்கு ! எப்படி இருக்கே? ஆள் அடையாளமே தெரியல. வெரி சாரி ருக்கு.”

“ஆமாம் எப்படி என்னை கண்டு பிடிச்ச?”

“அதுவா இருபது வருடத்துக்கு முன்பு, பாத்த அதே மாதிரி இருக்கே. ஆனா என்னை பாரு இந்த வயசிலே சுகர், கொலஸ்ட்ரால், பி.பி குண்டா வேறு இருக்கேன். மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்குது”.

“டிரைவர் வண்டிய பார்க் பண்ணிட்டு, ஒரு பத்து நிமிஷம் கழிச்சு வாங்க”.

“வா பாமா இந்த பார்க்கிலே உக்காந்து பேசுவோம்”.

“எவ்வளவு நாள் ஆச்சு? உன்னை பாத்து”.

மன்னார்குடி மேல இரண்டாம் தெருவில் தான்

இருவரது குடும்பமும் இருந்தது.

ருக்மணியின் அப்பா ராமானுஜம் நாயுடு வைஷ்ணவ பக்தர். மனித நேயம் உள்ளவர். பக்கத்துல தேவங்குடி கிராமத்திலே பெரிய வீடு. நஞ்சையும் புஞ்சையும் நிறைய.

பந்தலடியில், வெண்ணை கடை. தன் ஒரே பெண் ருக்மணியை ப்ளஸ் 1 மன்னார்குடி தேசீய மேல் நிலை பள்ளியில் சேர்த்து இருந்தார்.

பாமாவின் அப்பா பக்கத்து கிராம கோயில் அர்ச்சகர். சொற்ப வருமானம். சிரமப்பட்டு, பாமாவை ப்ளஸ் 1 சேர்த்து இருந்தார்.

படிப்பில் இருவருமே சூர புலி.

பாமா, ருக்மணியை, பிரிப்பது, சாதாரண விஷயமல்ல என்று சக மாணவர்கள் சொல்லும் அளவிற்கு, ஒரு நெருக்கமான நட்பு அவர்களிடம் இருந்து வந்தது.

அதுவும் ருக்குவின் ஞாபசக்த்தி அபாரம் பாமா ருக்கு இருவரும் நல்ல மார்க் எடுத்து இருந்தாலும், இரண்டு பேருமே பட்ட படிப்பு படிக்க முடியாமல் போனது.

படிப்பு முடிந்த கையோடு, ருக்குவுக்கு சொந்தத்தில் உள்ள பையனை மணம் முடித்து, மாப்பிள்ளைக்கு, சென்னையில் சொந்த தொழிலும் ஏற்பாடு செய்து கொடுத்து, ஜாகை வைத்தும் கொடுத்து இருந்தார். ராமானுஜ நாயுடு.

“என்னை மாதிரி அவசர பட்டு கல்யாணம் பண்ணிக்க வேண்டாம்;”

“நீ, டைப் ரைட்டிங் தமிழ், ஆங்கிலம் கத்துக்கோ, அஞ்சல் வழி கல்வி மூலம் டிகிரி வாங்கு. நீ சொந்த

காலில் நின்னு ஜெயிக்க முயற்சி செய்".

ருக்கு சொல்லிவிட்டு போன பிறகு, ஓரிரு மாதங்கள் கடித போக்கு வரத்து தொடர்ந்தது.கால சுயற்சியில், பின்னர் அதுவும் நின்று போனது.

ராமானுஜம் நாயுடுவை, தான் ஒரு முறை சந்தித்த போது, ருக்கு கலிபோர்னியாவில் செட்டில் ஆகி, நல்ல நிலையில் இருக்கிறாள், என்று சொல்லியிருந்தார்.

காலச்சக்கரம் சுயற்சியில், முதிர் கன்னியான தனக்கு, அப்பா ஒரு கோயில் அர்ச்சகர் மாப்பிள்ளையை, கொண்டு வந்து நிறுத்திய போது, நொறுங்கி போனாள் பாமா.

தான் தோழி ருக்குவை போல், மாப்பிள்ளை, கை நிறைய சம்பளம், வசதியான வீடு, வாழ்க்கை தனக்கு கிடைக்காமல் போனது பற்றி, பல இரவுகள் அழுது இருக்கிறாள்.

ஒரு முறை தன் கணவரிடம், தான் வாக்கப்பட்ட ஊரை விட்டு, சென்னையில், எதாவது ஒரு கோயிலுக்கு, அர்ச்சகராக போனால், வருமானம் கிடைக்கும்; தானும் வேலைக்கு போயி வந்தால், கூடுதல் வருமானம் கிடைக்கும் என்று வாதிட்ட போது, என் ஊர், என் ராஜகோபாலன் சன்னதியை விட்டு, வர முடியாது என்று தீர்க்கமாக சொல்லிவிட்டு, இது மாதிரியான பேச்சு, இனியும் தொடர கூடாது, என்றும் கண்டிப்பாக சொன்னதால், பாமா அந்த எண்ணத்தையும் தனக்குள் குழி தோண்டி புதைத்து கொண்டாள்.

பாமாவும் ருக்குவும், இதோ இருபது வருட இடைவெளிக்கு பிறகு சந்திப்பு.

"பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ"என்பது போல் நீண்ட மௌனம். கண்ணீர் பெருகியது.

“உன் கல்யாண இன்விட்டேஷன்.கிடைச்சுது”சாரி பாமா ! வர முடியாத சூழ்நிலை.."

“ஆமாம் நீ மட்டும் தான் வந்து இருக்கே! ஒனக்கு ஒரு பையன் இருக்கான்னு கேள்விப்பட்டேன்”.

“ஒன்னை பத்தி எந்த தகவலும் தெரியாம போச்சு”.

சின்ன விசும்பலும், அழுகையுடன், ருக்கு“ஆமாம் பாமா, அவர் காலமாகி இரண்டு வருஷமாச்சு. ஒரு ஆக்சிடென்டில் போயிட்டார்”.

“பையன் தான் அவர் பிசினஸ் கவனிச்சுக்கிறான். அவனுக்கும் கல்யாணம் பண்ணிட்டேன். கலிபோர்னியாவிலே இருக்கோம். வசதி இருந்து என்ன பிரயோஜனம்? நிம்மதி இல்லை”. “உடம்பிலே வேறே வியாதி”.

பாமா அப்போது தான் ருக்குவின் கழுத்தை கவனித்தாள்.

இரட்டைவட சங்கிலி; பத்து பவுனுக்கு மேல் இருக்கும். மத்த இடங்களில், வைரம், தங்கம், பள பள பட்டுப் புடவை என்று ஒரே ஜொலிப்பு!

ஆனால், தன் கழுத்தில் தாலிய தவிர வேறு எந்த தங்கமும் கிடையாது.

கை வளையல்கள் கவரிங்..

தன் கணவர் இறந்தது பற்றி, உதட்டளவில், வருத்தம் காண்பித்து கொண்டாளே தவிர, அதனால் அவள் சுத்தமாக கவலைபட்டதாக

தெரியவில்லை., என்ற எண்ணம் பாமாவிற்கு தோன்றியது.

அடுத்த நிமிஷம் தான் மட்டும் இப்படியே

இருக்கிறோமே, தன் ஏழ்மை நிலைமை எப்போதும், இப்படியே போய் விடுமோ ? இதற்கு விடிவு கிடையாதா? என்று நினைக்க ஆரம்பித்தாள்.

ருக்மணி தான் பேச்சை தொடர்ந்தாள்.

“நீ மன்னார்குடி அடிக்கடி போவியா? நம்ம ஹெட்மாஸ்டர் ஸ்ரீனிவாசன் ரிடயர் ஆகி இருப்பார். இப்போ எங்கே இருக்கார்?”

“நம்ம தமிழ் வாத்தியார் கரிச் சான்குஞ்சு, செம்பகேசன் என்ன பன்றாங்க?”

“காளிதாஸ் சார், டீ. வி ஆர் சார், எப்படி இருக்காங்க?”

“வெண்ணை தாழி உத்சவம் போது, பெருமாளை சேவிக்க போன, நம்ம இரண்டு பேர் மேலையும், வெண்ணை அடிச்ச விசு, எப்படி இருக்கான்?”

“கரிச்சான் குஞ்சு சார், தமிழ் பாடம் நடத்தும் போது, பாடத்தை கவனிக்க விடாமல், சந்துரு” அம்போ ஆயிரம் ரூபாய் “கதையை சொல்வானே அவன் எப்படி இருக்கான்?”

" எப்போதும் ஜோக் சொல்லி நம்ம வகுப்பை கலகலப்பா வைப்பானே “கோண்டு” அவன் எப்படி இருக்கான்?

“ஸ்கூல் கடைசி நாள் பார்ட்டி எல்லாம் முடிந்த பிறகு, நம்ம சீனு ரமா கிட்ட, நம்ம தெரு முனைகிட்ட வந்த பிறகு, நமக்கு எல்லாம் தெரிய கூடாதுன்னு நினைச்சு, லவ் ப்ரொபஸல், பண்ண போயீ, அதுக்கு அச்சாரமா, கெமிஸ்ட்ரி சிம்பல் மூலமா ஒரு பொட்டாசியம், ஒரு ஐயோடின், இரண்டு ஸல்பர் கொடுன்னு, ரமா கிட்ட கேட்க போயி, அவ நம் எல்லோர் முன்னாடி, சீனுவை செருப்பால அடிச்சு கேவல படுத்தி, அழுகையும் ஓட்டமுமாக போனாளே?

அவ எப்படி இருக்கா?”

" சீனு எப்படி இருக்கான்? "

“வாவ், ஒரே மூச்சில் இவ்வளவு பேரையும், ஞாபகம் வைச்சுண்டு, எல்லோரையும் பத்தி விசாரிக்கிறேயே, ருக்கு”. “யூ ஆர் ரியலி கிரேட்.”

"இல்லை பாமா, பழைய நினைவுகளை, அதுவும் பள்ளிக்கூடம் அனுபவங்கள், மாணவ பருவ வாழ்க்கை, இதையெல்லாம் நினைச்சு நினைச்சு, பாத்தா சுகம் தான்.

“சுமையும் இல்லாம, சிறையும் இல்லாம, சுதந்தரமா, ஒரு பட்டாம்பூச்சி மாதிரி, படிக்கற இடம் தான் பள்ளிக்கூடம். அங்கே அறிவோடு மனசு சேர்ந்து படிக்கற இடம்.”

“பழைய நினைவுகள் வரும் போதெல்லாம் உன்னை பத்தி, நம்ம பிரண்ட்ஸ் பத்தி ஞாபகம் வரும். அந்த சந்தோசம் இரண்டு நாளுக்கு நீடிக்கும்.”

"நம்ம தமிழ் வாத்தியார் கரிச்சான் குஞ்சு இலக்கிய வட்டத்தில் பெரும் புகழ் பெற்றவராம். நிறைய சிறுகதைகள் எழுதி உள்ளாராம்.

“நீ சொல்வது நூற்றுக்கு நூறு உண்மை ருக்கு!”

"எனக்கும் அவரை பத்தி லேட்டா தான் தெரிய வந்தது. வகுப்பில் அவர் பாடம் நடத்தும் போது கவனிக்காமல்,

சந்துரு சொன்ன “அம்போ ஆயிரம் ரூபாய்”கதையை கேட்டுருக்கோமே, என நினைக்கும் போது மனசு கனக்கிறது

“நீ அமெரிக்காவிலே இருக்கே, நம்ம கிளாஸ்மேட் களை பத்தி, விசாரிக்க முடியலேன்னு வருத்தமா, பீல் பண்ற”. “ஆனா நான் பக்கத்துல இருந்தும்,

அவங்களை பத்தி விசாரிக்க முடியலன்னு எனக்கும் நிறைய குறை இருந்துச்சு.”

இந்தவருஷம் வெண்ணைத்தாழி மண்டபத்தில் நம்ம ரமாவையையும் சீனுவையும் ஒண்ணா பார்த்தேன்.

எனக்கு ஆச்சர்யம்.. ரமா, தான், அன்னிக்கு சீனுவை, அப்படி செருப்பால் அடிச்சது தப்பு ன்னு, பீல் பண்ணி, சீனுவின், உண்மையான லவ் வை புரிஞ்சுகிட்டு, பின்னாடி பெற்றோர் சம்மதம் வாங்கி, சீனுவை கல்யாணம் பண்ணிகிட்டாளாம். "

“இப்போ இரண்டு பேருமே ஸ்கூல் டீச்சர்ஸ்”.

மத்த பிரண்ட்ஸ் பத்தி விசாரிச்சேன்.

“கிளாஸல, எப்போதும் ஜோக் சொல்லி கலகலப்பா வைச்சுப்பானே நம்ம கோண்டு, ஒரு பிரைவேட் பேங்க்ல் வேலை பார்த்து வந்தவன் திடிர்னு ஹார்ட் அட்டாக் வந்து அல்பாயுசுல போயிட்டானாம்”. ரமா இப்படி சொன்னதும் எனக்கு மனசு பூரா சோகமாயிடுச்சு.

“ம்ம்ம் நம்ம மேல வெண்ணை அடிச்ச விசு, டெல்லியிலே, இந்தியன் வங்கியிலே ஆஃபீஸ்ர்;”அம்போ ஆயிரம் ரூபாய்" கதை சொன்ன சந்துரு, கவுசிக் என்ற பெயர்ல டீ வி சீரியல் டைரக்டர் ஆக இருக்கானாம்"

ஹெட் மாஸ்டர் ஸ்ரீனிவாசன் செம்பகேசன் சார். காளிதாஸ் சார் இறந்து போயிட்டாங்களாம்“.” டிவிஆர் சார் சென்னையில் இருக்காராம்.

“சந்தோஷமான சில செய்திகள், வருத்தம் தரும் சில செய்திகள் சொல்லியிருக்கே பாமா”.

“எனக்கொரு யோசனை, 96 படம் மாதிரி நம்

கிளாஸ்மேட் எல்லோருடைய போன் நம்பர் ரமா, சீனு மூலம் வாங்கி, வாட்சப்பில குரூப் சாட் பண்ணுவோம்: கொஞ்சம் நிம்மதி கிடைக்கும்".

"அடுத்த தடவை சென்னை வரும் போது ஒரு ஹோட்டலில் மீட்டிங் ஏற்பாடு பண்ணு. எல்லா செலவும் நான் பண்றேன"

"ஊர் சமாசாரம், நண்பர்கள் பத்தி, பேசிகிட்டு இருந்ததனால், உன்னை பத்தி கேக்கவே இல்லை". "ஆமாம், நீ எங்கே இந்த ஊரிலே ? குடும்பம் எல்லாம் எப்படி?"

"எனக்கு, ஒரு பையன் ரவின்னு பேரு. ஒரு பொண்ணு ரம்யான்னு பேரு".

அவர், இங்கே தான் என சொல்ல வந்த போது, டிரைவர், குறுக்கிட்டு, "அம்மா மணி 8 ஆயிடுச்சு. கோயில் பூட்டியாச்சு".

"இன்னிக்கு ராத்திரி காஞ்சிபுரம் போகணும்".

"டிரைவர் ஒரு பத்து நிமிஷம் பொறுங்க.! நாம் கிளம்பிடலாம். கோயில் மூடினா, பரவாயில்லை. தோழி சந்திப்பு தான் முக்கியம்."

"இவ்வளவு தூரம் வந்துட்டு என் வீட்டுக்கு வராமல் போன எப்படி ருக்கு? வந்து டிபன் சாப்பிட்டு போ ருக்கு." கெஞ்சினான் பாமா.

"இல்லை பாமா!" இப்பவே டயமாச்சு.. பையன் சம்மந்தி வீட்டில இருக்கான். நாளைக்கு 2மணிக்கு பிளையிட். "

"அவனுக்கு, இரண்டு மாசம் முன்பு கல்யாணம் ஆச்சுன்னு சொன்னேன் இல்லையா! ஒப்பிலியப்பனுக்கு வேண்டிக் கிட்டேன். அவருக்கு தங்ககாசு மாலை 10பவுன், தாயாருக்கு வைர

அட்டிகை சாத்திட்டு, இன்னிக்கு கல்யாண உத்ஸவம் செஞ்சுட்டு, 100 பேருக்கு அன்னதானம் பண்ணிட்டு வந்தேன்".

"வருகிற வழியில் சிறுபுலியுர் கோயில் கும்பபாபிஷேகதுக்கு 2லட்சம் கொடுத்துட்டு வரேன்".

என்னதான் நெருங்கிய தோழியாக இருந்தாலும், படிப்பை தவிர மற்ற விஷயங்களில் முரண்பாடு, தர்க்கம் இருவருக்கும் அடிக்கடி வந்து போகும்.

பணக்காரத் தோரணையை, சிறு வயதிலிருந்தே, தம்பட்டம் போட்டு காண்பிக்கும் பழக்கம் உண்டு. அந்த பழக்கம் இப்போதும் உள்ளதே?

நான் எல்லாவற்றையும் உனக்கு கொடுத்து விடுவேன் என்று சொல்கிறார்கள். ஆனால் இதுஎன்னுடையது என்னுடையது என்று சொல்வதை மட்டும் விடுவதில்லை".

"வீண் பெருமை பேசி, தம்பட்டம் அடித்து கொள்பவர்கள் பக்தி, கடவுளிடம் கொண்டு போய் சேர்க்காது. தூய எண்ணமும், உண்மையான பக்தி மட்டுமே, கடவுளிடம் நம்மை கொண்டு சேர்க்கும். மற்றது யாவும் பெருமையே. கடவுளுக்கு பெரியதாக எதையும் செய்ய வேண்டியதில்லை". தூய பக்தி இருக்கும் இடத்தில் கேவலமான நான் செய்தேன் என்னும் மமதை இருக்காது என்று கணவர் சொன்னது ஞாபகத்துக்கு வந்தது பாமாவிற்கு.

"ஒன்னை ஒன்னு கேக்கணும்! ருக்கு கோவிச்சுக்க மாட்டேயே?" "நீ இது மாதிரி பெரிய கோவிலுக்கு தான் டோனட் செய்வியா? சின்ன சின்ன கோயிலுக்கு டொனேஷன் கொடுக்க மாட்டியா?" "முக்காவாசி கிராம கோயிலுக்கு ஒரு வேளை பூஜை கூட நடக்கிறது கூட சிரமமாக இருக்கு" தெரியுமா. ?

"என்ன அப்படி சொல்லிட்டே? நீ சொல்ற மாதிரி

இது மாதிரி சின்ன சின்ன கோயிலுக்கு, பத்தாயிரம், இருபதாயிரம் கொடுக்கலாம். ஆனா, அது உண்மையா பெருமாளுக்கு போய் சேருதா? என்ற சந்தேகம் ஏற்பட்டுருச்சு பாமா?"

ருக்கு இப்படி சொன்னதும் அதிர்ச்சியானாள் பாமா.

ருக்கு தொடர்ந்து பேசினாள். "இரண்டு வருஷம் முன்பு, இந்த வழியா வந்த போது, பக்கத்து ஊர் பெருமாளை சேவிச்சுட்டு, கார்லே உக்காந்து இருக்கும் போது, அர்ச்சகர் தன் கோயிலுக்கு வெள்ளி தட்டு வட்டில் செய்யணும்ன்னு சொன்னார்".

"நான் யோசிக்காமல், நாற்பதாயிரம் கொடுத்தேன். போன் நம்பர் அட்ரஸ் கேட்டார். கிளம்பற அவசரத்துல பேரை மட்டும் சொல்லிட்டு, கிளம்பி போயிட்டேன்".

"நேத்து அந்த கோயிலுக்கு போய், விசாரித்த போது, அந்த அர்ச்சகர் ஊரை விட்டு போயிட்டார். ஏன் அவர் கிட்ட கொடுத்துட்டு போனீங்கன்னு ? இப்ப இருக்கிற அர்ச்சகர் சொன்னார்".

இப்படி ருக்மணி சொன்னதும், பாமாவிற்கு மனசு சங்கடப்பட்டது.

"சரி விடு பாமா! இதை போயீ பெரிசா எடுத்துண்டு! விட்டு தள்ளு.உன் போன் நம்பர் கொடு, நான் ஊர் போனதும் பேசறேன்".

'இந்தா பணம், குழந்தைகளுக்கு ஏதாச்சும் வாங்கி கொடு. "மறுத்த பாமாவிடம் கையில் ரூபாய் 2000 நோட்டை வலுக்கட்டாயமாக திணித்து விட்டு, காரில் கிளம்பி போயிருந்தாள் ருக்மணி.

நீண்ட நாளைக்கு பிறகு, தோழியை சந்தித்தது, சந்தோசத்தை கொடுத்தாலும், தான் இப்படியே

இருந்து விடுவோமோ? என்ற அச்சம் மனதில் வந்து போனது பாமாவுக்கு.

டியூசன் முடிந்து, வந்து இருந்த ரவியும் ரம்யாவும், “அம்மா நாங்க இரண்டு பேரும் சாப்பிட்டாச்சு” என்று சொல்லிவிட்டு படுக்க போயிருந்தார்கள்.

இரவு 08:30 மணி கண்ணன் பட்டாச்சார்யார், உள்ளே வந்தவர், “ஏன் பாமா கோயிலுக்கு வரல. உடம்பு முடியலையா?”

“நடந்ததை சொன்னாள். ஓங்களுக்கு ஏன் இந்த கெட்ட பேர்? அவமானம்? ஏன் இப்படி செஞ்சிங்க?”

"இத பாரு பாமா இரண்டு வருஷம் முன்பு, பக்கத்து ஊர் ராமன் அர்ச்சகர், தன் பெண் கல்யாண விஷயமாக, வெளியூர் போகவேண்டி இருப்பதால், ஒரு வாரம் அவர் கோயிலுக்கும், கைங்கர்யம் செய்யும் படி கெஞ்சினார். என்கிற விசயம் உனக்கும் தெரியும்.

அப்படிப்பட்ட சூழ்நிலையில், கோயிலுக்கு வந்த பெண்மணிக்கு, சேவை செஞ்சு வைச்சேன். அவங்க காரில் உக்காந்து இருக்கும் போது, நான் நம்ம கோயிலுக்கு வெள்ளி வட்டில்கள், படிகங்கள் பண்ணனும்; ஓங்களை மாதிரி பணக்கார மனுஷா, உதவி பண்ணினா, புண்ணியமா போகும்ன்னு சொன்னேன்."

“போற அவசரத்துல 10000/ கட்டு நாலு கொடுத்துட்டு போனாங்க. அட்ரஸ் போன் நம்பர் கேட்டதற்கு, பேர் மட்டும் சொல்லிட்டு வேகமாக போயிட்டாங்க. எங்கிட்ட அவங்க பத்தி எந்த விபரமும் இல்லை”.

நேத்து உன் தோழி, அந்த ஊர்ல விசாரிக்கும் போது, இப்ப இருக்கிற அர்ச்சகர், ராமன் அர்ச்சகர் பெண் கல்யாண விஷயத்தில் அவமானப்பட்டு, ஊரை விட்டு போனதை சொல்லி இருக்கார்.

“உன் தோழி, கோயிலை மாத்தி குழப்பம் கொண்டுள்ளார்.”

“இன்னிக்கு, உன்னோடு அவங்களையும், கோயிலுக்கு கூட்டிட்டு வந்து இருந்தா, இந்த குழப்பம் தீர்ந்து இருக்கும். அதற்கு வாய்ப்பு இல்லாம போச்சு.”

பாமாவிடம், விசும்பலும், அழுகையும், தீவிரமாக காணப்பட்டது.

“இப்ப ஏன் அழற?”

“ஒண்ணுமில்ல”

“நீண்ட நாளைக்கு பிறகு உன் தோழி யை சந்திச்ச சந்தோசத்தை விட, அவள் மாதிரி நம்ம இல்லையே, என்கிற ஆழ் மனது ஏக்கம் இன்னும் உன்கிட்ட இருக்கு பாமா..”

“வாழ்க்கை, சில சமயம் நாம் விரும்புவதை தருவதில்லை; காரணம் நீ அதற்கு தகுதியானவள் அல்ல, என்று கடவுள் நினைத்து, அதை விட சிறந்த ஒன்றுக்கு தகுதி யானவளாக கூட நினைத்து இருக்கலாம்.”

“சோகமும், கவலையும், கோபமும் பொறாமையும் நன்மை தரும் உணர்வுகள் அல்ல”

"தெரியாமலா சொன்னான் ஒரு தத்துவ ஞானி.

“இருக்கிற நாளை சிரித்து மகிழ்ச்சி யாக்கி வாழ்ந்து விடு” என்று.

“நாமே ஏன் ஏழையா பிறந்தோம் ருக்மணி மாதிரி இருக்க முடியாதா? என்று உன் உள் மனதில் ஆழமான வடு இருக்கு.”

“கடவுளுக்கு தெரியும் எப்படி எந்த சூழ்நிலையில், வசதியையும், பணத்தையும், கொடுக்க

வேண்டுமென்று.”

தினமும் எந்த பிரதி பலன் எதிர்பார்க்கமா, பெருமாளுக்கு கைகங்கர்யம் செய்யும், எல்லா அர்ச்சகர்களும் ஏழை தான். ஆனால் அவங்க கிட்ட பணம் கிடையாது.

“எவ்வளவு பணக்காரங்களுக்கு, பெருமாளை தொட்டு அபிஷேகம் பண்ணும் பாக்யம் கிடைக்கும்?” உண்மையில் நாம் தான் பணக்காரர்கள்.

“இன்னொரு விஷயம் சொல்றேன் கேட்டுக்கோ”. "ஒரு செல்வந்தர்க்கு நீண்ட நாள் கழித்து, பிறந்த ஆண் குழந்தைக்கு, முடி இறக்கி, காது குத்துவதற்கு முன், அந்த கோயிலின் குளத்தில் குழந்தை தவறி விழ போகும் போது, டிரைவர் அந்த குழந்தையை காப்பாத்தி, கரைக்கு கொண்டு வந்தார்;

"என் குலக் கொழுந்து, அதை காப்பாத்தட்டே; இந்தா பிளாங் செக் ரூபாய் 1 லட்சம் வரைக்கும், எடுத்துக்கலாம்ன்னு செக் கொடுத்தார்.

முதலில் மறுத்த டிரைவர் முதலாளி கட்டாயப்படுத்தி கொடுத்த பின், வாங்கி சட்டை பையில் வைத்து கொண்டு, அந்த பணத்திற்கு என்னன்ன செலவு பண்ணலாம், என்ற சிந்தனையில் காரை ஓட்டி வர, குறுக்கே ஒரு பிச்சைக்காரன் மீது இடிக்க, டிரைவர் பதறி போனார்; “ஐயா பெரியவரே ! கவனம் சிதறி ஒங்க மேல இடிச்சுட்டேன். என்னை மன்னிச்சுடுங்க; ஏதும் காயம் பட்டுச்சா?” “இந்தாங்க எங்க முதலாளி கொடுத்த செக். இதுல ரூபாய் 1லட்சம் வரைக்கும் எடுத்துக்கலாம்.”

“டிரைவர் தம்பி, எனக்கு லேசான காயம்தான். இந்த செக் நீயே வச்சுக்கோ. ஆஸ்பத்திரிக்கு போயி ஊசி போட ரூபாய் 100 போதும்.”

“இதுல யார் ஒசத்தி? செல்வந்தரா, ? டிரைவரா?

பிச்சைக்காரனா?”

இதற்கான பதிலும் நானே சொல்றேன்; குட் பெட்டர், பெஸ்ட்.. செல்வந்தர் செயல் குட், டிரைவர் செயல் பெட்டர், ஆனால் பிச்சைக்காரன் செயல் பெஸ்ட்.. ஏன் சொல்லு. அவன் தன் தேவைக்கு மட்டும் தான் பணம் வேணும்ன்னு, தன் மனதிருப்தியுடன் கேட்டான்; “இருக்கிறதை வைச்சு நிம்மதியா வாழனும். அவன் தான் ஒசத்தி.”

“இத பாரு பாமா இன்னிக்கு மட்டுமல்ல எந்த நாளும் இந்த மனக்குறை வரக்கூடாது.”

“நான் சொல்லும் ஆறுதல் என்பது உன் காயத்துக்கு தற்காலிக தீர்வு. தான்”

“மாறுதல் என்பது உன் காயத்துக்கு நிரந்தர தீர்வு.”

" உனக்குள் மாற்றம் வரணும் அதை நீ புரிஞ்சிக்க. "

“இன்னொன்னு என்ன கேட்டே ?”

உன் தோழி மாதிரி இருக்கமாட்டே. இருக்கவும் வேண்டாம்."

“நமக்கு செல்வம்தானே வேணும்ன்னு கேட்டே.”

“ஆமாம்”

“இந்தா”

வலது கையில் ஏதோ வைத்து மூடினார் கண்ணன் அர்ச்சகர்.

விசும்பலை நிறுத்தி விட்டு, தன் கையை திறந்து பார்த்தாள் பாமா.

அங்கே செங்கமலதாயாருக்கு அன்று

வெள்ளிக்கிழமை சாத்திய மஞ்சள் காப்பு. இது தான் திருத்தக்க செல்வம்.

கண்ணன் அர்ச்சகர் காலடியில் சரிந்து, அவரை நமஸ்காரம் செய்தாள் பாமா.

# சாதாரணமல்ல சாதா ரணமல்ல

ஆஸ்பத்திரியிலருந்து, அப்பாவுடன் அப்போது தான் வீட்டுக்கு திரும்பியிருந்தாள் சிவகாமி.

“இதப்பாரு சிவகாமி” அம்மாவுக்கும்நேத்திலிருந்து, காய்ச்சல் விட்ட பாடில்லை. நான் அம்மாவை பாத்துக்கணும். நீ உடம்பை கவனிச்சுக்கோ. ரொம்ப பலவீனமாக இருக்கே. கரெக்ட் டயத்துக்கு மருந்து மாத்திரை சாப்பிடு. கடினமான வேலை செய்யாதே. அனாவசியமா கவலை படாதே. மாப்பிள்ளை கிட்டே சண்டை போடாதே".

அப்பாவின் நெகிழ்ச்சியான பேச்சில், கண் கலங்கியவாறே, " ஓங்க கஷ்டம் எனக்கும் புரியுது. அஞ்சு வருஷம், கல்யாண வாழ்க்கையில், நாலு தடவை, கருச்சிதைவு ஆயிடுச்சே "

“தெய்வ குத்தம் ஏதாச்சும் இருக்குமோ?”

“எனக்கு பிள்ளை பாக்கியம் கிடைக்காதா?”

“மனரீதியாக ரொம்ப கஷ்டபட்டுட்டேன்”.

“உன்னுடைய கஷ்டம், புரிஞ்சவன் நான்.. எல்லாத் துக்கும் ஒரு தீர்வு உண்டு”.

“மாப்ளக்கிட்டே சொல்லிடு. அடுத்த வாரம்

வரேன்மா” கிளம்பி போயிருந்தார்.

இரவு லேட்டா வந்த தங்கராசு, காலையில் அஞ்சு மணிக்கு சிவகாமியை எழுப்பி, “இன்னிக்கு ஆபீஸ்ல, இன்ஸ்பெக்ஷன். நான் கரெக்ட் டயத்துக்கு போகணும்” என்று சொல்லிவிட்டு கிளம்பி போயிருந்தான்.

என்ன மனுசன்.? தான் இப்படிப்பட்ட நிலையில், ஆஸ்பத்திரியிலிருந்து வந்து இருக்கும் போது, ஒரு வார்த்தை தன்னை பற்றியோ, தன் உடம்பு பற்றியோ, விசாரிக்க கூடதெரியவில்லையே?

என்று ஆதங்கப்பட்டாள் சிவகாமி.

கதிரேசன், தனம் தம்பதியருக்கு பிறந்த ஒரே பெண் சிவகாமி. நல்ல மாங்குடியில் ஆரம்ப பள்ளியில் ஆசிரியராக பணி புரிந்து, வேறு ஊரில் பணி ஓய்விற்கு பிறகு, கிராமத்தில் இருந்த, கொஞ்ச நிலம் விற்ற பணம், தன் பி.எப் பணம் போட்டு, டவுனில், சின்னதாய் ஒரு வீடுகட்டிக்கொண்டு, சிவகாமி தன் சொந்த காலில் நிற்க்கும் அளவிற்கு, டீச்சர் ட்ரைனிங், தையல் வகுப்பு, கம்ப்யூட்டர் படிப்பு, அஞ்சல் கல்வி மூலம் பட்டபடிப்பு என தயாரபடுத்தி இருந்தார்.

சிவகாமியும், எல்லாவற்றிலும் நன்கு தேர்ச்சி பெற்று இருந்தாள்.

சிவகாமியின் குணம், யார் பொய் சொன்னாலும் ஆகாது. ஆரம்ப பள்ளியில், அவளுடைய ஆசிரியர் பாஸ்கர், சொல்லிக் கொடுத்ததை, தான் வளர்ந்த பிறகும், வேதவாக்காக, மனதில் வைத்து கொண்டு யிருந்தாள்.

அப்பா ஒரு முறை, எதற்க்காகவோ பொய் சொன்னார், என்று இரண்டு நாள் சாப்பிடாமல் இருந்தாள்.

அந்த அளவிற்க்கு, அவள் ஆழ்மனதில், யார் பொய் பேசினாலும், அவளால் ஜீரணிக்க முடியாது. அப்படி ஒரு சென்சிடிவ் கேரக்டர்.

வீட்டுக்கு திரும்பிய கதிரேசனிடம், தனம் மெல்ல எழுந்து, " சிவகாமிக்கு இப்ப எப்படி இருக்கு?"

மனம் நெகிழ்ச்சியான தனத்தின், கண்ணீர் துளிகளை, துடைத்து விட்டார்..

அவருடைய நினைவுகள் 5 வருடம் பின் நோக்கி சென்றது.

“ஓங்க பொண்ணுக்கு நல்ல வரன் கொண்டு வந்திருக்கேன். பையன் மருதூர் போஸ்ட் ஆபீஸ்ல, போஸ்ட்மேன் வேலை பாக்கிறான் டிகிரி முடிச்சு இருக்கான்.”

“அப்பா அம்மா கிடையாது. எனவே பிக்கு பிடுங்கல் கிடையாது. சொந்தம்ன்னு சொல்லிக்க, வளர்த்த சித்தப்பா தான்.”

"அவர் வீட்டுக்கு பக்கத்துல, உள்ள காலி மனையில் சின்னதா ஒருவீடு.

“பையனுக்கு சென்ட்ரல் கவர்ன்மெண்ட் வேலை. நாளைக்கு ப்ரோமோஷன். சலுகை இருக்கு.” போட்டோவையும் ஜாதகதையும் தரகர்கொடுத்துவிட்டுபோயிருந்தார்.

“ஜாதகதை விடுங்க. நம்ம பொண்ணுக்கு பையன் பிடிச்சிருக்கான்னு கேட்போம்.” என்று தனம் சொல்லவே

“ஆமாம் ஆமாம்” என்றார் கதிரேசன்.

“வரன் நல்ல வரனாக தெரியுது.”

தங்கராசு குடும்பம், வசதி குறைவு என்றாலும்,

சிவகாமிக்கு பையன் போட்டோ பிடித்து போகவே, மறு நாள் காலையில் முதல்வேலையாக, மருதூர் போஸ்டாபீஸ் போய், விசாரித்து விட்டு, வந்திருந்தார்.

"தனம், நம்ம தரகர் சொன்ன மாதிரி, பையனுக்கு போஸ்ட்மேன் வேலையாம். கவுண்டரில் போஸ்ட்மாஸ்டர் சொன்னார்.

மாநிறம் என்றாலும், போட்டோவை விட நேரில் பார்க்க நல்லா தான் இருக்கான். நான் யாருன்னு காட்டிக்கலே."

“சந்தோசங்க.”

அடுத்த வாரமே, தங்கராசு குடும்பம் பெண் பார்க்க வந்ததும், சிவகாமிக்கு பிடித்து போனதும், அதற்கு அடுத்த வாரமே, கல்யாணம் முடிந்ததும், எல்லாமே ஒரு கனவு மாதிரி இருந்தது கதிரேசன் குடும்பத்துக்கு.

கல்யாணமாகி மறு வீடு, சென்ற போது தான், கதிரேசன் குடும்பத்தாருக்கு, தாங்கள் ஏமாற்றப்பட்டு இருக்கிறோம், என்று தெரிய வந்தது. கல்யாணத்துக்கு முன்பு காண்பித்த வீடும், இப்போது உள்ள வீடும், வேறு விதமாக இருந்தது..

மேலும், தங்கராசு டிபார்ட்மென்ட் போஸ்ட்மேன் இல்லை என்றும், அவன் புற நிலை ஊழியர் என்றும், டவுனில் உள்ள, ஆர். எம். எஸ் ஆஃபீசிலிருந்து, மருதூர் போஸ்ட் ஆபீஸ்க்கு, மெயில் பை எடுத்து வருவதும். ரெகுலர் போஸ்ட்மேன் லீவில் போகும் போது, ஆக்ட்டிங் போஸ்ட்மேன் ஆக வேலை பார்ப்பது வழக்கம் என்றும், அது மாதிரியான சூழ்நிலை யில் தான், இந்த கல்யாணம் நடந்துள்ளது.என்று தெரிய வந்த போது, மனம் நொந்து போனார்.

சில நேரங்களில் தாங்கள், எவ்வளவு புத்திசாலியாக, இருந்தாலும் அவசர கோலத்தில்,

சரியாக, விசாரணை செய்யாமல், தன் கண்களை மறைத்து விட்டதை, எண்ணிவருத்தமடைந்தார்.

சிவகாமிக்கு தங்கராசு மெயில் ரன்னர் என்பதோ, சம்பளம் குறைவு என்பதோ பிரச்சனை இல்லை.

பொய் பேசுபவர்கள் யாராக இருந்தாலும், பிடிக்காது, என்ற மனநிலையில் இருக்கும் தன்னிடம், கணவனே பொய் சொல்லிவிட்டான், என்று தெரிய வந்ததும் கோபத்தின் உச்சிக்கு போயீருந்தாள்.

ஆனாலும் தான் இன்னும் 6மாதத்தில், போஸ்ட்மெனாக வாய்ப்பு உள்ளதால், கௌரவத்திற்க்காக, கல்யாண பத்திரிக்கையில் போட்டு கொண்டதாகவும், தன்னை மன்னிக்கும் படி, தங்கராசு கேட்டு கொண்டான். .

இனி நடந்தது பற்றி, பேசி பிரயோஜனம் இல்லை, என்ற முடிவுக்கு வந்த கதிரேசன்; இது காலம் செய்த கோலம் கடவுள் செய்த குற்றம் என நினைத்து ஆறுதல் ஆனார்.

"மாப்ளே இந்த கிராமத்தில், எந்த வசதியும் இல்லை. ஒங்க இடத்திலுருந்து வேலை பாக்கிற போஸ்ட் ஆபீஸ் 5 கி. மீ. அங்கிருந்து ஆர். எம். எஸ் 15 கீ. மீ.

மொத்தம் ஒரு நாளைக்கு போய்ட்டு வர 70கி.மீ வண்டியில் போறீங்க. டைம் வேஸ்ட். உடம்புக்கும் ஆகாது. பேசாம டவுனில் ஜாகை வெச்சு தரோம். என்ன சொல்றீங்க. "

“இதப்பாருங்க மாமா”! அனாதையாக இருந்த என்னை, என் சித்தப்பா தான் வளர்த்து, ஆளாக்கி படிக்க வைச்சு, வேலையும் வாங்கி கொடுத்துருக்காரு!. அவங்க குடும்பத்தை பாத்துக்கணும்ங்கிற, ஒரே காரணம்தான், இந்த இடத்தில் வீடு கட்டி இருக்கேன். ஒரு நாளும்

அவங்களை விட்டு வரமாட்டேன். இதுக்கு மேல, இந்த பேச்சை எடுக்க வேண்டாம். "

அவன் குரலில் கண்டிப்பு தெரிந்தது.

தங்களுடைய ஆசையும் முயற்சியும் பலன் அளிக்காமால் போகவே, சிவகாமியை, சமாதானம் செய்து விட்டு, கனத்த மனதுடன், ஊர் திரும்பியிருந்தார்கள் கதிரேசனும் தனமும்.

கல்யாணம் ஆன, இந்த அஞ்சு வருடத்தில், எதாவது ஒரு காரணத்தினால், கருச்சிதைவு ஏற்பட்டு, ஆஸ்பத்திரியில் சேர்த்து, தங்கள் வீட்டில் தங்க வைத்து, உடம்பை கவனித்து, புகுந்த வீட்டில் கொண்டு விடுவதும், இப்படி நடந்த பிறகும், தங்கராசு பிடிவாதமாய் தனிக்குடித்தனம் வருவதற்கு, முரண்டு பிடித்ததும், கதிரேசனுக்கு வேதனை யாக தான் இருந்தது.

என்றைக்கு தான் நல்ல தீர்வு கிடைக்கும்? என்ற கேள்வி மனதை அரித்து கொண்டது.

அன்று பார்க்கில், நடை பயிற்சி முடிந்தவுடன், எதிரில் தென்பட்டார் வேதநாயகம்.பக்கத்துத் தெரு நீண்ட நாள் நண்பர்.

“என்ன கதிரேசா? பத்து நாளா உன்னை பாக்கமுடியலே?”

" வாங்கண்ணே ! இப்படி பெஞ்ச்ல உக்காருங்க "

நடந்த விஷயத்தை சொன்னதும், வருத்தப்பட்ட, வேதநாயகம்.

ம்ம்ம்ம்"

“நான் தங்கி இருக்கிற காலனியில் தான் போஸ்டல் ஆஃபீஸர் இருக்கார். நம்ம பஜார் போஸ்ட் ஆபீஸ்ல இருக்கிற இ. டி பேக்கர், ப்ரோமஷன் ஆகி,

தஞ்சாவூர் ஹெட் ஆபீஸ் போயிட்டாராம். காலியான அந்த போஸ்டக்கு உன் மாப்பிள்ளையை மாற்ற சொல்லி வேண்டுகோள் வைப்போம்.”

“நீ அடுத்த வாரம் சிவகாமியை மட்டும் அழைச்சிட்டு வா. பேசலாம்.”

வேதநாயகம் சொன்ன மாதிரியே, மறுவாரம் ஒரு ஞாயிறு அன்று, சிவகாமி, கதிரேசன், வேதநாயகம் மூன்று பேரும் அந்த உயர் அதிகாரியை சந்திக்க போயிருந்தனர்.

சிவகாமியின் கதையை கேட்ட அந்த உயர் அதிகாரி, வருத்தப்பட்டு, “மேற்படி அந்த போஸ்டக்கு தங்கராசு வை விட நாலஞ்சு சீனியர் அப்ளை பண்ணி இருக்காங்களே? இப்ப நான் என்ன செய்ய முடியும்?”

கதிரேசன், பதட்டத்துடன், “சார் சார் மன ரீதியாக என் பொண்ணு ரொம்ப கஷ்டபட்டுட்டா, இடமாற்றம் நல்லதுன்னு நினைச்சு, ட்ரான்ஸபர் கேக்கிறோம். பெரிய மனசு பண்ணி, எப்படியாவது உதவி பண்ணுங்க சார்” தழு தழுத்த குரலில் கெஞ்சினார்.

“ஒங்க நிலைமை புரியுது கதிரேசன் சார். நானும் மெடிக்கல் கிரௌண்ட் காரணம் காட்டி, அல்லது இன்டரஸ்ட் ஆப் சர்வீஸ் காரணம் காட்டி, ட்ரான்ஸபர் கொடுக்கலாம் ஆனா ம்ம்ம்ம்.”

தயங்கினார் அந்த அதிகாரி.

“என்ன சார் தயக்கமா சொல்றீங்க?”

“ஒண்ணுமில்ல சொல்றதா? வேண்டாமான்னு யோசிக்கிறேன்”.

“சார் நீங்க என் கணவரை பற்றி, ஏதோ சொல்ல வரீங்க டிரான்ஸ்பர் கூட வேண்டாம் சார்.. என்னன்னு

சொல்லுங்க சார்.”

“ஒண்ணுமில்ல எனக்கு முன்னாடி வேலை பார்த்து வந்த, நல்ல மாங்குடி பாஸ்கர் சாரை, கிரிமினல் புத்தி கொண்டு சாக அடிச்சவன். தங்கராசு.”

இப்ப பாக்கிற வேலைக்கு, தகுதியே இல்லாத தங்கராசு, மேல் அதிகாரியை சிபாரிசு பிடித்து, அவர் வாய் மொழி உத்திரவை, நிராகரித்த, பாஸ்கர் சார், பின் மேல் அதிகாரி யின், எழுத்து மூலம் வந்த உத்திரவை, கருத்தில் கொண்டு தற்காலிக போஸ்டிங் போடும் சூழ்நிலைக்கு தள்ள பட்டு இருந்தார்."

"ஆனால் தகுதியே இல்லாத, தங்கராசு தனக்கு வேலை கொடுத்தவருக்கு, நன்றி சொல்லாமல், நிரந்தர உத்தரவுக்கு பல்வேறு டாக்குமெண்ட் தேவை யில்லாமல் கேட்பதாகவும், லஞ்சம் வேறு கேட்பதாகவும், தன் சித்தப்பா துணையுடன், சி. பி. ஐ ஆபீஸ் சென்று அங்கேயும், ஏதோ காரணம் காட்டி, புகார் கொடுக்க, அவர்கள் ஆலோசணைப்படி, ஒரு நாள் தங்கராசு மைதடவிய பணம் பத்தாயிரம், அத்துடன் பழங்களுடன் பாஸ்கர் சாரிடம் கொடுக்க,

அவர் அதிர்ச்சி யாகி, “யார் கேட்டா உன் பணமும் பழங்களும்” என்று கையினால் எடுத்து திருப்பி கொடுக்க, காத்திருந்த அதிகாரிகள், இவரை அரெஸ்ட் செய்ய.

"சார் நான் லஞ்சம் எதுவும் வாங்கல என்று மன்றாடியும், வாதித்தும், அவர்கள் காதில் வாங்கி கொள்ளவில்லை.

தனக்கு ஒரு அவமானம், நடந்து விட்டதே, என்று நெஞ்சை பிடித்தவர் அதே இடத்தில் ஹார்ட் அட்டாக்கில் இறந்து போக, “4வயது பையனையும் 3 வயது பெண்ணையும் ஸ்கூலில் இருந்து அழைத்து

வர போன அவர் மனைவியும் அதிர்ச்சி தாங்காமல், ஹார்ட் அட்டாக்கில் இறந்து போக, குழந்தைகள் அனாதை ஆனது ஒரு பெரிய கதை.”

“தங்கராசு மீது இலாகா விசாரணை நடந்துகிட்டு இருக்கு.”

"சொந்தம்ன்னு சொல்லிக்க, யாரும் இல்லாத காரணத்தினால், அந்த இரண்டு குழந்தைகளை, சமூக ஆர்வலர் நடத்தும் ஆசிரமம், ஒன்றில் விட்டு இருக்கிறோம்.

“எங்க ஆஃபீஸ்ர் அஸோஸியேஷன் மூலம், அவங்க பராமரிப்பு, படிப்பு செலவை பாத்துகிட்டு வரோம்”.

“தன் சொத்து முழுவதும், கல்வி மேம்பாட்டுக்கு, எழுதி கொடுத்த நல்லமாங்குடி விஸ்வநாதன் சாரின் மகன் தான் பாஸ்கர் சார்”.

“பாஸ்கர் சாரும் ஆரம்பகாலங்களில், ஆரம்ப பள்ளி ஆசிரியராக, சம்பளம் வாங்காமல், கல்வி பணி புரிந்தவர்.”

“பின்னர் டைரக்ட் ரெக்ருட்மென்ட் மூலம் போஸ்டல் டிபார்ட்மென்டில் ஆஃபீஸ்ர் ஆகி, அனாதையான வட இந்திய பெண்ணை, கல்யாணம் செய்து கொண்டு, வடஇந்தியாவில் பணி புரிந்து விட்டு, 5 வருடம் முன்பு இங்கு மாற்றல்ஆகிவந்தார்”.

“வந்த முதல் வருடத்திலேயே இது மாதிரி சோகம் நடந்து போச்சு.”

அதிகாரி சொல்லி முடித்ததும், சிவகாமி அதிர்ச்சி ஆகி,

" நாங்களும் நல்ல மாங்குடி தான் சார். "

“நீங்க சொல்ற பாஸ்கர் சார், எனக்கும் எழுத்து

அறிவு தந்தவர்..”

“உரத்த சிந்தனையும், மனித நேயமும் கொண்ட, எங்க பாஸ்கர் சார், எப்போதும் உண்மையே பேசு. வாழ்க்கையில் உண்மையான அழகு, நல்ல எண்ணமும் நல்ல சிந்தனைகளும், பிறருக்கு உதவும் மனப்பான்மையும் தான், என்பார். அதை நான் வேத வாக்காக கொண்டு வாழ்ந்து வருகிறேன்.”

“அப்படி பட்டவர் எப்படி லஞ்சம் கேட்டிருக்க முடியும்?”

“எனக்கு படிப்பு சொல்லிக்கொடுத்த என் ஆசிரியரை, சூழ்ச்சி செய்து, என் புருஷன் சாக அடிச்சுருக்காரு. இது கொலை செய்த பாவம்”.

கதிரேசா, மெரிட்ல இருந்து, வேலை கிடைக்காத அந்த ஏழை பையன் “சாபம் கூட ஒங்க பொண்ணுக்கு இந்த மாதிரி நிலைமையை கொண்டுவிட்டுஇருக்கலாம்.”என்று வேதநாயகம் சொல்ல,

“இருக்கலாம்” என்று சிவகாமி ஆமோதித்து விட்டு, இவ்வளவு விஷயங்கள் நடந்து இருக்கும் போது, இந்நாள் வரை என்னிடம் சொல்ல வில்லை".

எல்லோரிடமும் இறுக்கமான சூழ்நிலை காணப்பட்டது.

சில வினாடிகள் கழித்து சிவகாமி பேசும் போது, “என் கணவரின் சுய ரூபத்தையும், கயமையும் புரிய வைச்சுட்டிங்க. நான் ஒரு முடிவு எடுத்து இருக்கேன்.”

“தயவு செய்து அந்த குழந்தைகள் தங்கி உள்ள ஆசிரமம் அட்ரஸ் கொடுங்க சார்”.

அதிகாரி அட்ரஸ் கொடுத்ததும்,

நன்றி சொல்லிவிட்டு மூன்று பேரும் விடை

பெற்றார்கள்.

சிவகாமி ஆத்திரத்தோடு, எல்லாவற்றையும் அவனிடம் சொன்ன போது, அவன் எந்த சலனமின்றி இருந்தான்.

“ஆமாம் நீங்க கேள்வி பட்டது எல்லாம் உண்மை தான். ஒருவன் முன்னேறணும்ன்னா, இன்னொருத்தரை சாக அடிச்சா தான் நடக்கும்”.

“என்ன பேசறீங்க? பேச்சில் வன்மமும் க்ரோதபுத்தியும் தான் தெரியுது.”

“தகுதி அடிப்படை யில் இன்னொருவர் மெரிட்டுடன் இருக்கும் போது, அவருக்கு தான், அந்த வேலை கிடைக்கும் என்று தெரிந்தும், சிபாரிசு மூலம், ஜெயித்து இருக்கீங்க.”

“உண்மையான திறமைசாலியின் வேதனையை நினைச்சு பாத்தீங்களா?”

“நாம் தவறு செஞ்சுட்டோமேஎன்கிற பீலிங் துளி கூட இல்லையே?”

“இதப்பாரு சிவகாமி! பிறரை பத்தி நான் ஏன் யோசிக்கணும்? என் நேரம் நல்லா இருந்துச்சு. வேலை கிடைச்சது.”

“ஆயிரம் பொய் சொல்லி கல்யாணம் பண்ணுவாங்கன்னு கேள்வி பட்டேன். நானும் ஒரே ஒரு பொய் சொல்லி கல்யாணமும் பண்ணி கிட்டேன்”.

“ஆனா நீங்க நேர்மையான வழியில் வேலை வாங்காம, குறுக்கு வழியில் வாங்கிட்டு, பாஸ்கர் சார் மேல, பொய் குற்றசாட்டு சுமத்தி, அவரை சாக அடிச்சிட்டேங்களே? அது பெரிய மன்னிக்க முடியாத குற்றம்”.

“அவர் என்னை, அஞ்சாறு தடவை அலைய விட்டாரன்னு, காரணத்தை சி.பி.ஐ கிட்ட சொல்லி பழி வாங்கினேன்”.

“பழி வாங்குதல் என்பது அற்பர்கள் காணும் ஆனந்தம். அதை தான் நீங்க செஞ்சுருக்கிங்கே.”

“மனுஷன் தன் செயல் மூலம், பாவம் பண்ணும் போது புரியாது. பாவத்தை அனுபவிக்கும் போது, தான் தெரியும்ன்னு இயேசுநாதர் சொல்லியிருக்கிறார்”.

“நீ பாவத்தை செஞ்சுட்டு வந்து இருக்கே”.

உன்னை கட்டிக்கிட்ட பாவத்துக்கு, பாவத்தின் சம்பளமாக, அனுபவிக்கும் வலி எனக்குதானே".

“இல்லாட்டி போனா இந்த 5 வருஷத்திலே தொடர்ந்து கருச்சிதைவு வெவேறு காரணங்களி னால் ஏற்பட்டு இருக்குமா?”

" நீயோ தெரிஞ்சு, பாவத்தை பண்ணிட்டு வந்துருக்கே?"மன்னிப்பு கிடையாது.

" அது நம்ம குடும்பத்க்கு எப்படி வேதனையை கொடுத்து இருக்கு பாத்தியா? "

“ஒனக்கு இனி அந்த வேலையை பாக்கிற யோக்கிதை கிடையாது. உண்மையா மனச்சாட்சி க்கு பயப்படுகிற மனுசனா இருந்தா, இந்த வேலையை ராஜினாமா பண்ணிட்டு, வேற வேலை தேடு.”

“அப்பதான் என் வாத்தியார் ஆத்மா உன்னை மன்னிக்கும்”. சிவகாமி கோபத்தின் உச்சிக்கே போய் வார்த்தைகளை வெடித்தாள்.

“அடி போடி பைத்தியகாரி,! எதுக்கு நான் வேலைய ராஜினாமா செய்யணும்? இன்னும் 6 மாதத்திலே போஸ்ட்மேன் ஆக போறேன். நான் என்ன

பைத்தியக்காரனா?”

“யானை தன் தலையிலே மண்ணை வாரி போட்டுக்கிட்ட மாதிரில இருக்கு உன்னுடைய பேச்சும், யோசனையும்”.

“அந்த அதிகாரி இறந்து போனது அவருடைய விதி”.

“ஒன்னை ஒன்னு கேக்கிறேன் இந்த பாஸ்கர் சாரே, ஒங்க வாத்தியாரா இல்லாம இருந்தா, நீ இப்படி பேசுவீயா?”

"எந்த அதிகாரியாக இருந்தாலும், இயற்கை மரணமாக, இருந்திருந்தா நீ காரணமில்லைன்னு, சொல்வேன். ஆனா நீ மன உளைச்சல் கொடுத்து, இரண்டு உயிரைகொன்னுஇருக்கே.

21ம் நூற்றாண்டிலே, தெய்வக்குத்தம், பாவம், பிராயச்சித்தம், சாபவிமோசம் ஆத்மா சாந்தின்னு பேசிகிட்டு. "

“இந்துக்கள் பல பேர் நம்பிக்கையில் தான் வாழறாங்க. அந்த நம்பிக்கையை கேலி பண்ணாதே”.

வாதங்கள் வார்த்தைகளாக வெடித்தன.

“இது தான் முடிவான பதிலா?”

“ஆமாம்.”

“இதபாருங்க மாப்ளே,”! சிவகாமியின் ஆழ் மனதில் ஏற்பட்ட புண். இதை நீங்க தான் சரிப்படுத்த வேண்டும்." ராஜினாமா செய்யுங்க. ஒங்களுக்கு, ஒரு பிசினஸ் ஏற்பாடு செஞ்சு தரேன். ஊரோட வந்துடுங்க!"

“ஒங்க அப்பா, எனக்கு பிச்சை போடற மாதிரி பிசினஸ் வைச்சு கொடுப்பாராம்! நான் என்ன

முட்டாளா? ஒங்க பேச்சை கேக்க?”

“மாதா பிதா குரு தெய்வம்ன்னு சொல்வாங்க. அப்பா, அம்மா விற்கு பிறகு, குரு தான் முக்கியம். இறந்து போனவர் யாரோ இல்லை. எனக்கு எழுத்தறிவித்த கடவுள்; அந்த கடவுளை அநியாயமாக சாக அடுச்சிட்டே. இன்னிக்கு அந்த குழந்தைகள் அனாதையாக நிக்க, நீ தான் முழு காரணம்.”

“ஒருவனின் உள்ள தூயமை தான் அவனது ஒழுக்கத்தின் உயிர்நாடின்னு எங்கவாத்தியார் அடிக்கடி சொல்வார்”.

“ஒங்கிட்ட ஒழுக்கமும் இல்லங்கறது மட்டுமல்லாமல். குரோதம், வன்மம், பொய்மை, கயமை, திமிரு பேச்சு நிறைய இருக்கு”

“போலி கவுரவத் திற்காக பாக்காத வேலையை, பார்த்ததாக, கல்யாண பத்திரிகையில் போட்டு, எங்களை ஏமாத்தினே. நீ பொய்யிலே பிறந்து பொய்யிலே வளர்ந்த ஆளு. முதல் கோணல், முற்றும் கோணல் மாதிரி ஆயிடுச்சு..”

“இவ்வளவு கேவலமான வேலையை செஞ்ச நீ, நாளைக்கு வேறு ஏதாவது செஞ்சாலும் செய்வே.! கீழ்தரமான புத்தி உள்ள உன்னுடன் இனி நான் வாழ விரும்பல”.

“நீ அந்த குடும்பத்துக்குஏற்படுத்திய ரணம் சாதா ரணமல்ல; அதே சமயம் நான் இப்ப எடுத்திருக்கும் முடிவு சாதாரணமல்ல”. “நீ கட்டிய தாலி என் கழுத்தில் இருக்கும் போது, நீ செஞ்ச பாவத்தை நினைச்சு, நினைச்சு, அது கம்பளி பூச்சி நெளிகிற மாதிரி இருக்கு”.

“அது என் கழுத்திலே இருக்கிறது எனக்கு அரு வெறுப்பா இருக்கு”.

“இந்தா நீ கட்டிய தாலி” தாலியை தூக்கி எறிய, அது அவன் முகத்தில் விழுந்தது.

கூடிய சீக்கிரம் விவாகரத்து நோட்டீஸ் வரும் கோர்ட்ல சந்திக்கலாம்".

“வாப்பா, ! ஆசிரமத்தில் இருக்கும் பாஸ்கர் சாரின் குழந்தைகளுக்கு நான் தான் இனி எல்லாமே.”

"குழந்தைகளே அழைத்து வர, கம்பீரமான நடையுடன், தெருவில் சிவகாமியும், கதிரேசனும், நடந்து போனதை பார்த்து, அதிர்ச்சியாகி செய்வதயறியாது, சிலையாகி நின்றான் தங்கராசு.

# அஞ்சலை

"நம்ம ஸ்கூல்ல, நாளைக்கு சுதந்திர தினம் கொண்டாடுகிறோம்!

நீங்க வந்து, கொடி ஏத்தனும்ன்னு," ஹெட் மாஸ்டரம்மா கேட்டு கிட்டதால, வேக வேகமா பஞ்சாயத்து யூனியன் பள்ளிக்கூடத்துக்கு, போன அஞ்சலை, அழுது கொண்டே திரும்பியதை பார்த்த தங்கராசுவும், முருகேசனும், பதட்டமாக காணப்பட்டார்கள்.

“நீங்க வரவேண்டாம்” பழைய பஞ்சாயத்து தலைவர் வடிவேலு, கொடி ஏத்தறாரு. திரும்பி போயிடுங்கம்மா.! அவங்களை மீறி நான் ஒன்னும் செய்யமுடியாதும்மா!. கோவிச்சுக்காதீங்கன்னு சொல்லிட்டாங்களே மச்சான்.". .

"ஏம்மா ? இந்த வடிவேலு இப்படி பன்றாரு.?

கடந்தபோன குடியரசு தினத்துக்கும், கொடி ஏத்த விடாம, குறுக்கால நின்னு, மேடையை விட்டு இறங்க சொன்னாரு நாமளும் பேசாம வந்துட்டோம்“.”மறுபடியும் பிரச்சனையை கிளப்பி விடறாரு. "

10 வயது பையன் முருகேசன், விபரம் புரியாமல், ஆதங்கத்தில் வருத்தபட்ட போது அஞ்சலை அவனை தேற்றினாள்.

“இதுக்கு தான், நான் பஞ்சாயத்து தலைவி

பதவிக்கு போட்டி போட மாட்டேன்னுசொன்னேன்”.

“நம்ம சத்யமூர்த்தி அய்யா தானே, என்னை இந்த பதவிக்கு நிக்க சொன்னாரு. அவர் கிட்ட நடந்ததை சொல்வோம். வாங்க.”

“ஆனா அவர் நாளைக்கு தானே ஊர் வாரேன்ன்னு தகவல் சொன்னாரு அஞ்சலை”

இரண்டு நாள் கழித்து நடந்த அவமானங்களை சொல்வதற்காக சத்யமூர்த்தி வீட்டுக்கு கணவருடன் கிளம்பினாள் அஞ்சலை.

————-*—-

அந்த ஊரை பூர்வீகமாக கொண்ட சத்தியமூர்த்தி, ஓய்வு பெற்ற மத்ய அரசு ஊழியர். விவசாயத்தின் மேல் உள்ள ஈடுபாடு காரணமாக, விவசாயத்தையும் செய்து கொண்டு. மாலை நேரங்களில் 6 ம் வகுப்பு முதல் 12 ம் வகுப்பு வரை இலவசமாக டியுசனும் எடுப்பவர்.

மொத்தத்தில் ஊரில் ஏற்படும் எந்த பிரச்சினைகளையும் “நம்ம அய்யரு” சுமுகமாக தீர்த்து வைப்பாரு "என்ற பெயரை கொண்டு இருந்தார். சட்டம் வேறு படித்து இருந்ததால், சட்ட நுணுக்கங்களும் தெரிந்தவர்.

இதுவரை அந்த ஊர் பஞ்சாயத்து தலைவர் பதவி ஜெனரல் கேட்டகரியில் தான் இருந்தது.

இந்த முறை மகளிர்க்காக, முதன் முதலில் அதுவும் ஒரு தலித் பெண்மணிக்கு, அரசாங்கம் ஒதுக்கி ஆர்டர் போட்டதில், முதலில் சந்தோசமான சத்யமூர்த்தி, அஞ்சலையை தான், அந்த பதவிக்கு நிறுத்தப் படவேண்டும் என்று நினைத்தற்கு காரணம் இல்லாமல் இல்லை.

அஞ்சலையின் நேர்மை; கடுமையான உழைப்பு. சமூக சிந்தனை, எல்லோருக்கும் எல்லாம் நடக்கணும் என்கிற ஆசை. இதை எல்லாம் நேரிடையாக பார்த்து வந்த சத்தியமூர்த்தி, இந்த பஞ்சாயத்து தலைவி போஸ்ட்க்கு அஞ்சலை தான் சரியான ஆள் என்று தீர்மானம் செய்து, அதற்குண்டான வேலைகளை பார்த்து இன்று அவளை பஞ்சாயத்து தலைவி ஆக்கியதில் இவர் பங்கு தான் அதிகம்.

அஞ்சலை ஒரு விவசாயக்கூலி. படிப்பு என்னவோ 5 ம் வகுப்பு வரை தான்.. அவள் முறை மாமனையே கல்யாணம் செய்து கொண்டாள் . ஒரே மகன்; கணவனும் விவசாய கூலி. அத்துடன் 3மா நிலம் உள்ள சிறு விவசாயீ. சின்னதாக ஒரு வீடு.

தான் பஞ்சாயத்து தலைவியாக தெரிவு செய்ய பட்டாலும் அவளுக்கு உள்ளூர பயம்.

தானோ ஒரு தலித் . பழைய பஞ்சாயத்து தலைவரும், இப்போ உள்ள வைஸ் ப்ரெசிடெண்ட் சுந்தரும், பஞ்சாயத்து செகரேட்டரி மாணிக்கமும், எல்லோரும் ஒரே சாதி. என்பதால் தனக்கு பிரச்சனை பண்ண கூடியவர்கள். என்று பயந்தாள்..

“அய்யா நான் 5 ம் வகுப்பு தான் படிச்சு இருக்கேன். சமாளிக்க முடியுமா?. ஒத்து வருமா அய்யா? அவங்க என்னை வேலை செய்ய அனுமதிப்பாங்களா?”

“இத பாரு அஞ்சலை; உன் நேர்மை ஒன்னை காப்பாத்தும். வடிவேலுவும் மாணிக்கமும் நான் சொன்னா கேட்டுப்பாங்கா தகராறு ஏதும் பண்ணமாட்டாங்க.!.”

“பெரிய பிரச்சனை ஏதும் வராது, அப்படி வந்தா எங்கிட்ட கொண்டு வா. நான் பாத்துக்கிறேன்.”

“போயி தைரியமா பதவி ஏத்துக்கோ சரியா”.

அஞ்சலை பதவி ஏற்ற பின் வெளியூர் சென்று இருந்த சத்தியமூர்த்தி இரண்டு நாள் முன்பு தான் ஊர் திரும்பியிருந்தார்.

அஞ்சலையும் தங்கராசுவும் தன் வீட்டுக்கு வந்ததை கண்டு, "என்ன அஞ்சலை ஏன் பதட்டமா இருக்கே என்ன நடந்தது.?

“அய்யா நம்ம பஞ்சாயத்து ஆபீஸ் பக்கத்துல தான், ஸ்கூல் கட்டிடம் இருக்குன்னு ஒங்களுக்கு தெரியும்.” ஒரே காம்பௌண்ட்ல இருக்கிறதால, ஸ்கூல்ல தான் குடியரசு தினத்தில், சுந்தந்திர தினத்தில் பஞ்சாயத்து தலைவரை அழைத்து கொடி ஏத்த சொல்லுவாங்க என்பதும் ஒங்களுக்கு தெரியும்".

அப்படித்தான், இந்த தடவை, தான் பஞ்சாயத்து தலைவியா தேர்ந்தெடுக்க பட்டதால் ஸ்கூல் ஹெட் மாஸ்டரம்மா, என்னை கூப்பிட்டு, குடியரசு தினத்து அன்னிக்கு கொடி ஏத்த சொன்ன போது, பழைய தலைவர்வடிவேலும், அவங்க ஆட்களும் என்னை ஜாதி பெயர் சொல்லி, கேவலமா பேசி, உனக்கு அருகதை கிடையாது மேடையை விட்டு இறங்குன்னு சொல்லிட்டாங்க. நானும் பிரச்சனை வேண்டாம்ன்னு நினச்சு பேசாம இருந்துட்டேன்."

“இப்போ இரண்டு நாள் முன்பு சுதந்திரம் தினம் அன்னிக்கு கொடி ஏத்த ஸ்கூல்ல ஹெட்மாஸ்டர்ம்மா கூப்பிட்டங்கா ! . மறுபடியும் வடிவேலு ஆட்கள் தகராறு பண்ணி கொடி ஏத்தவிடலை”

ஹெட்மாஸ்டர்ம்மா பயந்து போய், உங்களுக்கும், பழைய தலைவருக்கும் என்ன தகராறுன்னு தெரியாது? என்னை மன்னிச்சுடுங்கன்னு என்கிட்ட சொல்லிட்டு போனாங்க. "

நடந்ததை அஞ்சலை சொன்னதும், ஏன் இந்த வடிவேலுக்கு குதர்க்க புத்தி? என்று சத்யமூர்த்தி

நினைத்தார்.

“இன்னிக்கு சாயந்தரம், ஊர் பிரமுகர்கள் முன்னிலையில், பழைய பஞ்சாயத்து தலைவர் வடிவேலு, அப்புறமா, அந்த செகரேட்டரி, வைஸ் ப்ரெசிடெண்ட் எல்லோரையும் கூப்பிட்டு விசாரிப்போம். இப்போ நீ வீட்டுக்கு போ.”

அன்று மாலை தன் மேல் மதிப்பு வைத்து வந்து இருந்த வடிவேலு, வைஸ் ப்ரெசிடெண்ட், சுந்தர் செகரேட்டரி மாணிக்கம் மற்றும் சில பிரமுகர்கள் சத்யமூர்த்தி வீட்டில் கூடியிருந்தனர்.

அஞ்சலையும், தங்கராசுவும் வந்து இருந்தார்கள்.

“இத பாரு வடிவேலு, புதுசா பஞ்சாயத்து ப்ரெசிடெண்டடாக எலெக்டாகி உள்ள அஞ்சலை, தான் குடியரசு தினம் அன்னிக்கு கொடி ஏத்த வந்த போது நீயும் உன் கூட்டாளிங்க தடுத்து அஞ்சலையை தர குறைவா பேசி இருக்கீங்க.”

“சரி எலெக்ஷன் முடுஞ்சு 20 நாள் தானே ஆச்சு. வேகமும் கோபமும் இருக்கலாம். நினைச்சசேன்.”

“நானும் ஊரில் இல்லாததால் பிரச்சனை தீர்க்க முடியமா போச்சு”.

“ஆனா , மறுபடியும் சுதந்திர தினத்திலும், கொடி ஏத்த கூடாதுன்னு தகராறுபண்ணிஇருக்கே. இது நல்லாயில்லை வடிவேலு”.

"அரசாங்கம் இந்த கிராமத்தை, ஜெனரல் கேட்டகரியிலுருந்து தாழ்த்தப்பட்ட மக்களுக்கு, அதுவும் ஒரு மகளிருக்கு ஒதுக்கபட்ட

பஞ்சாயத்தன்னு சொல்லி ஆர்டர் போட்டு இருக்கு".

அந்த அடிப்படையில் அஞ்சலை, பஞ்சாயத்து

தலைவர் பதவிக்கு, ஜனநாயக முறைபடி தேர்ந்தெடுத்துக்க பட்டுருக்காங்க.."

“நான் குடியரசு தினத்தில் பேசினேனங்கிற குற்றசாட்டு இருந்துச்சுன்னா அன்னிக்கே கம்பளைண்ட் பண்ணியிருக்கணும்ல்ல.”

“ஒங்க மேலே மதிப்பும் மரியாதையும் இருக்கிறதால நின்னு பேசிகிட்டு இருக்கேன். எங்க வீட்டு சோத்தை தின்னுட்டு, என் நிலத்துல கூலி வேலை செஞ்சவ பஞ்சாயத்து தலைவியா?” எனக்கு கவுரவ பிரச்சனை. ஒரு பழமொழி சொல்லுவாங்க “ஊர்ல. நாயை குளிப்பாட்டி நடு கூடத்தில் வைச்ச மாதிரின்னு.”

மானுட வேற்றுமை எனக்கு இருக்க தான் செய்யும். அஞ்சலை வந்தது எனக்கு பிடிக்கல."

“இது நம்ம கிராம பிரச்சனை சுமூக மாக முடிக்கணும் நினைக்கிறேன். நான்.”

“ஆனா நீ மானுட வேற்றுமையை பாக்க தான் செய்வேன்ன்னு ஏன் சொல்றே?”

“அது என்னவோ தெரியாது. அஞ்சலை பஞ்சாயத்து தலைவியா இருப்பது பிடிக்கல”

“இத பாரு வடிவேலு,”

“மனிதரின் தோல் நிறம் இயற்கையின் ஓர் அம்சம். அது எப்படி மனிதர்களைப் பிரித்துப் பாகுபடுத்த முடியும்?” என்ற கேள்வியில் உருவான தலைவர்களே ஆபிரகாம் லிங்கன், மண்டேலா போன்றோர்.

“மனிதர்களுக்குள் பிரிவுகள் இருப்பதில் சில நியாயங்கள் இருக்கலாம். ஆனால், அதில் உயர்வு தாழ்வு இருக்கக் கூடாது என்று காந்தி சொன்னார்.”

“மகாகவி பாரதியார், மழலைப் பருவத்திலேயை

மனதில் பதியும் வண்ணம்,"சாதிகள் இல்லையடி பாப்பா! குலத் தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்' என்றார்."

" நம் நாட்டு இதிகாசங்கள், இலக்கியங்கள், காப்பியங்கள், நீதி நூல்கள் எல்லாமே சாதி வேற்றுமைகளைக் களையவே முற்பட்டன".

அத்தணராயினும், வேறு எந்த குலத்தவராயினும், திருக்கோயில்களில் இருக்கும், அறுபத்து மூவரை வணங்கத் தவறுவது இல்லை.

“அந்த 63நாயன்மார்களும் ஒரே சாதியா? அவர்களுக்கு ஆராதனை நடக்காமல் இருப்பது இல்லை.நீங்களும் கும்பிடாமல் வருவது இல்லை.”

"தன் பக்தன் திருப்பாணாழ்வார் தாழ்ந்த குலமாகினும், அவரை, லோகசாரங்கர் தன் தோளில் ஏற்றிவர திருவரங்கனே ஆணையிட்டாராம். ! நீ கேள்வி பட்டதில்லையா?

“நீ வழிபடும் வைணவத்தில் கூட 12ஆழ்வார்களும், வெவேறு சாதி. ஆனால் அவர்கள் இயற்றிய திவ்யப்ரபந்ததை நீ படிக்கலையா?”

வைஷ்ணவ ஆச்சார்யர்களில் முதன்மையானவர் ஆளவந்தார். அவர்களில் பெரிய நம்பி உயர்ந்த சாதி. சீடர் ஆனால் மாறனேரி நம்பி என்பவர் தாழ்ந்த சாதி சீடர். இருவரும் அண்ணன் தம்பி மாதிரி பழகியவர்கள். மாறனேரி நம்பிக்கு ராஜபிளவு நோய் ஏற்பட்ட போது, பெரிய நம்பி குளிப்பாட்டி, துணி துவைத்து சாப்பாடு ஊட்டி விட்டதோடு மட்டுமல்லாமல் மாறனேரி நம்பி இறந்து போன பின் அந்திம கிரியை பண்ணியவர். இந்த காட்சிகள் எல்லாம் “சாதி இரண்டொழிய வேறில்லை' என்பதை உணர்த்துகிறது”. வடிவேல் ஏதும் பேசாமல் இருந்தான்.

“இப்படி பேசற நீ திரையங்குகளில், உணவு விடுதிகளில், பேருந்துகளில், தொடர் வண்டிகளில், எப்படி சாதி இனம் பார்க்கிறாயா?”

அது சாத்தியம் இல்லை என்று உனக்கு தெரிஞ்சு அப்படி காண முடியாத நிலையில் இருக்கிறாயோ, அதே நிலை எல்லா இடங்களிலும் நீ உணரவேண்டும் "

“இத பாருங்க அய்யரே நீங்க என்ன லெக்சர். சொன்னாலும் என் காதில் கேக்காது”. “உங்களால் என்ன செய்ய முடியுமோ அதை நீங்க செஞ்சுக்கோங்க”. “நான் இந்த சலசலப்புக்கு அஞ்சமாட்டேன்”. “அவ துணியை காணோம்ன்னு ஊரை விட்டு ஓட வைக்கலே என் பேர மாத்திக்கிறேன்”. இந்த ஊர்லே இனி வைஸ்ப்ரெசிடெண்ட் வைச்சது தான் எல்லாமே."

வடிவேலுவின் பேச்சில், வன்மமும், க்ரோதமும், திமிரும் தெரிந்தது.

“இத பாரு வடிவேலு, நீ விபரம் புரியாம பேசிகிட்டு இருக்கே!. ஏதோ கிராம பிரச்சனை, நமக்குள்ள தீர்த்து கொள்ளணுமன்னு நினைச்சேன்.”

“ஆனா இவ்வளவு சாதி வெறி இருக்க கூடாது? நான் இவ்வளவு உதாரணம் சொல்லியும், நீ காது கொடுத்து கேக்க விரும்பல”.

“உயர் சாதி மக்கள், தலித் மக்களை மானுட வேற்றுமையாக பார்த்த போது, அப்பாவி தலித் மக்கள் பொறுத்து போயீ, பிரச்சனை ஏதும் வேண்டாம் என்று ஒதுங்கி போன காலம் போயீடுச்சு.”

இப்ப அவங்க எழ ஆரம்பிச்சுட்டாங்க. அரசாங்கமும் சப்போர்ட் பண்ணுது. இதை நீ புரிஞ்சுக்கோ."

“என்ன சொன்னாலும் சரி எனக்கு உடன் பாடு இல்லை ஒங்க மேல மதிப்பு இருந்ததாலே தான், நான் நீங்க கூப்பிட்டதும் வந்தேன். நான் என் கட்சி தலைவரை பாத்து என்ன செய்யணுமோ செஞ்சுக்கிறேன்.”

வடிவேலுவும் அவன் கூட்டாளிகள் விருட்டென கிளம்பி போனார்கள்.

தீர்வு கிடைக்காமலே கூட்டம் முடிவுக்கு வந்தது.

இனி பேசி பிரயோசனமில்லை என்று உணர்ந்த சத்யமூர்த்தி, அஞ்சலைக்கு நடந்த விஷயங்கள் பற்றி விளக்கமாக மாநில மனித உரிமை கழகம், தேசீய மனித உரிமை எஸ். சி எஸ். டி, மாவட்ட ஆட்சியர், மற்றும் சில ஊடகங்கள்க்கு மின்னஞ்சல் அனுப்பி விட்டு ரெஜிஸ்டர் தபாலும் அனுப்பி இருந்தார்.

இரண்டு நாள் கழித்து ஆர். டி. ஓ வந்து ஊர் மக்கள், ஸ்கூல் ஹெட் மாஸ்டர்ம்மா, பழைய பஞ்சாயத்து தலைவர், உதவி பஞ்சாயத்து தலைவர், பஞ்சாயத்து யூனியன் காரியதரிசி பின் அவரையும் விசாரித்து போயிருந்தார்.

ஊடகங்களும் இந்த பிரச்சனை பற்றி பேசியது. நாலு நாள் கழித்து மாவட்ட ஆட்சியர், நேரிடையாக கிராமத்துக்கு வந்து எல்லோரையும் விசாரித்த பின்பு, அஞ்சலையை விசாரிக்க வர சொல்லவே, சத்யமூர்த்தியும் கூடவே போனார்.

ஏற்கனவே சத்யமூர்த்தி சமூக சேவையை பற்றி தெரிந்து இருந்த மாவட்ட ஆட்சியர், அவர் ஸ்டேட்மெண்ட், அஞ்சலை சொன்ன ஸ்டேட்மென்ட்யையும், ஆர் டி ஓ கொடுத்த ரிப்போர்ட் மற்ற சாட்சிகள் எல்லாவற்றையும், கருத்தில் கொண்டு, ஒரு முடிவுக்கு வந்து இருந்தார்.

மாவட்ட ஆட்சியர்க்கு நன்றி கூறிவிட்டு கிராமம்

திரும்பி இருந்தார்கள். அஞ்சலையும் சத்தியமூர்த்தியும்.

“நீ கவலைபடாதே அஞ்சலை. கலக்டர் அம்மா, நல்ல தீர்ப்பு கொடுப்பாங்க. நல்ல திறமை சாலி. பாரு நாளைக்கே நல்லது நடக்கும்”

அவர் வாக்கு பலித்து போனது மறு நாள் பத்து பதினஞ்சு கார்கள் புழுதியை கிளப்பி கொண்டு கிராமத்துக்குள் நுழைந்தது..

“கலக்டர்ம்மா வந்து இருக்காங்க” “கூடவே டி. எஸ் பி மற்றும் போலீஸ் ஊடக பத்திரிக்கை நண்பர்கள். உங்களை கூட்டியாரா சொன்னாங்க”!

அஞ்சலையும், சத்யமூர்த்தியையும், மட்டுமல்லாமல் வடிவேலு அவங்க கூட்டாளிகள் எல்லோரும் கலெக்டர் முன்பு ஆஜராகியிருந்தனர்

பொது மக்கள் கூட்டதின் நடுவே பேச ஆரம்பித்தார்.

“அஞ்சலை ஒரு தலித். அவங்க பஞ்சாயத்து தலைவி. தேர்வு ஆகியும் அவங்களுக்கு, உரிய அங்கீகாரம் கொடுக்கபடாமல், அவர் பெயர் தாங்கிய அறிவிப்பு பலகை கூட வைக்க கூடாது, என்று தகராறு செய்த முன்னாள் பஞ்சாயத்து தலைவர் வடிவேலு மீதும், இப்போ உள்ள துணை தலைவர் சுந்தர் மீதும், தக்க நடவடிக்கை எடுத்து அவர்கள் கைது செய்ய படுகிறார்கள்.”

“பஞ்சாயத்து செகரேட்டரி மாணிக்கம், செய்த தில்லுமுல்லுகள், அஞ்சலையை, பணி செய்ய விடாமல் தடுத்த குற்றம் காரணமாக, அவர் சஸ்பென்ட் செய்ய படுகிறார்”.

“இன்று அஞ்சலை தன் கையால் பள்ளிக்கூடத்தில் உள்ள கொடிக் கம்பத்தில் தேசீய

கொடி ஏற்றுகிறார்.”

“அஞ்சலைக்கு ஏற்பட்டஅவமானத்தை துடைக்க பெரு முயற்சி எடுத்த சத்யமூர்த்தி சாரை நான் பாராட்டுகிறேன்.”

“அஞ்சலைக்கு ஏற்பட்ட பாதிப்பு மாதிரி நிறைய தலித் மக்களுக்கு பாதிப்பு ஏற்பட்டுள்ளது. இனி காலம் மாறும்.”

“அஞ்சலை தனக்கு பாதுகாப்பு வேண்டும் என்று கேட்டுள்ளார். அவர்க்கு யாரவது பிரச்சினை கொடுத்தால் தக்க நடவடிக்கை எடுக்க படும் என்று எச்சரிக்கிறேன்”.

அஞ்சலையும் சத்யமூர்த்தியும் மாவட்ட ஆட்சியருக்கு நன்றி கூறினார்கள்.

சத்யமூர்த்தியின் காலில் விழுந்து ஆசீர்வாதம் வாங்கினாள் அஞ்சலை. இப்போது கம்பீரமாக கலெக்டர் முன்பு கொடியேற்றினாள் அஞ்சலை.

இனி அவளுக்கு வானம் தொட்டு விடும் தூரம் தான்.

# தானம்

"என்னங்க! இன்னிக்கு ஹாஸ்பிடல் போயி, சிவகாமியை அழிச்சிட்டு வரணும்.

அந்த தனியார் ஆஸ்பத்ரியில் மொத்தம் 10 பேஷண்ட்.. கோவிட் 19 தொற்று நோய் ஏற்பட்டு குணமாகி டிஸ்சார்ஜ் செய்யும் போது பழங்கள் மருந்து மாத்திரைகள் கொடுத்து வழிஅனுப்பிவைத்தனர்.டாக்டர் கள்.

“மருந்து, மாத்திரைகளை, கவனமா சாப்பிடுங்க. எதிர்ப்பு சக்தி அதிகரிக்கும் உணவு பழங்கள் காய்கறிகள் சாப்பிடுங்க.”

உங்களில் வரும் காலங்களில் பிளாஸ்மா டோனோட் பண்ண முடியும் நினைக்கிறவங்க இன்னொரு கோவி ட் 19 நோயாளியை காப்பாத்த முடியும்;

“விஷ் யூ ஆல் தி பெஸ்ட்.”

சிவகாமி 2 வயதுகுழந்தையுடன், 5 வருடத்துக்கு முன்பு, வேலை தேடி வந்த போது, சங்கரின் மனைவி சத்யா பிரசவித்து 3மாதம் ஆகி இருந்தது.சிவகாமிக்கு உடன்பிறவா சகோதரி மாதிரி ஆதரவு கொடுத்து தன் வீட்டு வேலைகளோடு மேல் வருமானத்திற்க்கு பக்கத்த்தில் உள்ள வீடுகளுக்கு வேலை செய்ய அனுமதி கொடுத்திருந்தாள் சத்யா.

ஒவ்வொரு முறையும் சிவகாமி யார்? எந்த ஊர்?

அவள்கணவனுக்கு என்ன ஆச்சு? என்று கேக்கும் போதெல்லாம். கண்ணில் அழுகை வர, “ப்ளீஸ் அதை மட்டும் கேக்காதீங்க” என்று நெகிழ்ச்சியுடன் சொன்ன போது, சங்கரும், சத்யாவும், அதற்கு பிறகு அவளை நிர்பந்திங்கவில்லை..

யாராக இருந்தால் என்ன? கூட பிறந்த சகோதரி மாதிரி எல்லா வேலையும் இழுத்து போட்டு செய்யும் சிவகாமி ஒரு இளம் விதவை. அவளுக்கு, எப்படியாவது ஒரு வாழ்க்கை அமைத்து கொடுக்கணும் என்று இருவரும் முடிவு செய்து இருந்தார்கள்.

ஒரு ஞாயிறுகிழமை மார்க்கெட் போய் விட்டு, திரும்பிய சிவகாமி தனக்கு, திடிர்னு தொண்டை வலி ஜுரம் என சொல்ல டிரீட்மென்ட் செய்த டாக்டர் டெஸ்ட்டில் கோரோனோ பாசிட்டிவ் என சொல்ல கோரோனோ சிகிச்சை பெற பிரபலமான ஆஸ்பத்திரியில் சேர்க்கபட்டாள். சிவகாமிக்கு தரமான சிகிச்ச்சை கொடுக்கபட்டு இன்று டிஸ்சார்ஜ்.

வீட்டுக்கு வந்தவுடன் சிவகாமியை 15 நாள் தனிமைபடுத்தி அவளுக்கு ஆரோக்கியமான உணவு கொடுத்து சத்யா கவனித்து கொண்டாள்.

இரண்டு தடவை பிளட் டெஸ்ட் எடுத்தது மட்டுமல்லாமல், எலிசா டெஸ்ட் ரிப்போர்ட் எடுத்ததில் கோரோனோ நெகடிவ் என்றும் ரத்தத்தில் வெள்ளை அணுக்கள் நோய் எதிர்ப்பு சக்தியை கூட்டி உள்ளது என்றும் தெரிய வந்தது.

“இனிமே நீங்க கவனிக்க வேண்டாம்மா. நான் பூரண குணமாயிட்டேன்”.

அன்று ஞாயிறுக்கிழமை நல்லூர் மோகனும், அவன் அம்மாவும், காரிலிருந்து பதட்டமாக இறங்கிவந்தார்கள்.

“வாடா மோகன், வாங்கம்மா” சத்யா சங்கர் வரவேற்றார்கள்.

மோகன் அப்பா காய் கறி வாங்க மார்க்கெட் போனவர், கூடவே கோரோனோவையும் வாங்கிட்டு வந்து இருக்காரு. டெஸ்ட பாசிட்டிவ் ரிசல்ட்; தனியார் ஆஸ்பத்திரியில் சேர்த்து டிரீட்மென்ட் போயிட்டு இருக்கு. வெண்டிலேட்டர் வைச்சு இருக்கு. ஆனா பிளாஸ்மா தானம் கிடைச்சா சீக்கிரம் குணமாகவாய்ப்பு இருக்கு.

இப்படி மீனாட்சியம்மா குரலை கேட்ட சிவகாமி, கிச்சனில் இருந்து ஹால் பக்கம் பார்த்த போது, வந்தவர்களை பார்த்து திடுக்கிட்டாள். சங்கர் ஸார் குடும்பத்துக்கும், இவர்களுக்கும் என்ன சம்பந்தம்.?

இவர்கள் எங்கே இந்த ஊரில்.. என்று பலவாறு யோசித்தாள்.

சத்யா காபி கொடுக்க கிச்சன் வந்த சமயம், தான் வேண்டுமென்ற பாத்ரூம் போயிருந்தாள்.

“மோகன் முகநூல், வாட்ஸாப் பலவற்றை கேட்டு இருக்கான். இதுவரைக்கும் ரெஸ்பான்ஸ் இல்லை; பிளாஸ்மா வங்கியிலும் கை வசம் ஏதும் இல்லையாம்.” “அதான் உன்னை பார்த்து பேசினால், ஹெல்ப் கிடைக்கும்ன்னு வந்தேன். என் மாங்கல்யத்தை காப்பாத்து” நெகிழ்ச்சியுடன் சொன்னபோது,

“கவலைப்படாதீங்கம்மா நிச்சயம் ஏற்பாடு செய்யறேன். ஒங்க நல்ல மனசுக்கு நல்லது நடக்கும்.”

வாசல் வரை வந்து வழி அனுப்பி வைத்தார்கள்.

“வந்தவங்களுக்கு அறிமுகம் பண்ணனும் நினைச்சப்ப, நீ பாத்ரூம்ல இருந்தே.அவசரமா கிளம்பிட்டாங்க.” நானும் மோகனும் ரொம்ப நாள்

நண்பர்கள். அவங்க அம்மா மீனாட்சி ஊருக்கு உபகாரி. நல்லமனசு. அவங்க கிராமம் நல்லூர்க்கு நானும் போயி இருக்கேன். பாவம் மீனாட்சியம்மாவிற்கு இப்படி ஒரு சோதனை. நல்லூர்கிராமத்தில் இருந்து பையனை பாத்துட்டு போக வந்த இடத்துல கோரோனோ வைரஸ் பாசிட்டிவ்.

“இப்ப என்ன செய்யறது?” இரண்டு மூணு பேருக்கு போன் செய்தான்.

ஆனால் எல்லோரும் கைவிரித்தார்.

மிகவும் குழப்பமாக இருந்த சங்கரிடம்,

“ஏன் ஸார், கையில வெண்ணை வைச்சுட்டு நெய்க்கு அலையீருங்க?”

"டாக்டர் அன்னிக்கு டிஸ்சார்ஜ் பண்ணும் போது சொன்ன வார்த்தை ஞாபகம் வந்தது ஸார். நான் பிளாஸ்மா தானம் பண்றேன் ஸார். ஏற்பாடு பண்ணுங்க. ஆனா ஒரு கண்டிஷன். நான் தான் தானம் பண்ணினேன்னு மோகன் ஸார் குடும்பத்துக்கு தெரிய கூடாது மீடியா வெளிச்சம் என் மேல் வர கூடாது ஸார்.

“இத பாரு மோகன்! பிளாஸ்மா தானம் பண்ண போறவங்க, தன் பெயர் விபரம் உங்களக்கு மட்டுமல்ல, மீடியாவுக்கும் தெரிய கூடாதுன்னு நினைக்கிறாங்க..”

“அப்பா அட்மிட் ஆகியிருக்கிற ஹாஸ்பிடல் பேரு மத்த விபரங்கள் எஸ். எம். எஸ் பண்ணு. மத்ததை நான் பாத்துக்கிறேன்.” நீங்களும் வரவேணாம்.

மோகன் கொடுத்த விபரங்களுடன் வேதநாயகம், அட்மிட் ஆகி இருக்கும் ஆஸ்பத்திரியை நோக்கி சிவகாமியுடன் கிளம்பினான் சங்கர்.

அந்த பிரைவேட் ஹாஸ்பிடல் சிவகாமியின். மெடிக்கல் ரிப்போர்ட் பிளட்டெஸ்ட்எலிசாடெஸ்ட்எல்லாவற்றையும் டாக்டரிடம் காண்பித்தான் சங்கர்.

“வெரி குட் சங்கர்”

“நீங்க முன்னேற்பாடா, எல்லா எடுத்து இருக்கீங்க.. வேதநாயகம் சாருக்கும் பிளட் பிரஷர், சுகர். ஆஸ்தமா, உடல் உறுப்பு சிகிச்சை எதுவும் இல்லாதது நல்லதா போச்சு”

நம் ரத்தத்தில் பிளாஸ்மா 60சதவீதமுமரத்த செல்கள் 40 சதவீதமும் உள்ளன. கரோனாவைப் பொறுத்த அளவில் ரத்த வெள்ளை அணுக்கள் முக்கியமானவை. கரோனா வைரஸ் பாதிக்கப்பட்ட சிவகாமியின் ரத்த பிளாஸ்மாவில் கரோனாவைக் கொல்லும் அளவுக்கு ஆன்டிபாடிகள் இருந்ததினால் வேதநாயகசாருக்கு சிவகாமியின் பிளாஸ்மாவின் ஆன்டிபாடிகள் அவருடைய உடலுக்குள் சென்றதும் அங்குள்ள கரோனா கிருமிகளை எதிர்த்துப் போரிட்டு உடலில் ஏற்கனவே இருக்கும் ஆன்டிபாடிகளுடன் இணைந்து புதிய உத்வேகத்துடன் போரிட்டு வெற்றி பெற்றுள்ளது.

“52வயதான வேதநாயகம் சாருக்கு, மூச்சு விடுவதில் சிரமம் இருந்ததால் வெண்டிலேட்டர் பொருத்தி இருக்கு.”

“அரசின் அனைத்து வழிகாட்டி நெறிமுறைகளைப் பின்பற்றி பிளாஸ்மா சிகிச்சை சிவகாமிமூலம் அவருக்கு அளிக்கப்பட்டுருக்கு. பிளாஸ்மா ஏற்றப்பட்ட ஓரிரு நாளிலே நல்ல முன்னேற்றம் ஏற்பட்டு, வேதநாயகம் சாருக்கு வென்டிலேட்டர் சிகிச்சையும் நீக்கப்பட்டது. உடல் நிலையிலும் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டு வருகிறது. சாப்பிடும் அளவுக்கு உடல் தேறிவிட்டது.”

“அவரின் ரத்தத்தைஇருமு றை பிரசோதனை செய்தபோதும் நெகட்டிவாக இருந்தது நம்பிக்கை கொடுத்துருக்கு.. இன்னும் இரண்டு நாளில் டிஸ்சார்ஜ் பண்ணிடுவாங்க.”

சங்கர் சொல்ல, சொல்ல, சிவகாமியை பெருமிதமாக பார்த்தாள் சத்யா.

15 நாள் தனிமைக்கு பிறகும் ரத்தம் இருமுறை டெஸ்ட் பண்ணிய பிறகு நெகடிவ் ரிசல்ட் வந்தவுடன் சங்கரை நேரில் பார்த்து நன்றி சொல்வதற்காக மோகன் மனைவி அம்மா அப்பாவுடன் திடீர் என்று வந்தவர்கள் அங்கு சிவகாமியை பார்த்ததும் அதிர்ச்சி ஆனார்கள்.

சங்கர், " சிவகாமி எப்படி இங்கே?"

“இவங்க தான் அய்யா, உயிரை காப்பாற்ற, பிளாஸ்மா தானம் பண்ணினவங்க.”

மீனாட்சி சிவகாமியை அப்படியே கட்டிக்கொண்டு அழுதாள்.

“நல்லா இருக்கியா? பாலு எப்படி இருக்கான். நீ எப்படி இங்கே? சங்கர் அறிமுகம் எப்படி?”

“எல்லாத்துக்கும் நான் தானே காரணம் அன்னிக்கு இருந்த சூழ்நிலை, என் கணவரின் கவுரவம் காப்பாத்த படணும்ன்னு என் மனசை கல்லாக்கிட்டு எவ்வளவு கீழ்தரமான வேலைக்கு நானும் துணை போயி இருக்கேன். உன்னை இது மாதிரியானா கோலத்தி கொண்டு வந்தது எவ்வளவு பாவம்?”

“ஐயோ அம்மா நீங்க எதையும் சொல்ல வேண்டாம்.”

“இல்லை நீ என்ன தடுத்தாலும நான் இந்நாள்

வரை பூட்டி வைத்த ரகசியம் எல்லோருக்கும் சொல்லாம போனால் நான் துரோகி.”

“நல்லூர் கிராமத்தில் சிவகாமியும், அவள் அம்மாவும் வேலைக்கு வேலைக்கு சேர்ந்த 6 மாதத்தில், சிவகாமி அம்மா இறந்து போக, சிவகாமியின் வேலை செய்யும் விதம், இனிமையான பேச்சு பிறருக்கு உதவி செய்யும் மனப்பான்மை, பிடித்து போக, எங்க விவசாயத்தை பராமரிக்கும் அனாதை முத்துவுக்கு, மணம் முடித்து வீட்டு கார்ஷெட் பக்கத்தில் குடிசையும் போட்டு கொடுத்து இருந்தேன்.”

அவர்களின் குடும்ப வாரிசு பாலு பிறந்ததும் சிவகாமி அழகு இன்னும் கூடியது.

“அன்னிக்கு உள்ளூர் கோவில் திருவிழா. ஒட்டு மொத்த ஊரும் அங்கு கூடி இருக்க வழக்கமா சிவகாமியுடன் கோயிலுக்கு போற நான், ஏதோ பேச்சு சுவாரஸ்யத்தில், பக்கத்து வீடு பங்கஜம் மாமியோடு, கிளம்பும் நேரத்தில், சிவகாமி கூப்பிட வந்தா, செலவுக்கு 1000 பணம் கிச்சன் மேடையில் வைச்சு இருக்கேன்; எடுத்துக்கிட்டு வர சொல்லுங்கன்னு, என் கணவர் கிட்ட சொல்லிட்டு, கிளம்பி பாதி தூரம் போன நான், அவசரமா பாத்ரூம் வரவே, பங்கஜத்தை அனுப்பிவிட்டு, வீட்டில நுழைந்த போது, அந்த கொடுமையான சம்பவத்தை பார்க்க நேர்ந்தது.”

“நீ போயீ கிச்சன்ல, பணத்தை எடுத்துக்கிட்டு வா; என்று சொன்னவர் சிவகாமி அழகில் மயங்கி, அவளை தொடர்ந்து கிச்சனில் பலாத்காரம் பண்ண அந்த நேரம் பார்த்து முத்துவும் வர, முத்து தடுக்க அவனை அம்மி கல்லில் தள்ளி விட அவன் மண்டை உடைந்து இறந்து போக நிலைமையை ஊகித்து சிவகாமியிடம் கைநிறைய பணத்தை கொடுத்து இந்த ஊரை விட்டு போயிடுன்னு சொல்லி அனுப்பி வைச்ச மகா பாவி, நான்.”

“முத்துவை மாட்டு கொட்டகையில் குழி தோண்டி அடக்கம் செஞ்சாரு மோகன் அப்பா.”

“திருவிழா சமயம் என்பதால் ஊர்ல யாருக்கும் எதுவும் தெரியாது. முத்துவும் சிவகாமியும் எங்கே என்று கேட்ட போது சிவகாமி யாரோட ஓடி போய்ட்டா; முத்து தேடி போனவன். அவமானம் தாங்காம பக்கத்து ஊர் ரயில்வே ட்ராக்கில் விழுந்து செத்துட்டான்னு சொல்லி ஊரை நம்ப வைச்சோம்.”

“சிவகாமி நினைச்சா, மறுநாள் போலீஸ்கிட்ட போயி கம்பளைண்ட் கொடுத்து இருக்கலாம்.”

“5 வருஷமா மோகன் அப்பா கிட்ட பேசறது கிடையாது. திருநீலகண்டர் மனைவி மாதிரி சபதம் எடுத்தேன்.”

“ஒவ்வொரு இரவும் சிவகாமியை நினைச்சு நினைச்சு அவவாழ்க்கையை நாசமாக்கி விட்டோமோ என்று அழுது இருக்கேன்.”

என்னை மன்னிச்சுடு சிவகாமி காலில் விழுந்த வேதநாயகத்தை எழுப்பி, “அய்யா அய்யா” என்ன இது. எழுந்துருங்க

“அந்த ஒரு வினாடி என் கணவர் முகத்தை கூட பாக்காம விரட்டி அடித்த ஒங்க மீதும், அண்ணி மீதும் கோபம் வந்தது. ஆனா நீங்க எனக்கு சோறு போட்டு, கல்யாணம் பண்ணிவைச்ச மகராசி. மனச கல்லாக்கிட்டு நாயை விட கேவலமா இந்த ஊர்ல தெருதெருவா அலைஞ்சேன். சங்கர் ஸாரும் சத்யம்மாவும், அன்னிலிருந்து ஆதரவு கொடுத்து கவனிச்சுட்டு வாரங்க.” “அவங்க பையன் படிக்கிற ஸ்கூல்ல என் பையனையும் படிக்க வைக்கிறாங்க.”

“என்னை, நிறைய தடவை, இன்னோரு கல்யாணம் பண்ணிக்க வற்புறுத்திய போது நான்

மறுத்து விட்டேன். முத்து மச்சான் இருந்த இடத்தில, இன்னொருவரை நினச்சு பாக்கமாட்டேன். என் உயிர் போற வரைக்கும் இவங்களுக்கு விசுவாசமான வேலைக்காரியா இருப்பேன்”.

உன் வாழ்க்கையை கெடுத்து நிர்மூலமாக்கிய அந்த குடும்பத்துக்கு எப்பேர்ப்பட்ட புனிதமான செயல் செஞ்சுருக்கே இதற்கு படிப்போ அறிவோ தேவையில்லை. உன்னதமான உள்ளமும், மனசும், மன்னிக்கிற எண்ணமும் இருந்தா போதும்ன்னு நிரூபிச்சிட்ட சிவகாமி.!!

“யூ ஆர் ரி ய லி கிரேட்”

சிவகாமியின் உயர்ந்த செய்கைகைக்கும், தியாக உள்ளத்துக்கும் மருகி, தான் மடுவாய் போனதாக உணர்ந்தார் வேதநாயகம்.

# குணமா? குலமா?

“என்ன சத்தியமூர்த்தி சார் போயிட்டாரா? நம்பவ முடியலே,”

ரெங்கன் வந்து, அந்த சேதியை சொன்னதும்; அது காட்டு தீ மாதிரி, பரவ கிராம மக்கள் ஒவ்வொருவராக, துக்கம் விசாரிக்க, வந்து கொண்டுருந்தார்கள்.

"சத்தியமூர்த்தி மீது, கிராம மக்களின் ஒட்டு மொத்த அபிமானமமும், மரியாதையும்.!! இருந்ததே இதற்கு காரணம்.

உள்ளூரில் ஸ்கூலில்; ரிடயர்மெண்ட் வரைக்கும். வாத்தியார் வேலை.

எல்லோருக்கும் சட்ட சம்பந்தமான உதவிகள், பொது பிரச்சினை தீர்த்து வைத்தல்; மாலையில் ஜாதி மத பேதமின்றி, விஷ்ணு சஹஸ்ரநாமம். சொல்லிகொடுப் பது போன்ற சமூக சேவைகள்.

ரெங்கனும் திண்ணையில், ஒரு மூலையில் மற்ற பசங்களுடன் சேர்ந்து சொல்வான்.

அவன் சத்ய மூர்த்திக்கு, இன்னொரு பெறாத பிள்ளை என்று கிராமமே சொல்லும்.

அழுது வீங்கிய முகத்துடன், மயக்க நிலையில், சுவற்றின் ஒரமாய், ராஜம்.அவளை சுற்றி சில பெண்மணிகள் அருகில்உக்கார்ந்து, ஆறுதல்

சொல்லிக் கொண்டு இருந்தார்கள்...

“காலையில் காபி குடிச்சுட்டு, நானும் ஐயாவும் வாக்கிங் போயிட்டு வந்தோம்”.

“வழக்கமா, தினமும் செய்யற தோட்ட வேலைகளை முடிச்சுட்டு, குளிச்சுட்டு, திருமண் இட்டு முடித்தவுடன், பெரியாழ்வார் திருமொழி” “அப்போதைக்கு இப்போதே சொல்லிவைச்சேன்” என்று அரங்கன் தன்னை கடாக்ஷிக்கும் படி பாசுரசத்தை சேவிக்கும் போதே, “நெஞ்சை வலிக்குது கொஞ்சம் வெந்நீர் கொண்டுவா ராஜம்”. என்றார். இரண்டு வாய் வெந்நீர் உள்ளே போனதும், வெளியே வந்துச்சு. அப்படியே அம்மா மடியில் சாஞ்சுட்டாரு“. டாக்டரை கூட்டி வந்து காமிச்சப்போ, உயிர் போயுடுச்சுன்னு சொன்னார். ஏகாதேசி திதி அய்யா புண்ணியம் பண்ணிருக்கார்.”

ரெங்கன் தான், துக்கம் விசாரிக்க வந்தவர்களிடம் சொல்லிக் கொண்டுருந்தான்.

“அம்மா ஸ்ரீராம் தம்பிக்கு சேதி சொல்லனமில்ல முதலில் சொல்லீடுறேன்”

“மறுமுனையில், ஹலோ அப்பா” குரல் கேட்கவும்

“தம்பி நான் ரெங்கன் பேசறேன்”.

அப்பா போனில் இவன் எப்படி?

ஏற்கனவே ரெங்கனை தலையில் தூக்கி வைச்சு ஆடுவார். அவனுக்கு சுத்தமா பிடிக்காது.

“என்ன சீக்கிரம் சொல்லு” குரலில் கடுமை தெரிந்தது.

“எப்படி சொல்வேன்? நம்ம அப்பா நம்மை விட்டு போயிட்டார்”.

“அப்பா அப்பா” அதிர்ச்சியில் ஸ்ரீராம் அங்கு கனடாவில், கத்தியது இங்கு வேகமா கேட்டது.

“அம்மா எங்கே?”

“இதோ பக்கத்திலே”

“என்னம்மா? எப்படி ஆச்சு”?

அம்மாவினால் பேச முடியவில்லை; துக்கம் தொண்டையை அடைத்தது; அழுது கொண்டே நடந்ததை, சொன்னாள்.

“ஸ்ரீராம், நீ வந்த பிறகு தான் எல்லாமே”

“என்னால் இப்ப உடனடியாக வரமுடியாத சூழ்நிலைம்மா”.

“என்னடா அப்படிப்பட்ட சூழ்நிலை”!

“உடனே கிளம்பி வர முடியாத அளவுக்கு முக்கியமான ப்ராஜெக்ட் முடிக்கணும்ம்மா”! .

“டேய்!!செத்து போயிருக்கிறது ஒன் அப்பா நீ வராமா எப்படிடா?”

“ஒன் ப்ரொஜெக்ட் முக்கியமா? அப்பா முகத்தை பார்க்குறது முக்கியமா?”

“உங்கப்பா ஓடாய் ஒழைச்சு கடன் வாங்கி, ஒன்னை கனடாவுக்கு அனுப்பி இருக்கார்”.

“இப்ப நாதியற்று ரேழியில் கடடையா இருக்கார்”.

“அவர் ஆத்மா சாந்தி அடையணும்ன்னு நினைச்சா நீ வைக்கிற கொள்ளியில் தான் இருக்கு”.

ஆனால், ஸ்ரீராம் தான் வரமுடியாத சூழ்நிலையை சொல்லிக் கொண்டு இருந்தானே தவிர, அம்மாவுக்கு ஆறுதலாக, ஒரு வார்த்தையும் பேசவில்லை.

மேலும் பேச பிடிக்காமல் போனை வைத்தாள் ராஜம்.

மீண்டும் சத்யமூர்த்தியின் போன் அடிக்கவே இம்முறை

பக்கத்து வீடு பார்த்தசாரதி எடுத்தார்.

“நான் பாச்சா பேசறேன்”.

“மாமா, நீங்க எப்படியாவது அம்மாவுக்கு புரிய வையுங்க”!

“என் கடமையை நான் மறக்கல. 9ம் நாள் எல்லா காரியத்தையும் செஞ்சுடலாம். பணம் அம்மா பேருக்கு அனுப்பறேன்”.

“எப்படியும் மத்த விஷயங்கள் டிஸ்போஸ் பண்ண நான் வந்து தானே ஆகணும்.!”

“பாண்டமிக் பிரியட் முடிஞ்சு போனாலும், குறைவான பிளைட் தானாம். நிறைய பிளைட்கேன்சல் ஆயிடுச்சாம். எப்படியும் வந்துடுவான்”.

ஸ்ரீராம் சொல்றது சரி தான். அவன் சொல்ற யதார்த்தத்தை புரிஞ்சுக்கம்மா! அவனை திட்டி பேசி பிரயோசனமில்ல“.”யாரையும் குறை சொல்ல முடியாது.அவன் தரப்பில் நியாயம் இருக்கு“.”ஆக வேண்டிய மத்த காரியத்தை பார்ப்போம்". பாச்சா மாமா சொல்லிக்கொண்டுருந்தார்.

தாயாதிகள் யாரும் இல்லை. நெருங்கிய சொந்தமும் இல்லை. யார் இந்த மனுஷனுக்கு கொள்ளி போட. .இருக்கா?

தூரத்து சொந்தம்ஒருவர் தான்கொள்ளி போட்டால், தனக்கு சொத்து ஏதும் கிடைக்குமா? என்று கேட்டு கொண்டுருந்தது

“சே என்ன அல்பமான. எண்ணம்.! அந்திம கிரியை செஞ்சா அஸ்வத மேக யாகம் செஞ்ச புண்ணியமன்னு”; பெரியவா சொல்லி இருக்ககார்ன்னு படித்த ஞாபகம் ரெங்கனுக்கு வந்தது.

இன்னிக்கு நடுத்தர குடும்பத்தில், பெற்றோர்கள் சந்திக்கும் பிரச்சனையே, இது தான்.

பிள்ளையை, படிப்புக்கு வெளிநாடு அனுப்பிவிட்டு, அங்க அவங்களுக்கு வேலை கிடைச்சு, அங்கிருந்து இது மாதிரி சூழ்நிலையில், அவங்க, இங்கே வருவதுக்கு படுகிற கஷ்டம் கொஞ்சம் நஞ்சமல்ல.

“பெரிய வினா? ஆனால் விடை கிடைக்காத வினா?”

ராஜத்தின் மனதில் அவள் நினைவலைகள் சத்ய மூர்த்தி தன்னிடம் ஆறு மாதம் முன்பு பேசியது வந்து போனது.

“ஏண்ணா!, கடன் வாங்கி, ஸ்ரீராமை படிக்க வைச்சு, அவன் நல்ல நிலைமைக்கு வர வைச்சு. ஒங்க கடமையை செய்துட்டேள்”.

“ஆமாம் ராஜம்! கடன் பட்டு அனுப்பி இருக்கோம் அவன் சம்பாதிச்சு அனுப்பனும்”

“ஆனா, அவன் கடமைய செய்வான்னு, தோனல, வேலைக்கு போய் அஞ்சு வருஷம் ஆச்சு, இன்னும் பணம் அனுப்பலியே?”

இவர்கள் பேச்சை கேட்டவாறே மாட்டு கொட்டை கையிலுருந்து வந்த ரெங்கன்,

“இப்படி நீங்க எதிர்பார்க்கிறது தப்புய்யா”! “நம்ம லட்சுமி போட்ட கண்ணுக்குட்டிகள் எல்லாத்தையும்,

வளர்த்து நாம் ஒரு நல்ல விலைக்கு, இது வரைக்கும் வித்து இருக்கோம்". என்னிக்காவது நம்ம லட்சுமி, நாமே பெத்து வளர்த்த கண்ணுக்குட்டி நம்மளை விட்டு போகும்போது, நமக்கு ஒன்னும் செய்யாம போகுதேன்னு நினைச்சுருக்குமா ? அது பிரதிபலன் பாக்குதா?"

“அஞ்சறிவு படைத்த அதுவே, கலங்கமா இருக்கும் போது, ஆறறிவு படைச்ச நாம், ஏன் ஸ்ரீராம் தம்பிக்கிட்ட பணம் எதிர்பார்க்கணும்?” “கடவுள் ஏதாவது வழி வைச்சுருப்பார்”. “நீ உன் கடமையை செய் பலனை எதிர்பார்க்காதே. நாம செய்யற நல்லதுகெட்டதுக்கு கடவுள் கணக்கு வைச்சி ருப்பாருன்னு நீங்க தானே சொன்னீங்க.!!”

ரெங்கன் இப்படி சொன்னதும், இருவரும் கொஞ்சம் அதிர்ச்சி ஆனது என்னவோ உண்மைதான்.

அதிகம் படிக்காவிட்டாலும், எவ்வளவு பெரிய தத்துவத்தை சொல்லியுள்ளான்.

———-*—-

அவன், இந்த வீட்டுக்குள் காலடி வைத்து 10 வருஷம் ஆகிவிட்டது.

ஒரு நாள் இரவு இவனும் இவன் கூட்டாளியும், திருட வந்தவன் மாட்டி கொண்டதும், கூட வந்தவன் தப்பித்து கொள்ள, விசாரித்ததில், பசிக்காக திருட வந்தேன், தான் அனாதை என்று சொல்லும் போது அவன் வயது 10.

சீர்திருத்த பள்ளியில் சேர்த்து விடலாம் என்று நினைத்தபோது, ராஜம் தான், இரக்க பட்டு அவனை நம்மோடு வைத்து கொள்ளலாம் என்று சொல்லவே, இவன் ஒழுக்கமும் நேர்மையும் பிடித்து போக,

இங்கேய அவர்கள் மனதில் இடம் பெற்றான்.

“எங்கிருந்தோ வந்தான் இடைஜாதி நான்என்றான்” என்கிற பாரதி பாட்டுக்கு ஒத்த மாதிரி; எல்லா வேலைகளையும், இழுத்து போட்டு செய்து முடித்தான்.

ஆனால், ஏனோ ஸ்ரீராமுக்கு மட்டும் ஆரம்பத்திலிருந்து, ரெங்கனை

பிடிக்காமல போனது. அவனோடு எப்போதும் சண்டை. ஒரு எதிரியை போல் நடந்து கொண்டான்.

ரெங்கனை தலை மேல் தூக்கி வைச்சு, அம்மாவும், அப்பாவும், ஆடுவது பிடிக்கவில்லை.

ராஜமும், சத்தியமூர்த்தியும் இரண்டு பேரையும் சமமாக நினைத்தாலும், ஸ்ரீராம் மனசு என்னவோ ரங்கன் மீது, காழ்புணர்சியாகவே இருந்தது.

தினமும் காபி சாப்பிட்ட பிறகு, அவரோடு நாலு வீதி வாக்கிங் போயிட்டு, அவருக்கு மூட்டு வலிக்கு தைலம் தேச்சுவிட்டு, அவர் குளிச்சுட்டு வர வரைக்கும்.

மாட்டுக் கொட்டிலை பெருக்கி, சுத்தமாக வைப்பது, தினமும் லக்ஷ்மியையும், அதன் கண்ணுக்குட்டியையும், குளிப்பாட்டி, சாம்பிராணி போட்டு விட்டு. கொல்லை யிலுருந்து பூச்செடியில் பூக்களை பறித்து அவர் தினமும் திருமண இட்டுக்கொள்ளும் மேடை அருகில் வைத்து விடுவான். அதற்குள் மணி 9 ஆகிவிடும்

சத்தியமூர்த்தி தன் பூஜை போது, சொல்லும் திவ்ய பிரபந்தை காது குளிர கேட்டு, கேட்டு, திருப்பி சொல்லும் அளவுக்குதேர்ச்சி ஆகிருந்தான். பின் பக்கத்து மில்லில் வேலைக்கு போய்விடுவான்.

காலப்போக்கில் கனடாவில், மேல படிப்பு பின் அங்கேயே சாப்ட்வேர் இஞ்சீனியர் வேலை ஸ்ரீராம் க்கு கிடைக்கவே.அஞ்சு வருடத்தில் ஒரே முறை ஊர் வந்திருந்தான்..

——-—-*—-

எப்படியோ சிரமப்பட்டு ஊர் வந்த ஸ்ரீராம், 9 ம் நாள் அன்று, மொத்த எட்டு நாளுக்கு சேர்த்து எள்ளும் தண்ணீரும் தர்பணம் செய்வது தனக்கு மனசு ஒப்பவில்லை. அந்த ஆத்மா தவிக்குமே. ஆனாலும் காலத்தின் கோலம், மற்ற சூழ்நிலைகள் உத்தேசித்து, தனக்குள் சமாதானம் ஆகி கொண்டாள்

ராஜம்.

எல்லா காரியமும் முடிந்த பின், மறு வாரம் ஒருநாள் வக்கீல். தன் வீட்டுக்கு வரவும் ராஜம் அதை எதிர்பார்க்க வில்லை

"அம்மா வக்கீல் ஃபோன் செய்தார்ம்மா. அப்பா ஏதோ உயில் எழுதி உள்ளராம்,

எதையும் மறைக்காமல் உள்ள கணவர், தனக்கு கூட இந்த செய்தி தெரியாமல் மறைத்தது பற்றி, அவளுக்கு வருத்தம் தான்.

ரெங்கன் ஏதோ வேலையாக வெளியே போயிருந்தான்.

உள்ளூர் பிரமுகர்களை அழைத்ருந்தான் ஸ்ரீராம் உயிலில் என்ன எழுதி இருக்கும் என்கிற கவலை அவனுக்கு.

சத்யமூர்த்தியின் உயிலை வக்கீல் படிக்க ஆரம்பித்தார்.

“நம் உயிர் சாசுவதம் அல்ல. இன்றைக்கு செத்தா மறுநாள் பால் என்கிற நிலைமை”. என் ஸ்ரீராம்

எனக்கு கொள்ளி போடுவான் என்கிற நம்பிக்கை இல்லை; அவன் கனடாவிலிருந்து வருவது அவ்வளவு சுலபமல்ல. என் பிரேதத்தை அக்ரஹாரா மக்கள் வெகு நேரம் வைக்க விரும்ப மாட்டார்கள். எனவே என் ரெங்கன் எனக்கு கொள்ளி போடட்டும்";

“அவன் எனக்கு செய்த பணிவிடைகள் ஸ்ரீராம் கூட செய்திருக்க மாட்டான். அப்படி எனக்காக உழைத்துள்ளான்”. “அவனுக்கு நான் கைமாறு ஏதும் செய்ய வேண்டும்; மேல கொல்லை புஞ்சை நிலம் 100 குழி இன்றைய மார்கெட் நிலவரப்படி 5 லட்சம் தேறும். விற்றுஅவன் பலன் அடைய வேண்டும்”. வீடு ராஜத்தின் மறைவுக்கு பிறகு ஸ்ரீராம் அடைய வேண்டியது.

உயிலை படித்து விட்டு வக்கீல் சென்றதும்,

“எங்கிருந்தோ வந்தவனை அப்பா இப்படி தூக்கி வைச்சு, ஆடினது மட்டுமல்லாமல் அவனுக்கு சொத்து வேற கேடா?” “அவன் என்ன ப்ராமணனா? சாஸ்திரம் படித்தவனா? குலம் என்னவோ? கொள்ளி போட்டதற்காக இவ்வளவு பெரிய சொத்தா?” “நாம் தானே இவ்வளவு வருஷம் சோறு போட்டு காப்பாத்தி வரோம்”. ராஜத்துக்கு கோபம் வந்தது. அவளுக்கு ஸ்ரீராமின் பேச்சு நடவடிக்கை ஏதும் பிடிக்கவில்லை.

“ஒரு முறை காவேரியில் குளிக்க, நீ, அப்பா ரெங்கன் மூவரும் சென்ற போது, அவனை கரையில் நிற்க சொன்னவர், நீயும் அவரும் குளித்து விட்டு கரை ஏறும் போது அவனை பிடித்துகொண்டு ஏறினார்”.

இதை பார்த்த நீயும் சரி; அக்ரஹாரத்து மக்களும்; ஏன் இப்படி செய்தீர்கள்? விழுப்பு மடி பார்க்க வேண்டாமா? என்று கேட்டபோது; "தினமும் காலை உடையவர் காவிரிக்கு நீராடச் செல்வார். அப்படிச் செல்லும் போது அவர் முதலியாண்டான் கையை

பிடித்துக் கொண்டு செல்வார். நீராடிவிட்டு வரும் போது உறங்கா வில்லி தாசன் கையை பிடித்துக்கொண்டு வருவார்.

ஸ்ரீராமானுஜர், முதலியாண்டான் இருவரும் பிராமணர்கள் ஆனால் பிள்ளை உறங்காவில்லி தாசன் அந்தணர் குலம் கிடையாது. பொதுவாக நீராடிவிட்டு வரும் போது யார் மீதும் பட மாட்டார்கள். ஆனால் உடையவர் அந்தணர் அல்லாத தாஸன் கையை பிடித்துக்கொண்டு வந்ததுவியப்பை அளித்தது. பலர் முகம் சுளித்தார்கள்.

சிலர் ஸ்ரீரமானுஜரிடம் இதைப் பற்றி கேட்க அதற்கு உடையவர் “தாஸருக்கு உள்ள நல்ல எண்ணம், பாவம், பக்திஎன்னிடம் இல்லை. எப்ப பிராமணாக பிறந்தேனோ, எனக்குள் குல செருக்கு எங்காவது வந்துவிடுமோ? என்று பயமாக இருக்கு. ஆனால் உறங்காவில்லி தாசனுக்கு அந்த செருக்கு கொஞ்சம் கூட இல்லை. அதனால் அவர் கையை பிடித்துக்கொண்டுவருகிறேன் என்று சொன்னாராம்.”நான் உடையவர் மாதிரி கற்றவன் இல்லை ஆனால் ரெங்கனோ உறங்காவில்லி தாசன் மறு பிறவி என்பதில் சந்தேகம் இல்லை".

“அப்பா மேல் உனக்கு அப்போது கோபம் வந்தது. அது உன் அறியாமை என்று நான் விட்டு விட்டேன். ஆனால் அப்பா ஒரு முற்போக்கு சிந்தனைவாதி”.

“அப்பா ஆக்சிடென்ட் ஆகி கால் நடக்க முடியாமல் இருந்த போது, பிசியோ தெரபி கொடுத்து அவரை மீண்டும் நடக்க வைத்தது அவன் தான்”.

“நீ பட்ட கடனுக்கு பணம் அனுப்ப மால் இருக்கவும், அதை நினைத்து, ஒரு முறை ஓங்க அப்பா, புலம்பிய போது, கடவுள் பார்த்துப்பார் என்று தன் சம்பளத்தை, உன் கல்வி கடனுக்கு கட்டியவன்”.

"அன்று அவன் பேசிய வார்த்தைக்கு அர்த்தம் தெரியல. இப்ப தான் அர்த்தம் புரிஞ்சுது.

“என்ன சிரமமோ ஸ்ரீராம் தம்பியால், கடனை அடைக்க முடியல. நான் அடைக்கிறேன். அய்யாகிட்ட சொல்லாதீங்க” என்று என்னிடம் சத்தியம் வாங்கிகொண்டான்.

“பிரமாணனன்னு சொன்னா மட்டும் போதுமா?” “ஆளவந்தார் குருவின், ராஜ பிளவு நோயை தன் மேல் ஏற்றுக்கொண்டு வாழ்ந்த மாற நேறி நம்பி ஒரு தாழ்ந்த குலம்”. அப்படிதான் ரெங்கனும் அவன் எந்த குலம் ஜாதி எனக்கும் அப்பாவுக்கும் முக்கியமல்ல; அவனுக்கு எல்லாமே தெரியும். அதோடு மனித நேயம் கொண்டவன். கடந்த 10 வருடங்களாக எங்கள் துயரத்தில் பங்கு கொண்டவன் அதுவும் கடந்த 5 வருடங்களா நீ இங்கு இல்லாதபோது அவன் செய்த உதவிகள் பணிவிடைகள் எப்போதும் மறக்க முடியாதவை.

“சில உண்மைகளை வெளிப்படையாக ஏற்றுக் கொள்ளும் பக்குவத்தை இந்த பூமியில் நிரம்ப படித்தவர்களும் கூட, அடையவில்லை என்பதற்கு நீயும் ஒரு எடுத்துக்காட்டு”.

“என்னமா இப்படி சொல்றே?”

“பின்னே எப்படி சொல்லணும் ?”

“நான் இப்படி பேசுவதால், அறிவுரை புத்திமதி சொல்கிறேன்; என்று நீ நினைக்க கூடாது”.

“உலகில் எந்த நாட்டில், பிறப்பால், தொழிலால் இழிந்தவர்கள் என்ற பிரிவினர் உள்ளார்கள் சொல்லு?”

“பெருமாள் கோவில்களில் எல்லோரது தலையிலும் வைக்கப்படும்”சடாரி" என்பது

நம்மாழ்வார் எனப்படும் பிராமணரல்லாத நான்காம் வர்ணத்தினர் காலடிகள் / திருவடிகள்.*

*இது உனக்கு தெரியுமா?"

பிராமணர் மட்டுமல்லாது எல்லோரும் பெரிதும் போற்றும் "ஶ்ரீவிஷ்ணு ஸகஸ்ரநாமம்" இன்றும் ஜோதிடர்கள் பிராயச்சித்தம் என சொல்வது ஶ்ரீ விஷ்ணு ஸகஸ்ரநாம பாராயணம் தான்; விஷ்ணு ஸகஸ்ரநாமம் க்ஷத்திரியரான ஶ்ரீ பீஷ்மரால் சொல்லப்பட்ட ஸ்துதி. இதையும் பிராமணர்கள் உருவாக்கவில்லை; மாறாக வர்ண பேதமின்றி துதித்து வணங்குகின்றனர். கீதையை சொன்ன ஶ்ரீ கிருஷ்ணன்*, பிறந்ததோ இடையர் குலம். பிராமணனாகிய ராவணனை வதம் செய்ய ஶ்ரீ ராமன் அவதரித்ததோ க்ஷத்ரியர் குலம். "பிராமணர் அல்லாத குலத்தில் பிறந்தார்கள் என்பதற்காக ஶ்ரீ ராம, ஶ்ரீ கிருஷ்ண நாமங்களை பிராமணர்கள் ஜபிக்காமல் இல்லை". "சொல்லப் போனால் அதை உச்சரித்துக் கொண்டே காலம் கழிப்பதுதான் மோட்சத்திற்க்கு வழி என பலர் வாழ்கின்றனர்."

"12 ஆழ்வார்களும் வெவ்வேறு ஜாதி. அவர்கள் பாடிய பிரபந்ததை சேவிக்கலையா நாம்?" ஜாதி, வர்ணம் என்பதை விலக்கி ஞானத்தினை முன்னிறுத்திய நம் முன்னோர்களளின் உயர்ந்த மரபு அது. அப்படிப்பட்ட விசயங்களை நாம ஏற்று கொண்டோம்". இந்த ரங்கன் விசயத்தில் மட்டும் உனக்கு ஏன் இவ்வளவு முரண்பாடு?".

"பிறர் துன்பப்படுவதைப் பார்த்து எப்போது ஒருவன் இரக்கத்தால்,"ஓ" என்று கத்துகிறானோ அப்போது அவன் உண்மையான வைஷ்ணவன் ஆகிறான்"

"இதற்கெல்லாம் ரங்கன் தான் உதாரணம். அவனுக்கு சமாஷ்ரேயனம் அதாவது பஞ்சசமஸ்கரம்

பண்ணியாச்சு; அவன்தான் தன் குருவான உங்க அப்பாவுக்கு, ஒரு சிஷ்யனா எல்லாத்தையும் சாகும் வரையும் செய்தவன்".

"நீ சின்ன வயதிலேயே அவன் மேல் குரோதம் கொண்டிருந்தவன். நீ இன்னும் திருந்திவில்லை என்பது உன் சுய நல புத்தி மூலம் தெரிஞ்சுது."

"பிறருக்காக வாழ் வதுதான் நிஜமான வாழ்க்கை; தியாகததால மனித வாழ்வு அர்த்தமுள்ள தாகிறது"

"பிரபல எழுத்தாளரிடம் ஒருவர் கேள்வி கேட்டார். மனிதர்களுக்கு மட்டும் ஏன் இறைவன் பகுத்தறிவை வைத்தான்?" என்று; "மற்ற நல்ல குணங்கள் எல்லாவற்றையும், மிருகங்களுக்கு கொடுத்துவிட்டான். கடைசியில் இது ஒன்று தான் மீதி இருந்தது. .அதனால் அதை மனிதனுக்கு கொடுத்தான்.!" என்றாராம் உண்மைதான்.. நன்றியா நாயை பார்.!; கூடி வாழ வேண்டுமா காக்கையைப் பார்.!; காதலா புறாக்களைப் பார் !; மானமா மானைப்பார் !; உழைப்பா மாட்டை பார் !; பொறுமையா கழுதையை பார் !; மனிதனிடம் எதைப் பார்ப்பது?; பாம்பு கூட சத்தியத்துக்கு கட்டுப்படும்.!; மனிதன் மட்டும் தான் உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினைப்பான்.. கொடுத்தவனையே அழிப்பான்.!

"அதனால் தான் நல்லது கெட்டது எது என்பதை நீயே அறிந்து கொள் என்று உணர்ந்து அறியும் பகுத்தறிவை மனிதனுக்கு வைத்தான்.! என்று விளக்கம் அளித்தார்.

"ஆனால் நீ இதை புரிந்து கொள்ளாமல் ரங்கன் மீது துவேஷம் காட்டறே".

இதையெல்லாம் கேட்டுக் கொண்டே உள்ளே வந்த ரங்கன், " ஸ்ரீராம், அய்யாவே போயிட்டாரு. அவர் என் மேலுள்ள அபிமானத்தில் அப்படி உயில் எழுதி

இருக்கலாம். “ஆனா, நான் எதையும் எதிர்பார்க்கல. என்னை வளர்த்து சோறு போட்டு வளர்த்த அந்த மனிதருக்கு நான் நன்றிக்கடன் செய்யவேண்டும் என நினைத்து, அன்று அய்யா போன அன்னிக்கு யார் கொள்ளி போடு வாங்க என்ற குழப்பமான சூழ்நிலை நிலவிய போது அம்மாகிட்ட போய் எனக்கு அந்த பாக்கியத்தை கொடுங்கன்னு கேட்டுகிட்டேன்.” அம்மாவும் சரின்னு சொன்னபிறகு நான் அந்த கடமையை மனப்பூர்வமாக செஞ்சேன்; நான் எந்த பலனையும் எதிர் பார்க்கல? “மேலகொல்லை சொத்தை நீங்களே வைச்சுங்க தம்பி!”

“எனக்கு, நான் வளர்த்த லக்ஷ்மி மாடு மட்டும் போதும்; அத பிரிஞ்சி என்னால் இருக்க முடியாது”.

சற்று நேரம் யோசித்த ஸ்ரீராம், அம்மா சொன்ன விளக்கங்களும் ரெங்கனின் உண்மையான அன்பும் அவனுக்கு தெரிய வந்தது.

தான் எவ்வளவு படிச்சிருந்தும், மனசில் இருந்த வன்மத்துக்கு வருந்தினான்.

“உடனே வன்மம் போயீடுமா என்கிற சந்தேகம் வரும். சில விசயம் ஃபிளாஷ் மாதிரி தான்.”

“அம்மா என்னை மன்னிச்சிடு”

“இன்னும் ஒரே வருசம் தான். கான்ராக்ட் முடிஞ்சுடும்.”

“அதுவரைக்கும் அம்மாவ பாத்துக்கோ உன் மனசுக்கு முன்னாடி நான் சாதாரணமானவன்”. “என்னை மன்னிச்சிடு ரங்கா”.

சாஸ்டாங்கமாக காலில் விழுந்தான் ஸ்ரீராம்.

ராஜத்துக்கு, ஆனந்த் கண்ணீர் வரவே இருவரையும் அணைத்து கொண்டாள்.

# சமஉரிமை

கிட்ட தட்ட 6 மாதமாக, நிறைய வரன்கள். போட்டோக்கள் ப்ரொபைல் பத்மா பார்த்து, சொல்வதும்; திவ்யா தான் போடும் கண்டிஷன். மூலம் அதை நிராகரித்து, கொண்டுருந்தாள்.

அலுத்து போன பத்மா, கடைசியாக ஸ்ரீராம் போட்டோ, ப்ரொபைல், ஜாதகம் கண்ணில் பட்டதும் பிரகாசமானாள்.

நிறைய ஜாதகங்கள் பார்த்து, பார்த்து, ஒரு சோசியர் அளவுக்கு எத்தனை பொருத்தம் இருக்கு? செவ்வாய் தோஷம் இருக்கா?மாங்கல்ய பலம் இருக்கா? குழந்தைகள் எவ்வளவு? என்று எல்லாவற்றையும் கணித்து சொல்லும் ஆற்றல் இருந்தது. பத்மாவிடம்.! இருந்ததே அவள் பிரகாசத்துக்கு காரணம்.!

“ஏய் திவ்யா! இந்த ப்ரொபைலும் ஜாதகமும் உன் ஜாதகத்துடன் ஒத்து போகுது”. “பையன் ஸ்மார்ட் ஆக இருக்கான். நல்ல சம்பளம் வீடு சொத்து இருக்கு. உனக்கு பொருத்தமா இருப்பான்”. ஸ்ரீராம் ஜாதகம் தி பெஸ்ட் என்றாள்".

ஸ்ரீராம் ப்ரொபைலை பார்த்ததும் அவளுக்கும் பிடித்து இருந்தது.

“இவனும் யுஎஸ் ல, எம்.எஸ். ஓரளவுக்கு நான் சொல்லும் கண்டிஷனுக்கு இவன் ஒத்து போவான்”

என்கிற நம்பிக்கை மனதில் வர தொடங்கியது.

“இந்த வரனையாவது, பொண்ணு பாக்க வர சொல்லட்டுமா?”

“ஏம்மா! நீ எந்த லோகத்தில் இருக்கே? பொண்ணு பாக்க வரேன்னு ஒரு கூட்டம் வரும். பஜ்ஜி சொஜ்ஜி காபி சாப்பிட்டு,” லெட் யூ நோ ன்னு" சொல்லிட்டு போவாங்க."

“அது தானே முறையும் பழக்கமும்.” பாட்டி வாதித்தாள்.

“அதெல்லாம் ஓங்க காலம்”

“இங்க பாரும்மா ! இது என்னோட வாழ்க்கை சம்பந்தப்பட்ட விஷயம்.நீ பாத்து வைச்சுருக்கிற ஶ்ரீராம், பெண்களுக்கு சுதந்திரமும், ஈக்குவா லிட்டிரைட்கொடுக்கிறவனா இருப்பானான்னு, நான் பேசி, செக் பண்ணனும்.”

“நான் போடும் கண்டிஷன்களுக்கு எல்லாம், அவன் பதில் என்னன்னு, தெரிஞ்சுக்கனும்.” அதனாலே ......

“என்ன சொல்லவரே?” கோபத்துடன் கேட்டாள் பத்மா.

“ஶ்ரீராமை, நான் சொல்லும் ஹோட்டல்க்கு வரசொல்லு. நானும் கல்பனாவும் போய்க்கிறோம். நீங்க வரவேண்டாம்”.

“அதே மாதிரி, அவங்க அப்பா அம்மா வரவேண்டாம். ஶ்ரீராம் பாரெண்ட்ஸ் கிட்ட சொல்லிடு.”

பதிலுக்கு காத்திராமல் ஆபீஸ் கிளம்பி போனாள் திவ்யா.

“யு.எஸ்ல, எம்.எஸ் படிச்ச திமிரு. அவ பேச்சு கலாச்சாரம் இப்படி தான் இருக்கும்”. வருகிற வரன் எல்லாம்; இவ போடுகிறே கண்டிஷன்ல, எதுவும் தகையிலேங்கற கவலை உனக்கு“;”எல்லாத்துக்கும் நேரம் வரும். அப்ப நான் புரிய வைக்கிறேன்" என்றாள். பத்மாவின் மாமியார் ராஜம்.

அதே சமயம் ஸ்ரீராமின், வீட்டில் “பொண்ணு அழகாக இருக்கு, நல்ல சம்பளம் மீடியா பாப்புலரிட்டின்னு கூடுதல் அட்வாண்டஜன்னு நினைச்சா, இவ்வளவு திமிரான பொண்ணா இருக்கே?”

இவர்கள் பேச்சை கேட்டவாறே, உள்ளே வந்த வாசு, “ஆன்ட்டி ஏன் பதட்டபடறீங்க?”

“சடங்குகளையும் சம்பிரதாயங்களையும் உடைக்கணும்ன்னு நினைக்கிற பொண்ணு அப்படி தான் பேசும்.”

“ஆணுக்கு நிகர் தாங்களும் சம்பாதிக்கிறோம் நாமே ஏன் ஈகுவாலிட்டி ரைட் பாக்கக்கூடாதுன்னு நினைக்கிறாங்க”!!

“ஒருவேளை, அவங்க பேசற பேச்சு நியாயம் இருந்தா ஓ.கே தானே.!!!”இல்லை பேச்சு திமிராக இருந்தா ஸ்ரீராம் பதிலடி கொடுப்பான்".

“வெல் செட் நண்பா.”

இப்பவெல்லாம் இம்மாதிரி ஹோட்டல்ல பேசறது தான் ட்ரெண்ட்".

“கல்யாண சந்தையில் நிலைமை மோசமா இருக்கு;”இன்னிக்கு இருக்கிற சூழ்நிலை ஒரு பெண்ணுக்கு, 20ஆண்கள் கியுவில் நிக்காறாங்க!!"

“ஸ்ரீராம் இல்லன்னா, இன்னொருத்தன், ரெடியா

இருக்கான்.!!!” “வரும் காலங்களில் நிலமை இன்னும் மோசமாதான் இருக்கும்.”

அடுத்த ஞாயிறு; மதியம் 3 மணிக்கு, பிரபலமான அந்த ஹோட்டலில்,

ஸ்ரீராம் வாசுவுடன், காத்திருந்த வேளையில், அழகு தேவதையாக

திவ்யாவும், கல்பனாவும் நுழைந்தார்கள்.

அவர்கள் போட்டுருந்த பர்ஃபுயும் வாசனை, அமர்க்களமாக இருந்தது.

“ஹாய்! ஹாய்!”

பரஸ்பர அறிமுகத்துக்கு பின், கை குலுக்கி கொண்டார்கள் நான்கு பேரும்.

“நைஸ் டு மீட் யூ.”

“என்ன சாப்பிடலாம். திவ்யா சொல்லுங்க.”

தனக்கு மாதுளம் மில்க் ஷேக் ஓகே! என்று சொன்னதும் ஆர்டர் செய்தான் ஸ்ரீராம்.

“ஓங்க ப்ரொபைல் சூப்பர்”

“தேங்க்ஸ்”

“எனக்கு ஓப்பனா பேசினா தான், பிடிக்கும்”.

“பஸ்ட் ஆப் ஆல் இந்த ஆண்களை நம்பறது இல்லை”.

“எனக்கு நிச்சயம் பண்ணி பிரேக் அப் ஆச்சு”.

“ஆஸ் ஆன் டேட், அஞ்சாறு பாய் பிரன்ட்ஸ் இருக்காங்க!!”

“கல்யாணத்துக்கு பிறகும் இது தொடரும்”.

“நோ பிரோப்ளேம்”

“கோ அ ஹெட்.”

“ஒரு வேளை கல்யாணம் ஆச்சுன்னு வையுங்க..; என்னை வாடி போடின்னு, அதிகாரம் பண்றது, பாண்ட் ஷர்ட் அயன் பண்ணி கொடுன்னு சொல்றது; சமைக்க சொல்றது, இதுக்கெல்லாம் எனக்கு டயம் கிடையாது. செய்யவும் மாட்டேன்”.

“என் கேரியர்ல நான் இன்னும் முன்னேறனும்.. சக்சஸ் ஆகனும்.”

“யூ நோ விமன் ஆர் ஈக்குவல் டு மென்”.

ஒருவித நக்கலுடன், கல்பனாவை, பார்த்து கண்ணடித்த திவ்யாவையும், அதுக்கு கல்பனா சிரித்தத்தையும், கண்டு, வாசுவின் முகத்தில் கோபம் தெரிந்தது.

“நான் சோசியல் மீடியாவில் பாப்புலர்., பார்ட்டி, அது இதுன்னு போவேன். எங்கே போறே? எப்ப வருவேன்னு? கேக்கக் கூடாது.”

“கல்யாணம் லக்சரியா இருக்கனும். என் மீடியா நண்பர்கள் கூட்டம் அதிகம்”

“அப்புறம் சொல்ல மறந்துட்டேன்... இந்த குழந்தை கான்செப்ட் எனக்கு சுத்தமா பிடிக்காது..”

நமக்கு குழந்தை பொறந்து, அதுக்கு பால் கொடுத்து, குளிப்பாட்டி, பாத்ரூம் போனா, அதை துடைச்சு, டயப்பர் மாத்தி, சே சே நினைக்கவே குமட்டுது".

"ஏண்டி குழந்தை பாக்கியம், எப்பேர்ப்பட்ட வரம். அது ஒனக்கு குமட்டுதா? ஸ்ரீராம் மைண்ட் வாய்ஸ் சொன்னது..

"நான் சொன்ன கண்டிஷன்ஸ் ஓக்கேன்னு நீங்க சொன்னா,

“லெட் அஸ் ப்ரோ ஸீட்”

“அதர் வைஸ் நோ. வி வில் டிஸ் ப ர்ஸ் நௌ இட் செல்ப்.”

“மொத்தத்தில் செலவு பண்ண, ஒரு ஏமாளி வேணும்” இப்போ வாசுவின் மைன்ட் வாய்ஸ்..

“எனக்கு ரொம்ப சந்தோசம் இப்படி ஒப்பனா, பேசினது”.

“ஓரே நிமிஷத்தில் ஓ.கே சொல்லிடலாம்”.ஆனா, ......... “அதுக்கு முன்னாடி எனக்கும் சில கண்டிஷன் இருக்கு”.

"ஒனக்கெல்லாம் கண்டிஷனா? மனத்துக்குள் நினைத்த திவ்யா,

“ஓ கே ஸ்ரீராம் ப்ரோஸீட்.”

“ஐ ஆம் ஆல்சோ நாட் ஏ வர்ஜின். எனக்கும் இரண்டு மூணு கேர்ள்ஸ் பிரண்ட்ஸ் இருக்காங்க”.

“நீ கிச்சன் பக்கம் போகாம. ஒனக்கு பிடிச்சது நீ ஆர்டர் பண்ணி சாப்பிட போறே. எனக்கு பிடிச்சத்தை நான் சாப்பிட போறேன்”.

“நீ எங்கே போறே? எப்ப வருவேன்னு கேக்க மாட்டேன்”.

“கல்யாணம் பிரமாண்டமா? அது மட்டும் நோ சான்ஸ்”.“என் சேவிங்ஸ் முழுவதும் இந்த கல்யாணத்துக்கு செலவு செய்ய நான் ரெடியா இல்லை”.

“தனிக்குடித்தனம் ஓகே.” ஏற்கனவே ஓவர்

ஜனத்தொகை நோ குழந்தை கான் சப்ட்". எனக்கும் ஓகே.

“செக்ஸ் வேணும்ன்னு சொன்னா, பாதுகாப்புடன் வைச்சக்கலாம்”.

“உன் அழகு சாதன பொருளை வாங்க, நான் பணம் தரமாட்டேன்”.

“ஒரு வேளை பிற்காலத்தில், நம்மில் ஒருத்தருக்கு கருத்து வேற்றுமை ஏற்பட்டு, பிரியன்ம்ன்னு நினைச்சா,”நோ வயலன்ஸ், நோ கம்ப்ளன்ட், நோ பர்சனல் அட்டாக், நோ மீடியா இன்டெர்வியு“. ஓகே.”எல்லாமே லீகல் ஆக இருக்கனும். மேரேஜ் காண்ட்ராக்ட் உட்பட."

“எனக்கு கொஞ்சம் டயம் வேணும் யோசிக்கணும்;”

"நாம போகலாமா? திவ்யாவும் கல்பனாவும் எழுந்து கிளம்பும் போது,

“எக்ஸ்கியூஸ் மீ.”

வெயிட்டர் கொடுத்த பில்லை, திவ்யா பக்கம் தள்ளி, என் பில்லுக்கு பணம் வைச்சுட்டேன். ஓங்க பில்லை பே பண்ணுங்க"

“வாட் யூ மீன் ?”

“யூ ஒன்லி கால்டு மீ”.

“நீங்க தானே சொன்னீங்க ஈக் குவாலிட்டி ரைட் வேணும்ன்னு இதை தான் நான் செஞ்சேன்.”

திவ்யாவுக்கும் கல்பனாவுக்கும், அவமானம் தாங்காமல் குன்றி, குறுகிப்போன முகத்தை, பார்த்த வாசுவிற்கு, வந்த சிரிப்பை அடக்கி கொண்டான்.....

நடந்த விஷயத்தை வீட்டில் சொன்ன போது,

பாட்டி மட்டும் ஸ்ரீராம் கரெக்ட்டா தான் சொல்லி இருக்கான் என்றார்.

இரண்டு மூன்று நாள் போனது. யாரும் இதை பற்றி பேசாமல் இருந்தார்கள்.

ஒருநாள் பாட்டியும், பத்மாவும், அவன் வேலை செய்யும் பாங்கில் யதார்த்தமாக பார்க்க நேரிட்டது .

தன்னுடைய சாம்பர்க்கு கூப்பிட்டவன், கூடவே மணமணக்கும் காபியையும் கொடுத்து விட்டு, பேச ஆரம்பித்தான்.

“பாட்டி நானும் யுஎஸ்ல படிச்சவன் தான்”. “இன்பாக்ட் திவ்யா எண்ணம், செயலுக்கு, பதிலடி கொடுக்க தான், நான் அன்னிக்கு அப்படி பேசினேன்”. “ஒங்க குடும்பம், கலாச்சாரம் விசாரித்தேன் எனக்கு பிடிச்சு போச்சு”. திவ்யா பேச்சு முழுக்க முழுக்க கற்பனை. ஏன்? இப்படி கல்யாணம் என்கிற புனிதமான உறவை, பலவிதமான பலவீனமான எண்ணங்களுடன், மனதில் உருவாக்கி, வாழந்து கொண்டு, தனக்கும் சரி, உங்களுக்கும் சரி ஒரு விதமான கஷ்டத்த கொடுக்கிறாங்ன்னு தெரியல?".

“திவ்யா எதிர்பார்க்கும் உரிமையை இன்றைய ஆண்களிடம் கேட்கும் போது யாரும் ஒத்து கொள்ளமாட்டார்கள்?”.

"அவர்களுக்கும் ஈகோ.

“ஆணுக்கு தானடி மீசை அதிலே உனக்கென் ஆசைன்னு” ஒரு திரைப்படத்தில் நடிகர் பாடுவதை போலதான்; எல்லோரும் இருக்க விரும்புகிறரர்கள் ".

“எல்லா பெண்களும், தன் கணவர், தன்னை ஒரு மகாராணியா, வைச்சுக்கணும்ன்னு நினைக்கிறாங்க!! அதில் தப்பு கிடையாது”

“ஆனா வந்துருக்கிற கணவனையும், ஒரு மஹாராஜன் மாதிரி மனைவியும் கவுரவபடுத்தனும்ன்னு சொல்லும் போது, ஒத்துக் கொள்வதில்லை”.

“தனக்கு அடிமையாக இருக்கணும் நினைக்கிறாங்க.”!

“இதற்கு காரணம் கல்வியறிவு பெற்ற பெண்களின் எண்ணங்களும், சிந்தனைகளும், மாறுகின்றன”.

“படிப்பறிவு வந்தவுடன் சுயமாக வாழவேண்டும்; தனக்குப் பிடித்த கணவனையும், வாழ்க்கையையும் தானே தீர்மானிக்க வேண்டும் என நினைக்கிறாள்.”

“கடந்த தலைமுறையில், மனைவியைவிடக் கணவனின் வயது பொதுவாக அதிகமாக இருக்கும். பொருள் சார்ந்த குடும்ப ஓட்டமும் பெரும்பாலும் கணவன்கிட்ட இருக்கும்”. இவற்றுடன் கலாச்சாரம் சார்ந்தும், பெண் விட்டுக்கொடுத்துப் போகவே பழக்கப்பட்டிருந்ததால், குடும்பங்கள் ஈகோவில் சிக்காமல் தப்பிப் பிழைத்தன.

இன்றோ!! கிட்டத்தட்ட ஒரே வயதில், இணையான படிப்பு, வேலை, ஊதியம் என இருப்பதால் இளம் தம்பதிகளுக்கு மத்தியில் ஈகோ பிரச்சினை இயல்பாகப் பற்றிக்கொள்கிறது.

“நினைப்பு மாறினால்......? வழி வழியாய் வந்த கூட்டுக்குடும்ப வாழ்க்கை முறை மாறி, தனிக்குடும்ப வாழ்க்கை முறையை விரும்ப ஆரம்பித்தனர்”.

“அதிலும் வெற்றி கிடைக்க வில்லை. கருத்து வேறுபாடு யோசிக்காமல் விவாகரத்து இத்யாதிகள். சட்ட உதவி கொண்டு ஜெயிக்கலாம்ன்னு நினைக்கிறாங்க!”

“ஆனால் சட்டம் வேறு குடும்ப வாழ்க்கை வேறு”.

திவ்யாவும் அந்த வட்டத்துக்குள் வாழ விரும்புகிறாள். .

“திவ்யா சொன்ன வார்த்தைகள் அத்தனையுமே போலியானவை!.”

“இல்லை கல்யாணம் பற்றி, அவங்க தோழிக்கு ஏற்பட்ட கசப்பான அனுபவம், திவ்யா ஆழ்மனதில் ஒரு வடுவை உண்டு பண்ணி இருக்கணும்.”

“கல்யாணம் ஆனா, குழந்தை பொறக்கும் அதை வளர்க்க ரொம்ப கஷ்டபடனும்ன்னு; யாரோ அவங்களுக்கு, மூளைச் சலவை செய்து இருக்கணும்”. “தாய்மை என்பது எப்பேர்ப்பட்டவரங்கிறது, புரிந்து கொள்ளமால், குழந்தை வளர்ப்பு குமட்டுது சொல்றது, அறியாமைன்னு நான் நினைக்கிறேன்”. தனக்குள் ஒரு வேலியை போட்டுக்கொண்டு, தன் மேல் ஒரு தவறான அபிப்ராயம் இருக்கிற மாதிரி நடித்து கொண்டு வருகிறாள்.

"ஆனா வெளி உலகுக்கு, தான் பெரிய தைரியசாலின்னு நினைச்சுகிட்டு,

இக்வாலிட்டி ரைட் வேணும்; என்கிற போர்வையை போத்திக்கிட்டு தனக்கு வருகிற வரன்களை தட்டி கழிக்கிறங்கா!!!

“என்ன தான் படிச்சுருந்தாலும், சோசியல் மீடியாவில் பாப்புலாராக இருந்தாலும், அவங்க கிட்ட இருக்கிற அந்த ஆழ் மனது பயம் தான் காரணம்ன்னு நினைக்கிறேன்.”

“கரெக்ட் ஸ்ரீராம்”இப்படி ராஜம் சொன்னதும் தொடர்ந்து பேசினான்.

“இந்த பிரசின்னைக்கு சிறந்த மனோதத்துவ கவுன்சலிங் தேவை. இரண்டு மூணு சிட்டிங் போதும்.சரியாயிடும்.”

“சம்பாதிக்கிற கணவன் மனைவி இடையே, கணவன் காலையில் டிபன் வாங்கி கொடுத்தா, மதியம் மனைவி லன்ச் வாங்கி கொடுக்கணும்”. “இப்படி ஒருவர் மாத்தி ஒருவர் வாங்கி கொடுத்தா அது தான் இக்வாலிட்டி ரைட். அதை புரிஞ்சுகிட்டு ஒருவருக்கு ஒருவர் அன்பு செலுத்தணும்”.

"குடும்பம் என்கிற உறவில் —ஆண்கள், பெண்கள், பிள்ளைகள் ஆகிய அனைவருமே — மகிழ்ச்சிக்கான சம வாய்ப்புகளை கடவுளால் கொடுக்கப்பட்ட உரிமையாக அனுபவித்து மகிழணும்.

பரஸ்பரம் மதித்தல், புரிந்துகொள்ளுதல், ஆகியவற்றுடன் மனத்தாங்கல்களுக்கு ஆரம்ப கட்டத்திலேயே காது கொடுத்தால் அங்கே ஈகோவுக்கு இடமிருக்காது

“ஆழமான புரிதலும், நிபந்தனையற்ற அன்பும், கொண்ட தம்பதியரிடையே ஈகோ எடுபடுவதில்லை”.

“உலகத்திலே தமிழர் நாகரீகம் கலாசாரமும் உயர்ந்தது.அது திவ்யாவுக்கு தெரியலே”. திருலோக சீதாராம் தமிழில் மொழி பெயர்த்த மனு சாஸ்திரம். அதில் கணவன் மற்றும் மனைவி எப்படி தர்மத்தை கடைபிடிக்க வேண்டும்? என்று சொல்லியிள்ளார். “அதை படிக்க சொல்லுங்க. அப்ப தான் புரியும்.” நான் அப்படி இருக்கத்தான் ஆசைப்படுகிறேன்.

ராஜம் ஆச்சரியப்பட்டு போனாள். “இந்த சின்ன வயதில் எவ்வளவு தெளிவான சிந்தனை?”

“எவ்வளவு அனுபவ அறிவு இவனுக்கு”!

“எவ்வளவு தீர்க்கமான பார்வை, திடமான முடிவு எடுத்தல்”.

தான் இவ்வளவு வயது, கடந்தும் தனக்கு தெரியாத பல விஷயங்களை, ஸ்ரீராம் உணர்த்தியது பெருமையா இருந்தது.

——-——-*—-

விடை பெற்று இருவரும் வீட்டுக்கு வந்த பிறகு,

“நீ மேலைநாட்டில் படிக்க தானே போனே? ஏதோ அங்கேயே பொறந்த மாதிரி, அந்த கலாச்சாரத்தைபாலோ பண்ணனும்ன்னு நினைக்கிற. அதான் ஈக்குவாலிட்டி ரைட் ன்னு சொல்லிட்டு அலையற”. ஆனா இந்த சின்ன வயசில் எவ்வளவு அருமையா இந்துதர்மம், கூட்டு குடும்பம். பரஸ்பர அன்பு மனுதர்மம் பத்தி தெளிவா சொல்லிட்டான் ஸ்ரீராம்.

“தான் கேட்ட விஷயத்தை ஒன்று விடாமல் திவ்யாவிடம் சொல்லவும் ஒனக்குள் ஒரு ஆழ் மனசு வேதனை இருக்குன்னு ஸ்ரீராம் சொன்ன பின்தான் எங்களுக்கு புரிஞ்சுது”.

அப்படிப்பட்ட உணர்வு உனக்குள் இருந்தா, அதை உன் மனசுலருந்து முதலில் தூக்கி ஏறி புரியுதா.!! “நான் ஒன் பிரண்டு ஒப்பனா என்கிட்ட சொல்லு ’பாட்டி சொன்னதும்; தனக்குள் ஒரு ஆழ் மனது வடு உள்ளது உண்மை அது நிஜம் தான் என்று திவ்யா தலையாட்ட; என்னை விட ஒனக்கு ஏற்பட்ட அந்த பயத்தை ஸ்ரீராமே போக்கிடுவான் என்றாள்” பாட்டி. இப்படிப்பட்ட வரன் இனியும் கிடைக்காது.

பாட்டியை அணைத்து கொண்டு திவ்யா அழவும், ராஜம் அமைதி படுத்தினாள்.

“கவலைப்படாதே பாட்டி நான் இருக்கேன்டா”.

இரவு முழுவதும் யோசனை செய்த திவ்யா, பாட்டி சொல்வதில் நியாயம் இருப்பதை உணர்ந்து, ஸ்ரீராமிடம் தான் பேசிய பேச்சின் தவறை உணர்ந்தாகவும, மன்னித்து விடும்படியும், தான் கல்யாணத்துக்கு விருப்பம் என மறுநாள் பாட்டியிடம் முதல் முறையா நாணி வெக்கத்துடன் சொல்ல ஒட்டு மொத்த குடும்பமும் மகிழ்ச்சியில் திளைத்தது.

# ராமபத்ரனும் கொரானா வைரஸ்ஸூம்

மாலை 4 மணி ஸ்நாக்ஸையும், காபியையும், சாப்பிட்ட பின்பு, நடைபயிற்சிக்காக, கிளம்பிய ராமபத்ரனை தடுத்து நிறுத்தினாள் பத்மா. தன் தர்ம பத்தினி சொன்ன செய்தி இன்னும் அதிர்ச்சியை கொடுத்தது அவருக்கு.

“இதோ பாருங்கோ! ஊர் பூரா கொரானா வைரஸ் பரவுதாம். பார்க், பொது இடம், சினிமா, ஷாப்பிங் எங்கேயும் போக கூடாதாம் அரசாங்கத்தின் எச்சரிக்கை,”

“சானிடைசர் வாங்கி வைச்சிருக்கேன்; ஆத்தை விட்டு கிளம்பும் போது; அதை ஒரு சொட்டு கையில போட்டுண்டு; நம்ம தெருவுல வாக்கிங் போங்க, தெருவிலே யார்கிட்டேயும் கிட்ட போயி பேசாதீங்க, 5 அடி தள்ளியே நில்லுங்கோ, யாராவது தும்மினா உடனே அந்த இடத்தை விட்டு கிளம்பிடுங்க, என்ன புரியுதா?”

பூம் பூம் மாடு போல தலையாட்டினார் ராமபத்ரன்

பாக்கியம் ராமசாமி உருவாக்கின, ஜீவனுள்ள கதாபாத்திரமான அப்புசாமி, சீதாபாட்டியை நேரில் பார்க்கும் நிஜமான பாத்திரம் தான் நம் ராமபத்ரனும், பத்மாவும். தன் நேர்மையான உழைப்பில் 600 ச. அடியில சிங்கிள் ரூம் மட்டுமே வைத்து

கட்டியிருக்கிற தனி வீடு.

என்னதான், ராமபத்ரன் சென்ட்ரல் கவர்மெண்ட் ஆபிஸ்ல ரிடையர் ஆகியிருந்தாலும் அவர் வீட்ல எலி வெளியிலே புலி ரகத்தை சேர்ந்தவர்.

அந்த காலத்திலே பத்மா பி.யு.சி படித்தவர் மகம் நட்சத்திரம் கேக்கவா வேணும், ஜகத்தை ஆளும் என்பார்களே அது மாதிரி நிர்வாக திறமை; எதிலும் டிசிப்ளின்; ஆசாரம் நிறைந்த பெண்மணி வைர மூக்குத்தி வைரதோடு, ஜொலிக்க கோல்டன் பிரேம் கண்ணாடி, கையில் ஏதாவது வாரபத்திரிகை; உலக விசயங்கள் அத்துபடி; நாட்டு நடப்பு கேக்கவே வேண்டாம்.

தன்னை விட, தன் மனைவி புத்திசாலியாக இருப்பது, தனக்கு பெருமை என்றாலும், சமயத்தில், பத்மா தன்னை மட்டம் தட்டும் போதெல்லாம், ஆபத் பாண்டவனாக தன் ஒரே பெண் வசுமதி தனக்காக, பரிஞ்சு பேசுவாள். இப்ப, அவள் கல்யாணமாகி பெங்களூரில் இருப்பதால், இவருக்கு சப்போர்ட்டுக்கு ஆள் கிடையாது.

வசுமதி பேரில், ராமபத்ரனுக்கு கொள்ளை பிரியம். லேட்டா கல்யாணமாகி, தவமிருந்து, லேட்டா பொறந்த வசுமதி கல்யாணமாகி, அஞ்சாறு வருடம் கழிச்சு இப்பதான், உண்டாயிருக்கா; இப்ப 6வது மாசம். பெங்களூரில் உள்ள சாப்ட்வேர் இன்ஜினியராக வேலை பார்க்கும் வரனுக்கு, கல்யாணம் பண்ணி கொடுத்திருந்தார், அவளுக்கும், மாப்பிள்ளைக்கும் ஒரே கம்பெனியில் வேலை.

“இதோ பாருங்கோ, இன்னும் 15 நாட்களுக்கு வேண்டிய மளிகை சாமான்கள் காய்கறிகள் ஆன்லைன் மூலமா வாங்கிடுங்கோ”.

ராம்பத்ரன், ஆன்லைன் ஆர்டர் பண்ணும் போது

பத்மாவின் செல் சிணுங்கியது.

“யாரு பத்மா?”

“நம்ம வசுதான்னா,”

’என்னவாம்,"

’பெங்களுருலே கொரணா வைரஸ் தீவிரமாக இருக்காம், வொர்க் ஃப்ரம் ஹோம் பண்ண சொல்லிட்டாளாம், விட்ல குவாரண்டைன் இம்பளமெண்ட் பண்ணிக்க சொல்லிட்டாளாம்.

’நல்லது தானே,"

“ஏன்னா, அவளுக்கு மசக்கை அதிகமா இருக்காம் மயக்கமா வருதாம் அடிக்கடி வாந்தி வருதாம் அம்மா கையால சாப்பிட்டு ரெஸ்ட் எடுத்துண்டு, இங்கே வந்து வேலை பார்க்கறாளாம், மாப்பிள்ளையும் வரேன்னு சொல்றா,”

“நமக்கு உடம்பு சரியில்லை ன்னு சொல்லி இ பாஸ் வாங்கணுமாம்”.

“என் மெடிக்கல் ரிப்போர்ட் இத்தியாதி ஸ்கேன் பண்ணி அனுப்ப சொல்றா”.

“அங்கே ஓர்க் பிரேம் ஹோம் அப்புறம் வீட்டு வேலையும் பண்ணிக்க முடியலையாம்”.

“இப்ப என்னன்னா செய்யறது”?

“நீ முதல்ல போனை கட் பண்ணி அப்புறமா பேசறேன்னு சொல்லிவை.” “நம் ஆத்து பிரச்சனை தெரிஞ்சும் வசு இப்படி பேசறாளே,” ?

“வாயும் வயிறும் இருக்கற பொண்ணுக்கு, நாம பெங்களுருக்கு போயி அவளுக்கு ஒத்தாசையாக இருக்கலாம்ன்னு நினைச்சேன் இப்படியாயிடுச்சே?”

“நம்ம வீடு ஒரு சிங்கிள் பெட்ரூம் வீடு; இதிலே குவாராண்டைன் இம்பிளிமெண்ட் பண்ண முடியுமா? சிங்கிள் ரூம் மட்டும் வைச்சுண்டு இருக்கிறவா ஆத்திலே, இது சாத்தியமா? நம்ம மாதிரி நடுதர வர்க்க குடும்பங்கள் இம்பளிமெண்ட் பண்றது, ரொம்ப சிரமம் ஆச்சே?”

“தியாகமும், நம்பிக்கையும், போதுமான வசதிகளும் வேணுமே! நம் ஆத்துலே இது மாதிரி வசதிகள் இல்லையே? புலம்பினாள் பத்மா.”

“மேலை நாடுகளில் இத மாதிரி பிரச்சனை ஏற்பட்டால் அவர்களை தனிமை படுத்தும் வசதி உள்ளது. இந்தியாவிலே பாதுகாப்பான இடம் இல்லையே?”

“நம்ம சென்னையிலே திருவல்லிகேணி மைலாப்பூர் மாதிரி, நம்ம மாம்பலத்திலேயும் பெரும்பாரியான வீடுகள் ஒண்டு குடித்தனம் சிங்கிள் பெட் ரூம் வீடுகள் தான் இருக்கு”

இந்தியாவில் சமீப புள்ளி விவர கணக்குபடி ரூமே இல்லாதவங்க 3.9சதவீதமும் சிங்கிள் ரூம் மட்டும் உள்ளவர்கள் 379சதவீதமும் டபுள் ரூம் 31.79சதவீதமும் மூன்று ரூம்கள் 14.59சதவீதமும் நான்கு ரூம்கள் 7.59சதவீதமும் ஐந்து ரூம் 2.69சதவீதமும் 6 ரும் 2.89சதவீதமும் சதவீதம்.

“ஆனால் பிரான்ஸ், ஜெர்மனி, ஜப்பான் போன்ற நாடுகளில் வறுமைக் கோட்டிற்கு கீழே இருக்கறவங்களும் சரி, ஏழையாக இருந்தாலும் சரி; அந்த குடும்பத்தில் ஒவ்வொரு நபருக்கும் ஒரு ரூம் இருக்காம்.”

“ஆச்சரியமா இருக்கே, இதெல்லாம் ஒனக்கு எப்படி தெரியும் பத்மா?”

“ஒங்களை மாதிரியா? நான் நிறைய படிக்கிறேன்,

வாட்ஸ்ஆப் மூலம் தெரிஞ்சுண்டேன்.” “கொராணா வைரஸ் மூலம் பரவும்ன்னு சொல்றதாலே இத பற்றி இன்னும் தெரிஞ்சுண்டேன்.”

“நாளைக்கு வசு வந்தா அவளை கட்டிண்டு கொஞ்ச கூட முடியாது மாப்பிள்ளைக்கு தனி ரூம் கொடுக்க முடியாதே”?

“நீ அவளை கட்டிகறதும் கொஞ்சறதும் இருக்கட்டும்.”

அவா இரண்டு பேரையும் எப்படி தனிமை படுத்தறது? இந்த கொரணா வைரஸ் பத்தி செய்தி வந்தாலும் வந்தது, ஒரே பயமா இருக்கே?

“ஏன்னா அப்படி நினைக்கறேள்?”

“பின்னே என்ன?”

“வருமுன் காப்போம்ன்னு சொல்ற மாதிரி அரசாங்கம் நம்மளை ஜாக்கிரதையாக இருக்கணும்ன்னு சொல்றது, இதில் என்ன தப்பு?”

“உலக சுகாதார மையம் கொரோனாவை பாண்டேமிக் அதாவது தொற்று என்று அறிவித்து இருக்கு”

“4 ஸ்டேஜ் இருக்கிற இந்த வைரஸ், நம் நாட்டிலே இரண்டாவது ஸ்டேஜ்லே இருக்காம் வீட்டிலேயே இருக்கனுமாம் நாளையிலிருந்து நீங்க வாக்கிங் போக வேணாம். நம் ஆத்து மாடியிலே போனா வந்தா போதும்!”

“அந்த காலத்திலே”எங்க பாட்டி" என்று கட்டிக் கொள்ளப் போன போது, “இரு, இரு” என் மேலே பட்டுடாதே, போ போயி கை, கால் அலம்பிண்டு யுனிபாம் மாத்தி, வேற ட்ரஸ் போட்டண்டுவா; என்று விரட்டி விட்ட பாட்டியை பார்த்து, கோபம் வந்தது.

ஆசாரமாம், ஆசாரமாம் பாட்டியை திட்டினது, ஞாபகத்துக்கு வருது; நகத்தை கடிச்சா, போ போயி கை அலம்பிண்டு வா. இல்லாட்டிபோனா, வேப்ப எண்ணையை தடவி விட்டுவேன் என்றும் மிரட்டி பாட்டியை கோவிச்சிட்டு இருந்தோம்."

“அந்த காலத்திலே சுகாதாரத்தை, ஸ்டிரிட்டா பாலோ பண்ணினாங்க; சுத்தமா இருந்தாங்க; ஆனா இப்ப, அது மாதிரி இல்ல; இது மாதிரி வைரஸ் உலகம் பூரா வந்துடுச்சு”

“அடுத்த பத்தாவது நிமிடம் வசு மறுபடியும் மொபைலில் வந்தாள்”

“என்னம்மா கூப்படறன்னு சொல்லிட்டு கூப்பிடல,”

“அது ஒன்னுமில்லம்மா, ஒனக்கே தெரியும்; நம் ஆத்திலே ஒரு ரூம் மட்டும் தானே இருக்கு. ஓங்க ஆபிஸ் ரூல்ஸ் படி குவராண்டைன் இம்பிளிமெண்ட் பண்ணனும்னா, இருக்கிற ரூமை ஒழிச்சு ஒனக்கு கொடுத்துடலாம்”. “ஆனா, மாப்பிள்ளைக்கு என்ன செய்யறதுண்ணு தான் யோசிச்சேன்; வேற ஒண்ணுமில்லை மாற்று ஏற்பாட எதாச்சும் செய்யறேன்”. “நீ எதையும் யோசிக்காம கிளம்பி வந்துடுங்க,” “ஜாக்கிரதையா கிளம்பு கையில் சானிடைசர் சோப் தயாரா வைச்சுக்கோ சரியா,”

மறுநாள் காலை; எப்போதும் வசு வந்தால் தட்டி தழுவி ஆரத்தி எடுக்கும் பத்மா, வசுவும், மாப்பிள்ளையும் ஓலாவை விட்டு இறங்கியவுடன் இரண்டு பக்கெட் தண்ணீரை கொண்டு வந்து வைத்தபின்பு ஆளுக்கொரு மார்கோ சோப்பும் டவலையும் கொடுத்தாள்.

“இத பாரு வசு, நீயும் மாப்பிள்ளையும் நன்னா சோப் போட்டு கை, கால்கள் அலம்பிண்டு, நேரே

பாத்ரூம் போயி ஓங்க டிரஸ்ஸை கழட்டி போட்டுட்டு குளிச்சிட்டு வேறே டிரஸ் மாத்திண்டு வாங்க.”

“டிபன் தயாரா இருக்கு”

“ஏய் பத்மா, இவ்வளவு விஷயங்கள் தெரிஞ்சு வைச்சிருக்க”.

எப்போதும், கை குலுக்கி, “வாங்க மாப்பிள்ளைன்னு” சொல்லும் ராமபத்ரன் கூட, கை குலுக்காமல் 5 அடி தள்ளியே நின்று வரவேற்றார்.

“இத பாரு வசு நம் ஆத்திலே இருக்கறது சிங்கிள் ரூம் தான். அதை நேத்திக்கே உனக்காக சுத்தம் பண்ணிட்டேன்; நீ அந்த ரூமிலிருந்து வொர்க் ஃப்ரம் ஹோம் பண்ணு; மாப்பிள்ளை இப்போதைக்கு போர்டிகோவிலே இருக்கட்டும். அங்கிருந்து வேலை செய்யட்டும், நான் கிச்சன் பக்கமே இருக்கேன்; அப்பா ஹால் மூலையிலே கட்டிலில் இருக்கட்டும்; வேளா வேலைக்கு டிபன் காபி லஞ்ச், டின்னர் அனுப்பறேன்.”

“யாரும் 10 அடி தள்ளி பேசுவோம் சரியா.”

“இரண்டொரு நாள்ல, மேஸ்திரி முருகையன் வரேன்னு சொல்லியிருக்கான் மாடிலே சின்ன ரூம், டாய்லெட் கட்டிடலாம் மாப்பிள்ளைக்கு சௌகரியமாக இருக்கும்”.

“அப்பா இன்னிக்கு சாயந்திரம் போயி மேஸ்திரியை பாத்துட்டு வரபோறாரு பணமும் கையில இருக்கு”.

“வேலையை ஆரம்பிச்சுடலாம், நீ கவலைப்படாதே,”

“ஒரு வாரத்திலே, ரூம் கட்டிடலாம்; எனக்காக பொறுத்துக்கடா, மாப்பிள்ளைதான் பாவம்,

கொஞ்சம் அட்ஜஸ்ட் பண்ணிக்க சொல்லு”.

பத்மாவின் ஆறுதலான வார்த்தையினால் சமாதானம் ஆனாள் வசு.

“போன மச்சான் திரும்பி வந்தானிடி கதை மாதிரி, மேஸ்திரி முருகையன் சொந்த ஊருக்கு போயிருக்கானாம். வர்றதுக்கு இன்னும் நாலைந்து நாள் ஆகுமாம்னு சொல்றான்”. போய் வந்த விபரத்தை சொன்னார் ராமபத்ரன்.

“சரி மாமா, நான் அட்ஜஸ்ட் பண்ணிக்கிறேன்; வசு ஹெல்த் தான் முக்கியம்; வசு வயத்திலே இருக்கிற குழந்தை முக்கியம்; வாய்க்கு ருசியா பண்ணி போடுங்க அது போதும் நல்லா கவனிச்சுகிட்டா போதும் சுத்தமா இருந்தா போதும்”.

இல்ல மாப்பிள்ளை நிச்சயம் இரண்டு நாள் கழிச்சு மேஸ்திரி வேலையை ஆரம்பிச்சுடுவான்".

இரண்டு நாள் ஆச்சு, மூனு நாள் ஆச்சு, மேஸ்திரியிடமிருந்து எந்த தகவல் இல்லை, போனும் ஸ்விட்ச் ஆப் என்று வந்தது.

அவனை வீட்டிலிருந்து கொண்டே இல்லை என்று சொன்னதும், அவன் மனைவி, “ஊரு பூரா கொரானா வைரஸ் இருக்காம் மச்சான், நீ எந்த வேலைக்கு போக வேணாம். பேசாம வீட்டிலேயே குந்திக்கிட்டு கிட காசு பணம் முக்கியமல்ல. உடம்புதான் முக்கியம்” என்று பேசிய பேச்சு தன் காதில் விழுந்ததையும், ஏதும் கேட்காமல் வேறு வழியின்றி வீடு திரும்பிதும் விவரித்தார் ராமபத்ரன்.

நடந்த விசயத்தை சொன்னதும், பத்மா சரி, மாற்று ஏற்பாடு செய்யலாம் பேசாம தற்காலிகமா, நாலு பக்கமும் பந்தல் போட்டுட்டு 10 x 10 க்கு சைசுக்கு, சின்ன ரூம் மாதிரி செஞ்சு ஒரு லைட்டும் ஃபேனும் போட்டு கொடுத்தா மாப்பிள்ளைக்கு

சௌகரியமா இருக்கும், சரியா வசு.

"மறுநாள் கீத்து கடை கோவிந்தனை பார்த்து கொட்டகை போடணும்னு சொன்ன போது.

“நீங்க போங்க சாமி, ஓங்கிட்ட பேசறத விட, அம்மா கையில இன்னி வந்து பேசறேன். நீ கிளம்பு சாமி” என்று சொல்லிவிட்டு வீட்டுக்குள் போயிட்டான் கோவிந்தன்,

“ஏன்னா ஒரு காரியம் ஒழுங்கா செய்ய முடியாதா? கையோடு கூட்டிண்டு வான்னு சொன்னா இப்படி வெறுமே வந்து நிக்கறளே” கடிந்து கொண்டாள் பத்மா.

“என்ன செய்யட்டும் பத்மா, கோவிந்தனை கயிற்றை கட்டி இழுத்துகிட்டா வரமுடியும்?”

“நீ மகராசியாம் கேட்ட காசை கொடுப்பியாம். அதனால ஒன்னான்ட வந்து பேசறானாம்”.

ராமபத்ரனிடம் சொன்ன மாதிரி, கோவிந்தன் அன்று சாயந்திரம் வரவே இல்லை எப்ப பார்த்தாலும் போன் ஸ்விட்ச் ஆப் என்றே வந்தது,

அதற்குள் வசுவும் மாப்பிள்ளையும் வந்து, 10 நாள் ஆகிவிட்டது. அரசாங்கம் சொன்ன கெடு முடியற நாள் நெருங்கி கொண்டே வந்தது.

பத்மாவும் ராமபத்ரனும் அதிகம் பேசி கொள்ளவில்லை. ஹாலின் ஓரம் கட்டிலில் தான் 24 மணி நேரம் தஞ்சம், மாப்பிள்ளைக்கு பத்மா யூஸ் பண்ண கட்டில்; வசுவுக்கு புதுசா ஒரு கட்டில் ஏற்கனவே இருந்தது. பத்மா தரையில் படுத்து கொண்டாள், 11 மணிக்கு, வசுவிற்கு ஜூஸ் மாப்பிள்ளைக்கு டீ சாயந்தரம் 4 மணி ஸ்நாக்ஸ் காபி பத்மாவிற்கு வேலை நெட்டு கழட்டியது.

ஒரு வாய் வார்த்தை, சொந்த பந்தங்கள் பத்தி பேச்ச எதுவும் கிடையாது; வசுவும் மாப்பிள்ளையும் மொபைல் மூலம் தான் பேச்சு. அதுவும் ஓரிரு வார்த்தைகள் பேசி கொண்டார்கள்.

“என்ன கொடுமைடா இது,”

வீட்டிற்குள்ளேயே சிறை, மாதிரி; கலகலப்பா இருந்த குடும்பம் கலகலப்பு போயி, அவரவர்கள் ரூம்ல அடைப்பட்டு, கொள்வது இது தான் குவாரண்டைனா?

ஒரு மாசம் ஆச்சு. இரண்டு மாசம் ஆச்சு!

நாளுக்கு நாள் கோரோனோ பற்றிய பீதி தரும் செய்திகள் தான் வந்த வண்ணம் இருந்தது. தவிர புதுசா ஒன்றும் இல்லை.

வசு உடம்பு பலவீனமாக இருந்தது. ஆன்லைன் டெலி கானபெரென்ஸ் மூலம் பெங்களூரு டாக்டரிடம் கன்சல்ட் செய்தாள்.

ஆச்சு! எட்டாம் மாசம் சீமந்தம் பண்ண வேண்டுமே! டெல்லியில் இருக்கும் சம்மந்திக்கு தகவல் கொடுத்த போது, இந்த கோரோனோ டைம்ல நாங்க வருவது கஷ்டம். இ. பாஸ் கிடைப்பதும் சிரமம். லைவ்வா வீடியோ பாத்துகிறோம். சாரி சம்மந்தி.

மிக சிறப்பா சீமந்தம் பங்சன் நடத்தணும் நினைச்ச பத்மாவின் கனவு கலைந்து போனது

“அன்று காலை ஏழு மணி இருக்கும். மேஸ்திரி முருகையன் கூப்பிட்டான்”.

“மன்னிச்சிடுங்க சாமி, ஊர் போனேன்னா திரும்ப வர நாளாயிச்சு நாளைக்கு வேலை ஆரம்பிச்சுடலாமா சாமி, அம்மாவை கூப்பிடுங்க,”

இந்த நேரம் பார்த்து தன் ரூமிலிருந்து வந்த வசு 'அம்மா ஒரு குட் நியூஸ், குவாரண்டைன் போதுமாம், கொரானா வைரஸ் பீதி பத்தி உள்ள பயம் போயிடுச்சாம் நாளைக்கே ஆபிஸ் வரலாம்ன்னு சொல்லிட்டாங்க. அமெரிக்காவிலே இதுக்கு புது மாத்திரை கண்டு பிடிச்சிட்டாங்களாம். இந்தியாவுக்கு இரண்டொரு மாதத்திலே வந்துடுமாம்."

அப்பப்பா, இந்த இரண்டு மாசம் என்ன நரகவேதனை, அம்மா மடியிலே படுத்துண்டு, பேச முடியாமா, கட்டிக்க முடியாமா?

“இன்னி ராத்தரியே கிளம்பறோம். டிக்கெட் புக் பண்ணுங்க அப்பா?”

கடந்த இரண்டு மாதமா தன் வீட்டில் கடந்த கொரனா வைரஸ் பற்றிய ரகளையும், வெளியே போகும் போதும், போயிட்டு வந்த பிறகும், ஒவ்வொரு முறையும் சானிடைசரை யூஸ் பண்ண சொல்லியும் வாசல்யே கை, கால் அலம்பிட்டு வான்னு சொன்னதும், இந்த இரண்டு மாதம் பத்மாவுக்கு ஏற்பட்ட வேலை பளு காரணமாக மூட்டுவலி வந்ததும் நினைச்சு பார்த்து அழுவதா, இல்லை சிரிப்பதா என்று பெருமூச்சுவிட்டார் இராமபத்ரன்.

பின் குறிப்பு: கார்பரேட் ஊழியர்கள் இருந்து வேலை செய்யும் போது குவாரண்டைன் பண்ண வேண்டும் என்று எச்சரிக்கை விடுந்திருந்தது. ஆனால் சென்னையில் அதுவும் திருவல்லிக்கேணி, மைலாப்புர், மாம்பலம் ஏரியாவில் சாத்தியமா என்று நினைத்தபோது கற்பனையில் பிறந்த கதை.

# ஓசைப்படாமல் ஒரு கொலை

பரபரப்பாய் காணப்பட்டது, அந்த ஊரின் போலீஸ் ஸ்டேஷன்.

ஒரு வயதான அம்மா தன்22 வயது பெண்ணை காணவில்லை என்கிற புகார்..

அவரை அழைத்து வந்துருப்பது ராஜவேலு வர்த்தக சங்க உறுப்பினர். பிரபல பத்திரிக்கைகளின் உள்ளூர் நியூஸ் ஏஜென்ட். பத்திரிக்கை நிருபர். ஸ்டேஷனில், எல்லோருமே அவருக்கு நண்பர்கள்.

கதர் வேட்டி கதர் சட்டை. கிராமத்தில் நிலபுலன் செல்வாக்கு உள்ளவர்

காலை 8 மணிக்கு வீட்டை விட்டு கிளம்பி, உடுப்பி ஹோட்டலில், டிபன். 1 மணிக்கு அதே ஹோட்டலில் லஞ்ச். மாலை 4 மணிக்கு ஸ்வீட் காரம் காபி. இரவு டின்னர் மட்டும் வீட்டில்.

நல்லவேளை இன்ஸ்பெக்டர் மதி இருந்ததினால், ராஜவேலு ககு வந்த வேலை சுலபமாச்சு.

“இவங்க பேரு பார்வதி என் வீட்டு மாடியில் தான். அஞ்சாறு வருஷமா குடி இருக்காங்க. ஒரு பையன் பாபுன்னு பேரு, பொண்ணு பூரணி, தனியார் பள்ளியில் வேலை”.

“நேத்து ராத்திரியிலிருந்து, பூரணியை காணவில்லை. இன்னிக்கு காலை, பார்வதி வந்து சொன்ன பிறகு தான், தகவல் எனக்கு தெரியும். எப்படியாவது கண்டுபிடிச்சுகொடுங்க. நானும் என் பத்திரிகை ஆளுங்க கிட்ட, சொல்லி இருக்கேன்.”

“சரி ராஜவேலு சார்.! ஒரு கம்பிளைன்ட் கொடுத்துட்டு போங்க. 24 மணி நேரத்திலே விசாரிக்கறோம்”.

புகார் எழுதிய பேப்பர் காண்பித்து“பார்வதி இதிலே கை எழுத்து போடு”

போட்டவுடன் அழுது கொண்டேகிளம்பி போனார் பார்வதி.ராஜவேலு காரில்.

இரண்டு நாள் கழித்து. “சார் யாரோ ஒரு கொலை செஞ்சிட்டு ஊருக்கு எல்லையில் இருக்கிற அய்யனார் கோயில், பின் புறம் உள்ள மாந்தோப்பில் எரிச்சு இருக்காங்க!”. “மொத்த பாடியும் சுத்தமா சிதஞ்சு கிடக்கு அடையாளம் தெரில” .“அய்யனார் சாமி கும்பிட போனவங்க, ஒதுங்க போனபோது, பாத்துட்டு வந்து சொன்னாங்க”

கான்ஸ்டபிள் தகவல் சொல்லவும்,

விசாரணை தொடங்கியது எஸ்.பிதலைமையில்.

தடவியல் சோதனை மற்றும் விசாரணையில இறந்து போனது பூரணி என முடிவானது.

பார்வதியை, விசாரித்த போது, அன்னிக்கு, அவங்க சொந்த கிராமத்துக்குபோய், மாதம் ஒருவாட்டி அரிசி பருப்பு காய் கறி அண்ணன் வீட்டில்ருந்து வாங்கிட்டு வர போனதாகவும், காலையில் போயிட்டு எப்போதும் அன்று மாலையே திரும்பும்... தான் அன்னிக்கு அண்ணிக்கு உடம்பு சரியில்லைன்னு தங்கும் படி ஆனது என்றும் ,

மறுநாள் காலைகிளம்பி வரேன்னு சொல்லிட்டு கீழ் வீடு ஓனர்ம்மாவை துணைக்கு இன்னிக்கு மட்டும் கூப்பிட்டுக்கோ என்று பூரணியிடம் சொன்னதாகவும்; வந்து பார்ககும் போது பூரணி வீட்டில் இல்லை.என்றுஅண்ணன் கிட்ட சொன்னபோது, ஸ்கூல் போயிருக்கலாம் என்று சொன்னதும், மதியம் சாப்பாடு எடுத்துகிட்டு ஸ்கூல் போனபோது, அங்கும் இல்லை என்கிற விசயம் தெரிஞ்சுது.உடனே ராஜவேல் அண்ணன் மூலமா போலீஸ் ல புகார் கொடுக்க வந்ததாகவும் விசாரணையில் சொன்னார்.

இரண்டு நாள் கழிச்சு இப்படி ஒரு விபரீதம் நடந்துடுச்சு." அழுது அழுது பார்வதி கண் வீங்கி போனது.

“ஒங்களுக்கு யார் மேலயாவது சந்தேகம் குறிப்பா ராஜவேல் சார் பத்தி?”

“சார் !அவர் உடன் பிறக்காத அண்ணன் மாதிரி சார்.என் வீட் டுக்காரர் போன பிறகு என் பையனை படிக்க வைக்கிறது. பூரணிக்கு வேலை வாங்கி கொடுத்து எல்லாமே அவர் தான்.அவங்க சம்சாரம் அவரை விட ரொம்ப நல்லவர் சார்.”

“ஆமாம் !அன்னிக்கு அந்த பொண்ணுடோ தம்பி, அதான் ஓங்க பையன் துணைக்கு வீட்டில் இல்லையா?”.

“இல்லை சார்! அவன் ஸ்கூல் சுற்றுலாவிற்கு போய் இருக்கான்.நாளை காலையில தான் வரான் சார்”.

“சரி நீங்க வீட்டுக்கு போங்க தேவைபட்டா கூப்பிடு வோம்”

“வேறே யாரு அந்த வீட்டிலே இருக்காங்க?”சங்கர் எஸ்பி. கேட்க,

“ராஜவேலு சம்சாரம் ஓடம்பு முடியாதவங்க, மூட்டு வலி வேறு. அவங்க அம்மாவுக்கு உடம்பு சரியில்லைன்னு தன் வீட்டு காரருக்கு தகவல் கொடுத்துட்டு சாவியை பூரணிகிட்ட கொடுத்துட்டு அர்ஜெண்டா அன்னிக்கு மதியம் கிளம்பி போயிட்டாங்கா சார்”

“கவலைபடாதீங்க ஆன்ட்டி. அம்மா எப்படியும் வந்துடுவாங்க அப்படி வராவிட்டால் அங்கிள் இருக்காரு அவர் அப்பா மாதிரி. அங்கிள் வந்ததும் சாவி கொடுத்துடறேன்.” என்று பூரணி சொன்னதாக அவர் விசாரணை மூலம் தெரிய வந்தது.

“பூரணிக்கு வேறு யாரும் எதிரி?.”

“ஸ்கூலில் விசாரிச்சப்ப, சாதுவான பொண்ணு.கூட வேலை பாக்கற வாத்தியார் களை கூட வீட்டுக்கு கூப்பிட தில்லையாம்..”

“ஏன் தன்னை நேசிக்கிற அரவிந்தை கூட, வர சொன்னது இல்லையாம்.”

"சிசிடிவி புடேஜ் பார்த்தீங்களா.?

“இல்லை சார்.திடீரென கரண்ட் கட், மழை வேறு; பேட்டரி பவர் கேமரா இல்லை சார்.”

“பாடியை அங்கே கொண்டு போய் ஏன் எரிக்கணும்?”

“ஊர் எல்லை. யாருக்கும் தெரியாமல் இருக்கலாம்; மழை வேறு. கரண்ட் இல்லை”

“எரிச்ச இடதில ஏதும் தடயம்.கிடைச்சுதா?”

“இல்லைசார்” 100 அடி சுற்றளவு பாததுட்டோம்."

“அவசரத்தில், கொலைகாரன் தன்னை மறந்து, ஏதும் விட்டு விட்டு போயிருக்கலாம்.”

“நல்லா பாத்தீங்களா?”

எஸ்பி. சங்கர் கேக்கவும்,

"பார்த்தோம் சார். ஒன்னும் கிடைக்கல:

கொலைகாரன் ரொம்ப சாமர்த்தியமாக செஞ்சு இருக்கான் "

“கூடவே வேலை பார்க்கும் அந்த வாத்தியார் பேரு என்ன சொன்னீங்க?”

“அரவிந்தன் சார்”

“அவனை விசாரிசங்கிளா?”

“அன்னிக்கு அவன் கிராமத்திலிருந்து வேலைக்கு வரலே சார்.”

“ஆளு எப்படி?”

"கொஞ்சம் முற்போக்கு சிந்தனை வாதி; பூரணி மாதிரி, சமுகத்து மீது அவனுக்கும், கோபம் தன் காதலை பூரணியிடம் சொன்னது முதலில் அவன் தான்.

“வேறு யாராவது?”

“தோழி வாணி கூடவே வேலை பார்க்கும் பெண்; அவங்களும் பூரணியும் நகமும் சதையும் மாதிரி”

“ஆனா, அரவிந்தன் மேல இவங்களுக்கும் காதல் இருந்ததாக பேச்சு. அரவிந்தன் மாதிரி ஒரு கணவன் வேணும் என்று நினைப்பவள்”.

“என்ன தான், நெருங்கிய தோழியாக இருந்தாலும் அரவிந்தனை அடைய பூரணி ஒரு இடைஞ்சல் என்று கொலை பண்ணியிருக்கலாம்.இல்லையா?”

“இந்த காலத்தில் ஆண்களை விட பெண்கள்

வில்லிதனம் சீரியல் பார்த்து அதிகம் ஆயிடுச்சு இல்லையா?” கூலி படையை ஏவி இருக்கலாம் ?"

சங்கரின் கேள்வி அங்குள்ளவர் களை சிந்திக்க வைத்தது .

“வேறே யாராவது கிராமத்திலே விரோதிகள்?”

“சான்ஸே இல்லை சார்.!”

“சாதுவான மாமா குடும்பம், அவர் மூலம் பிரச்சினை இல்லை.”

நாம் சந்தேக படுகிற குற்றவாளிகள் லிஸ்டில் அரவிந்தன், வாணி, ஸ்கூல் பீ.டி மாஸ்டர் சுரேஷ், ஹவுஸ் ஓனர் ராஜவேலு, ராஜவேலு சம்சாரம். பார்வதி பாபு பூரணி தம்பி; “இவங்களில் யாரும் இல்லைன்னு சொன்னா கொலைகாரன் யாரு? அவன் எங்கே இருக்கான்?”

“ராஜவேலு, முன்னாள் முனிசிபல் கவுன்சிலர் இப்போதும், வார்டு மக்களுக்கு, நன்மை செய்யும் நேர்மையான, மனிதர்.பரம்பரை தேசியவாதி, பணக்காரரர் கூட. குழந்தை பாக்கியம் கிடையாது.எனவே குழந்தைகளிடம் பிரியம் அதிகம். இன்பாக்ட் பாபு, பார்வதி சொன்ன மாதிரி படிப்பு செலவை அவர்தான் ஏத்துக்கிட்டு இருக்கார்.”

“தன் மனைவிக்கு உறவினர் என்பதாலயே, வாடகை வாங்காமல், மாடி போர்ஷன் கொடுத்து உள்ளார். ஊருக்கு உப்காரி”

“அன்னிக்கு சாவி வாங்கிட்டு படுததவர், காலயில் பார்வதி எழுப்பும் வரை தூங்கி இருக்கிறார்”.

“பார்வதி சொல்லித்தான் பூரணி வீட்டில் இல்லை என்பது அவருக்கு தெரிய வந்துள்ளது”. மதி சொல்லி முடித்தார்.

“வாணி நெருங்கிய தோழி அரவிந்தன், மேல் ஒரு தலை காதல்.தன் காதலுக்கு பூரணி இடைஞ்சல் என்று நினைத்தாலும் கோழை கொலை செய்யும் அளவு தைரியம் கிடையாது.”

“அரவிந்தன் வேஷ்டி, கதர் சட்டை. தோளில் ஒரு ஜோல்னா பை. இலக்கியவாதி.பூரணி சம்மதம் கிடைக்கும் வரை காத்து இருப்பவன். இலக்கிய சண்டைகள் வெடிக்கும் அளவுக்கு வரும்.கொலை பண்ணும் அளவுக்கு, மோசமானவன் இல்லை..சாதுவானவன்”.

“பாபு சின்ன பையன்.விபரம் பத்தாது.அவனும் ஊரில் இல்லை”.

“ராஜவேலு சம்சாரம் அவங்க பூரணியை, பெண் மாதிரி பாத்து கொள்ளும் இயல்பு”.

“பீ.டி. மாஸ்டர் பூரணியிடம் தன் காதலை சொல்லி அடியும், அவமானத்தையும், வெகுமதியா பெற்றவன். பழி வாங்க சந்தர்ப்பம் தேடி கொண்டு இருப்பவன்.”

ஆனால் கொலை நடந்த அன்னிக்கு, அவன் சென்னையில் யுனிவர்சிடடியில் வேலை.ஆதாரம் வைத்து உள்ளான்". மதி சொல்லி முடித்தார்.

“ஏன்? அவன் கூலி படையை ஏவி இருக்கலாம். அவங்க மூலம் பூரணிக்கு முடிவு கட்டி இருக்கலாம்”.

“இன்னோரு தடவை அவனை ஸ்டேஷன் வர சொல்லி விசாரிங்க!”

“கொலைகாரன், நிச்சயம் பதட்டத்தில், எதையாவது, அவனை அறியாமல், விட்டு விட்டு போயிருப்பான் நல்லா தேடினங்களா?”மீண்டும் சங்கர் கேட்டார்.

“எஸ் சார். ஒரு தடயமும் கிடைக்கல சார்.ரொம்ப

சாமர்த் தியமா எதையும் விட்டுட்டு போகலை சார்.”

“பிணத்தை எரிச்ச இடத்துக்கு பக்கம், மாமரத்தின் காய்ந்த சிருககள், நிறைய சின்ன சின்ன குன்றுகள் மாதிரி சேர்ந்து இருந்துச்சு; அதை எல்லாம் கலைச்சு பார்த்தோம்.”

“30 அடி தள்ளி இருக்கிற குட்டை; குட்டையை தாண்டி ஒரு வாய்க்கால்; அப்புறம் ஆறு; ஆற்றுக்கு அந்த பக்கம் சின்ன ஹேம்லட்”.

“போகிறவழியில் அய்யனார் சிலை, குதிரை எல்லாம் இடமும் தேடிட்டோம். ஒரு தடயமும் கிடைக்கல.”

ஒரு வாரம் ஆச்சு; அமைக்க பட்டு இருந்த டீம் கையை பிசைந்து கொண்டு இருந்தது. குற்றவாளி சிக்கலையே என்கிற கவலை சங்கருக்கு.

……………………..

“ரொம்ப நாள், நமக்கு குழந்தை பாக்கியம் இல்லை, அதற்கு பரிகாரமாக, ஒங்க குலதெய்வம் படையல் பூஜை பண்ணுங்கன்னு ஜோசியர் சொல்லியிருக்கார்.”

“ஒவ்வொரு வாரமும், குலதெய்வம் பிரார்த்தனை, நேர்த்திகடன், பண்ண முடியாமா தட்டி போகுது”.

“அதுவும் நம் குலதெய்வம் கோயில்; பக்கத்திலே, உள்ள ஊர்ல ஒங்களுக்கு, இப்ப போஸ்டிங். வந்துருக்கு.”

“இந்த வாரம் மிஸ் பண்ணதீங்க கெஞ்சினாள் திவ்யா.”

“சார் எனக்கு ஒரு லெட்டர் வந்துருக்கு சார்!” உள்ளே வந்த ராஜவேலு பரபரப்பாய் காணப்பட்டார்.

வந்துருந்த கடிதத்தை காண்பித்து, “கை எழுத்து தெரிய கூடாதுன்னு டைப் அடிச்சிருக்கு. அட்ரஸ் கூட அப்படிதான்.”

“அதில் நாளை உனது நாள் ன்னு எழுதி இருக்கு சார். எனக்கு பயமா இருக்கு”.

“யார் கிட்ட இருந்து கடிதம்”

“அரவிந்தன் தான் அனுப்பி உள்ளான். லோக்கல் போஸ்ட்ஆபீஸ் சீல் இருக்கு சார்.”

“காரணம். என்னவா இருக்கும்?”

“பார்வதி அம்மா, அரவிந்தன் பூரணி காதல் பத்தி சொன்னாங்க.. நான் வேண்டாம்னு சொன்னேன். என் மேல் கோபமா இருக்கலாம்.”

“நான் இரண்டு பேரை வீட்டுக்குசெக்யூரிட்டி அனுப்பறேன் நீங்க கவலை படமா போங்க”.

அன்று ஞாயிறு. திவ்யாவும், சங்கரும், அந்த அய்யனார் கோயில் போய் பூஜைக்கு, ஆஜர் ஆனார்கள்.

பூசாரி வர லேட்டனதால் திடீர் என்று ஒரு கால் வரவும் ,

"திவ்யா நான் ஒரு கால் அட்டென்ட் பன்னிட்டு வரேன். மோஸ்ட் இம்பார்ட்டன்ட் கால்.

பூசாரி வந்ததும் எனக்கு கால் பண்ணு. ஓகே" என்று சங்கர் கொஞ்ச தூரம் தள்ளி நடந்து போனார்.

“என்னதான் டீம் இன்ஸ்பெக்ட பண்ணி இருந்தாலும் தன் கண்ணுக்கு ஏதாவது தடயம் கிடைக்குதா? என்று அய்யனார் கோயில் பின் புறம் அரை கிலோ மீட்டர் தள்ளி உள்ள, பூரணியை எரித்த இடம் வரை நோட்டமிட்டார் சங்கர். தடயம் எதுவும்

கிடைக்க வில்லை.”

“பச்! கொலைகாரன் ரொம்ப கெட்டிக்காரன் தான்”.

“ஏங்க பூசாரி வந்துட்டார் வாங்க”.

பூஜை முடிந்து, சாமி கும்பிட்டு, சுற்றி வந்த போது, அய்யனார் காலடியில் சிதைந்த காலின், இடுக்கில் யாரும் சட்டென்று, கவனிக்க முடியாத இடத்தில், கொஞ்சம் நசுங்கிய பீர் கேன் கிடைத்ததும் அதை கர்சீப் மூலம் எடுத்து கொண்டார் எஸ்.பி சங்கர்.

ஆபீஸ் வந்ததும் ஆப் மூலம் பீர் கேன் மீது இருந்த பார்கோடு ஸ்கேன் செய்த போது எந்த கடையில் வாங்க பட்டது என்கிற தகவல் வரவும்;

"அடுத்த பத்தாவது நிமிடம் அந்த ஒயின் ஷாப் சிசிடிவி புட்டேஜ் செக் பண்ணியதில் முகம் மலர்ச்சி ஆனார் சங்கர்.

“ஐ காட் இட்.”

“தாங்க்ஸ் திவ்யா! ஒன்னால் தான், கொலையாளியை கண்டு பிடிக்க முடிந்தது”. போனை கட் செய்தார்.

“குற்றவாளியை நான் கண்டுபிடிச்சுட்டேன்.”சந்தோசத்தில் மேஜை மீது ஒரு குத்து குத்தினார் சங்கர்.

“எப்படி சார்?” மதி கேட்டார்.

“இன்னிக்கு இருக்கிற அட்வான்ஸ் டெக்னாலஜி எதுவும் சாத்தியம். என் ஃபோன்ல இருக்கிற, ரெட் லேசர் ஆப் மூலம் பீர் கேன்ல இருக்கிற பார்கோடு, ஸ்கேன் பண்ணி பார்த்ததில், இந்த பீர் எங்கு தயார் செய்யப்பட்டது, மொத்த விற்பனையாளர் யார்? ரீடெயில் ஷாப்க்கு என்னிக்கு சப்ளை செய்யப்பட்டது

என்று எல்லாம் விபரமும் தெரிஞ்சுது..”

“உடனே செயலில் இறங்கினேன், அங்கு இருந்த சிசிடிவி புட் ஏஜ் இல் கொலையாளி தெரிஞ்சான்”

“அவன் ஒரு பீர் கேன் வாங்கி சாப்பிட்டு விட்டு இன்னொரு பீர் கேன் அய்யனார் காலடியில் போட்டது.எல்லாமே கோ இன்சைடு ஆயிருக்கு”.

“வாவ் சூப்பர் சார் ?”

சங்கர் உத்ரவிட்டார் “மதி, கோ அண்ட் அரெஸ்ட் ராஜவேல் இமெடயட்லி”

..

ராஜவேல் கடையில் இருக்கவும் இன்ஸ்பெக்டர் மதிஅவர் டீம் சேர்ந்து ராஜவேலை, ஜீப்பில் ஏற்றவும் எல்லோருக்கும் அதிர்ச்சி.

விஷயம் தெரிஞ்சு “ஏண்டா நீ எல்லாம் பெரிய மனுஷன்? அப்பா, அப்பானு, நம்பிகிட்டு இருந்த பொண்ணை, கொலை பண்ணிட்டே பாவி” பார்வதி கதறி கொண்டே அவர் கழுதை நெறிக்க வந்தார்.

இனி நாம் தப்பிக்க முடியாதுன்னு நினைத்த ராஜவேல் நடந்த தை சொல்ல வீடியோ மூலம் ரெகார்ட் செய்ய பட்டது.

“நான் இதுவரை வீட்டுக்கு தெரியாமல் சரக்கு அடித்து வருவது பழக்கம் அன்று விட்டு விட்டு மழை”.

அன்னிக்கு என் மனைவி திடீரென ஊருக்கு கிளம்பிய செய்தியை சொன்னதும், பூரணி அம்மா கிராமத்துக்கு போனதும் எனக்கு சாதகமா போனது".

“சரக்கு அடிக்கலாம் என்ற எண்ணம் ஏற்பட்டது”.

“இரவு 8 மணிககே. கடைய பூட்டி விட்டு, காரில் ½ கிலோமீட்டர் தள்ளி இருக்கும் வழக்கமான ஒயின் ஷாப் போனேன். குவார்ட்டர் பிராந்தி 2 கேன் பீர் வாங்கி காரில் வைத்து கொண்டேன்.ஒரு பீர் சாப்பிட்டு டின்னை ரோடில் எறிந்த பிறகு, பிரந்தியையும் சாப்பிட்டேன் பாட்டிலை ரோட்டில் எறிந்தேன்”.

“வீட்டுக்கு சாவி வாங்க மாடிக்கு போனேன். அப்போது தான் குளித்துவிட்டு அழகு தேவதையாக பூரணி வந்ததும், என் மனம் சஞ்சல பட்டது.”

“வாணி வரலைன்னு ஃபோன் செஞ்சா அங்கிள். நான் நாளை பரிட்சைக்கு படிக்கணும்; ஒங்களுக்கு தோசை சுட்டு தரேன்.சாப்பிட்டு விட்டு போய் ரெஸ்ட் எடுங்க” "என்றாள்.

“வெளில நல்ல மழை. ஏற்கனவே என் பொண்டாட்டி மூலம் தாம்பத்ய சுகம் கிடையாது”. “எப்படியும் பூரணிய அடையனும்ன்னு வெறி.. மது போதை வேறு”.

“பூரணி கிச்சன்ல தோசை சுட்டு கிட்டு. இருந்தா. அவளை போய் பின்னாடி கட்டிகிட்டேன்.”

"அவ திமிர திமிர அவ கத்த ஆரம்பிச்சா நான் உடனே டிவி சவுண்ட் அதிக படுத்தினேன்.

“அங்கிள் என்ன இது?.அப்பா மாதிரி இருக்கற நீங்க இது மாதிரியா” என்று சொல்லி, என்னை தள்ளி விட்டாள்.

“அவ என்ன சொல்லியும் என் காதில எதுவும் கேக்கலை. அவளை பெட்ரூமில் உள்ள பெட்டில் கிடத்தி வாயை பொததினேன்.”

“மூச்சு திணற திணற திடீரென நின்னு போச்சு. திடீர்னு கரன்டும் கட் ஆச்சு”.

"அய்யோ ஒரு கொலையை பண்ணிட்டனே என்று அழ ஆரம்பித்தேன். வெளியில் தெரிஞ்சா அவமானம். பேர் கேட்டு போகும்ன்னு, .

கிடு கிடுவென காரியத்தில் இறங்கினேன்".

“நாங்கள் இருக்கும் இடம் அங்கொன்றும், இங்கொன்றும், வீடுகள்வளர்ந்து வரும். புறநகர் புதிய பகுதி.”

“மழை, கரண்ட் இல்லாதது எனக்கு சாதகமானது. என் ஆட்களிருவரிடம் 10 லிட்டர்பெட்ரோல், சுகர் ஒரு முட்டை எடுத்து வர சொன்னேன்.”

பூரணியோடு நான் போவதற்கும், அவர்கள் அங்கு வருவதற்கும் சரியா இருந்தது.

“மழை நின்றிருந்தது; பூரணி உடம்பை சுமந்த ஆட்கள், அவளை கிடத்தினார்கள். பெட்ரோல் சக்கரை மூலம் சீக்கிரம் எரிய விட்டேன்.”

“தப்பு செஞ்சுட்டேன் என்று உணர்ந்ததும், இன்னோரு பீர் குடித்து விட்டு அய்யனார் கோயில், அவர் கால் உள்ள பொந்தில் பீர் கேன் போட்டது கூட தெரியாமல் மயக்கம். காரில் ஏறி வீட்டுக்கு வந்தேன்.”

“அவர்கள் இருவருக்கும் பணத்தை கொடுத்து வெளியூர் போக சொல்லிவிட்டேன்.”

“தூங்கி போனவன், காலையில் பார்வதி வந்து, எழுப்பும்போது மணி 8.. பூரணி எங்கே? என்று கேட்டதற்கு பூரணி சீக்கிரமா ஸ்கூல் 7 மணிக்கே முக்கிய மான வேலை போய் விட்டாள் என்று பொய் சொன்னேன்.”

“வீட்டிலும் சரி, பிணத்தை கொளுத்திய இடத்திலும் மறுநாள் வந்த, எந்த தடயமும் இல்லாமால் ஜாக்கிரதையாக பார்த்துக்கொண்டேன்.”

“என் சுய நினைவு இல்லாததால் பீர் கேன் அய்யனர்கோயில் விட்டது சுத்தமா ஞாபகம் வரவில்லை.”

“ஓங்க ஆட்களும் தடயம் ஒன்னும் கிடைகலன்னு சொன்னதும் நிம்மதி ஆனேன்.”

“ஆனா அய்யனார் முன்பு பீர் குடித்து கேன் அங்கேயே அவர் சிதிலமடைந்த கால்களில், உள்ள பொந்தில் போட்டதை நீங்கள் கவனித்து தடயத்தை எடுதுட்டீ ங்க. கடவுள் முன்பு செஞ்ச பாவம் யாரையும் சும்மா விடாது.”

“அரவிந்தன் நல்ல பையன் தான்.ஆனாலும் அவன் பூரணியயை கட்டிக்க எனக்கு இஷ்டமில்லை.”

சொந்தத்தில் ஒரு பையனை பார்த்து வைத்து இருந்தேன்.

போலீஸ் கவனத்தை, திசை திருப்பவே, அப்படி ஒரு கடிதம் நான் டைப் பண்ணி “நாளை உனது நாள்” என்று எழுதி லோக்கல் போஸ்ட் ஆபிஸில் போஸ்ட் செய்தேன்."

“என் மனைவியையும் அரவிந்தன் தான் கொலை செய்து விட்டு எனக்கு மிரட்டல் கொடுத்து உள்ளான் என்று நம்ப வைத்தேன்”

“தோட்டம் காக்க போட்ட வேலி பயிரை மேய்வதோ? காமம் கண்ணை மறைச் சுடுச்சு. அய்யனார் என்னை காட்டி கொடுத்து விட்டார்”.

ராஜவேலுக்கு, உதவி செய்த அவர் ஆட்கள். பெட்ரோல் கொடுத்து உதவிய நபர், சக்கரை கொடுத்த மளிகை கடைகாரரர் எல்லோரிடமும் வாக்கு மூலம் வாங்கப் பட்டது.

விசாரித்த போது, ராஜவேல்சொன்ன வாக்கு

மூலத்தை அவர்கள்உறுதி படுத்தினார்கள்.

எல்லோரையும் கைது செய்து ரிமாண்ட் டில் வைக்க பட்டனர்.

**Kaniyam Foundation Account Number : 606 1010 100 502 79 Union Bank Of India West Tambaram, Chennai IFSC – UBIN0560618 Account Type : Current Account**

# எல்லாம் அவன் செயல்

என் நீண்ட நாள் கனவு, பிரபலமான, ஜனரஞ்சக பத்திரிக்கைகளில், வெளியான என் சிறுகதைகளை, ஒரு தொகுப்பாக வெளியிடவேண்டும், என்று ஆசை பட்டிருந்தேன்.

ஆனால், அந்த ஆசை தள்ளி போய் கொணடேருந்தது.

நான் ஒன்றும் பெரிய பேர், வாங்கிய எழுத்தாளன் கிடையாது. என் வயது 72. ஆனாலும். வளர்ந்து வரும் எழுத்தாளன் தான்.

அலுவலக ஓய்வுக்கு பிறகு, 5 வருடம் கழித்து, 65 வயதுக்கு பிறகு தான், சமூகத்துக்கு ஏதாவது எழுதவேண்டும், சொல்லவேண்டும் என்று நினைத்து, பிரபலமான அந்த வார பத்திரிக்கையில், வருடம் தோறும் அறிவித்த சிறுகதைப் போட்டிக்கு, என் “தரிசு நிலம்” கதையை அனுப்பியருந்தேன்.

முதல் முயற்சியிலேயே அது சிறந்த கதையாக, தேர்வு ஆகி, பரிசும் கிடைத்தது.

பத்திரிக்கையில் பிரசுரம் ஆகி வந்தவுடன், 100 தடவைக்கு மேல், படித்து இருப்பேன்.

அடுத்தவாரமே, அந்த வார பத்திரிக்கை 100க்கு மேற்பட்ட வாசகர் கடிதங்களையும், சிராக்ஸ் எடுத்து, அனுப்பி இருத்தார்கள்.

அந்த உத்வேகம் அடுத்த வருடமும், சிறுகதை போட்டியில், என் கதை தேர்வு செய்யப்பட, இந்த 5 வருடங்களில் 15 கதைகள் பல்வேறு பத்ரிக்கைகளில் பிரசுரம் ஆனது.

இதை நாம், ஏன் ஒரு தொகுப்பாக போடக்கூடாது? என்ற எண்ணம்தான் இந்த முயற்சிக்கு காரணமே தவிர, தற்பெருமை அடித்து கொள்ள அல்ல.

நாம், நாள் தோறும் கடந்து போகும், நிகழ்வுகளில் எத்தனையோ கதைகள் இருக்கின்றன.

அந்த வகையில், என் வாழ்வில், நான் உணர்ந்த, அனுபவித்த, அனுபவங்களின் தொகுப்பையே, இங்கு சிறுகதை நூலாக ஏன் கொடுக்க கூடாது என்று சிந்தனையில் உதித்த விஷயமே இது.

ஒருநாள் என் மகள் ரம்யாவை, பார்த்து பேசிக்கொண்டிருந்த போது;

"ஏம்பா! நம் நப்பின்னை முதல் பிறந்தநாளில், உன் கதை தொகுப்பை வெளியிடலாமே? என்று சொன்னதும்;

" ஆமாம்ல "

“அதுவும் நல்ல யோசனை தான். ஏற்பாடு பண்ணிடலாம்”.

“இன்னும் இரண்டு மாசம் டைம் இருக்கு. அதுக்குள்ள முடிச்சுடலாம்”.

“குலதெய்வம் கோயில் ஒப்பிலி யப்பன் சன்னதியில், ஹோமம், காது குத்தி, பெருமாளுக்கு நைவேத்தியம், சக்கரைப் பொங்கல் பண்ணிட்டு. அங்கேயே, கல்யாண மண்டபத்தில், நூல் வெளியீட்டு விழாவை, சிறப்பா செஞ்சுடலாம்”.

தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம்

நண்பர்கள், இருவரை சிறப்பு விருந்தினராகவும்,

பல வைணவ நூல்கள் எழுதி புகழ் பெற்ற ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ யான உன் பெரியப்பாவின் தலைமையில் தொடங்கி முதல் பிரதியை, நப்பின்னை கையினால், அவருக்கு கொடுக்கும்படி செஞ்சுடலாம்".

“ஒப்பிலிப்ப்ன் சன்னதியில் அவர் பாதங்களில் வைத்து சமர்பித்து, அவர் ஆசீர் வாததுடன், வெளியிடுவது நிச்சயம் பெருமை தான்”. எனக்கும் திருப்தி தான்“.”அன்று இரவே சென்னை வந்துடலாம் என்ன சரியா"?

ஜனவரி 18, 2022 தை பூசம் ஜென்ம நட்சத்திரம் அன்னிக்கு, காலை 1030 மணியி லிருந்து 1130 வரை நல்ல நேரம் என்று, குடும்ப வைதீக வாத்தியார் நல்ல நேரம் குறித்து சொல்லயிருந்தார்“. பத்திரிக்கை அடித்து எல்லோருக்கும் தெரியப் படுத்துவோம். கிராண்டா கொண்டாடுவோம்.”

அம்மாவிடம் இது பற்றி கலந்து பேசிவிட்டு, நாளை வருகிறேன் என்று அசோக் நகரில் இருக்கும், அவளிடம் சொல்லி விட்டு ராமாபுரம் என் வீட்டுக்கு வந்தேன்.

விஷயத்தை சொன்ன உடனே என் சக தர்ம பத்தினியிடமிருந்து, ஒரு ஆப்ஜெக்ஷன்.

இதுக்கு மட்டுமல்ல எப்போதும் ஒரு ஆப்ஜெக்ஷன் அவள் வாயிலிருந்து வரும். அது அவளுடைய சுபாவம். எதிலும் முன் ஜாக்ரதை என்கிற எண்ணம்..

“ஏங்க ஊரே ஒமிகிரான் பிரச்சனையில் இருக்கு”. இங்கிருந்து அவ்வளவு தூரம் டராவ்ல் பண்ணி, நாளைக்கு, குழந்தைக்கு ஏதாச்சும் உடம்பு சுகமில்லாமல் போச்சுன்னா மனசு சங்கடப்படும்“.”அவசர பட வேண்டாம் யோசிச்சு

செய்வோம். 2 மாசம் டை ம் இருக்கு".

“நீ சொல்றது வாஸ்தவம் தான். கொஞ்சம் வெய்ட் பண்ணுவோம்.”

புத்தக வெளியீடு என்பது, ஒரு தலை பிரசவம் மாதிரின்னு, கேள்வி பட்டு இருக்கேன். அந்த அனுபவத்தை நான் உணர்ந்த போது தான், அந்த கூற்று எவ்வளவு உண்மையான ஒன்று, என்று எனக்கு தெரிய வந்தது.

பக்கத்துல இருக்கிற டி டி பி சென்டர் ல, விசாரிக்கும் போது,

“சார் அது லொள்ளு புடிச்ச வேலை சார்.”

“இப்பவெல்லாம், தமிழ்டி டிபி அடிக்கறதுக்கு, ஆளே கிடையாது சார்”.

“நீங்க எழுதி கொடுக்கிற கதையை, முழுமையாக படித்து, டைப் அடிக்க இங்கு யாருக்கும், தமிழ்தெரியல சார்”.

“ஒங்க எழுத்து படிச்சு, அதை சரியா, உள்வாங்கி கொள்ளாமல், தப்பும் தவறுமா அடி ச்சு கொடுப்பாங்க”.

“ஒங்களுக்கு டென்ஷன் ஏற்படுத்துவங்கா”

“இங்கே, தமிழ் நாட்டில், தமிழ் டைப் அடிக்கிறது, அவ்வளவு சிரமமாக நினைக்கிறாங்க!”

“அப்படி, நான் ஏதாச்சும் கோபித்து கொண்டால் வேலையை விட்டு நின்னுடாறங்க சார்”.

“ஒரு பக்கம் அல்லது இரண்டு பக்கம் மட்டும், டைப் அடிச்சுட்டு, காசை வாங்கி, கல்லாவில் போட்டுகிறது தான் இப்போ சுலபமான வேலை”

“அதை தான் எதிர்பார்க்கிறாங்க”

“இப்போ உள்ள கான்செப்ட் வேலை ஸ்டரைன் பண்ணக்கூடாது, ஆனா சம்பளம் மட்டும் வரணும்”

“இன்னி கால கட்டத்துல, வேலை வாங்கிறது, ரொம்ப கஷ்டமா இருக்கு சார்”

புலம்பி தீர்த்துவிட்டார் மனுஷன்..

“நீங்க வேறே இடம் பாதுக்கோங்க சார்.”

முகத்தில் அறையாமல், அறைந்த மாதிரி இருந்தது அந்த டி டி பி சென்ட ர் உரிமையாளர் பேச்சு.

“சரி !வேறு இடம் ஒங்களுக்கு தெரிஞ்சா, சொல்லுங்க சார்?”என்று நான் கேட்டதும்,

ஆங்.. ..இப்ப ஞாபகம் வருது சார்.

“லக்ஷ்மன் ஸ்ருதி சிக்னல் பக்கம் , ரம்பா ஆப்செட் இருக்கு. அங்கே போய் கேளுங்க சார்! அவங்க செஞ்சு தருவாங்கன்னு கேள்விப்பட்டுருக்கேன் சார்.”

ஏதோ இந்த அளவுக்கு, இடத்தை, காட்டி விட்டாரே, என்று அவருக்கு, நன்றி சொல்லிவிட்டு வந்தேன்.

அவர் சொல்வது உண்மை தான். தமிழ் டி டி பி அடிக்க ஆள் கிடைப்பது மிகவும் சிரமம். அப்படியே ஒன்று, இரண்டு பேர் கிடைத்தாலும், பெரிய வேலைகள் செய்ய ஆர்வம் காட்டுவதில்லை.

ஒரு முறை, என் கைப்பட எழுதிய கதைக்கு, மாம்பலத்தில் உள்ள, ஒரு டி டி பி சென்டர் ல் கொடுத்து, அதை வாங்குவதற்கு, நான் பெற்ற அவஸ்தை, இருக்கே, வார்த்தையில் சொல்லி மாளாது.

"ஒரு இரண்டு மணி நேரம் கழிச்சு வாங்க அடிச்சு வைக்கிறோம். ஒரு பக்கத்துக்கு ரூபாய் 40 வீதம் 8 பக்கம் அடிச்ச கொடுக்க ரூ320 ஆகும்.

“சரிங்களா சார்”!

என்று அந்த டிடிபி சென்டர்ல, டைப் அடிக்கும் பெண்மணி சொன்னதும்,

"ஆஹா இன்னிக்கே, நம் வேலை முடிஞ்சுடும் உடனே போட்டி கதைக்கு அனுப்பி விடலாம் என்று நினைத்து

“ஓகே ம்மா” என்று சொல்லிவிட்டு. இரண்டு மணி நேரம் கழித்து போய் பார்த்தால், அப்ப தான், இரண்டு பக்கத்தை, முடிச்சு கையோட 10 நிமிஷம், லஞ்சு சாப்பிட்டு வந்துடறேன். வெய்ட் பண்ணுங்க " என்று சொல்லி விட்டு, நம் பதிலுக்கு காத்திராமல் கிளம்பி போன, அந்த பெண்மணி. 10நிமிஷம் என்று சொல்லிவிட்டு, அரை மணி நேரம் கழித்து வந்த பிறகு, தலை விதியை நொந்து கொண்டு, ஒருவழியா, மாலை 5 மணிக்கு, டைப் அடிச்ச, பேப்பரை வாங்கி பார்த்தால், தமிழ் வார்த்தைகளை, குத்தி குதறி, அர்த்தமே மாறும் அளவுக்கு, டைப் அடித்து வைச்சுருந்தாங்க.

“என்னம்மா இப்படி பண்றீங்களேம்மா”!! என்று சிவகார்த்திகேயன் பாணியில், பாடுவதை தவிர, என்னால் ஒன்றும் செய்ய முடியவில்லை.

“சார் ஒங்க எழுத்து புரியல சார்”!

இத்தனைக்கும், என்எழுத்துஅழகாக, அச்சுகோத்தாற் போல் இருக்கும்.

ஒவ்வொரு பக்கத்திலும், இருக்கிற மிஸ்டேக் குகள் எல்லவற்றையும், சரி பண்ணிகொண்டு இருக்கும் போதே, திடீரென ஒரு கஸ்டமர், கொஞ்சம்

சிராக்ஸ் எடுத்து கொடுங்க, என்று வரும் போது, எழுந்து சென்றால், திரும்ப சீட்டில் உக்கார, 10 நிமிடம் ஆகும்.

என் பொறுமை எல்லை மீறி போக. ஒரு வழியாக, மாலை 7 மணிக்கு பரீட்சையில் டிஸ்டிங்க்ஷன் வாங்கி பாஸ் பண்ணிய சந்தோசம் மாதிரி. வீட்டுக்கு வந்து பார்த்தால், நான் எங்கு கமா புல் ஸ்டாப் வைச்சுருந்தேனோ, அது இல்லாமல் இருந்தது.

மறுபடியும், தலைவிதியை நொந்து, பேணாவினால் கமா. புல்ஸ்டாப் போட்டு கதையை, போஸ்ட் இல் அனுப்புவதற்கே அவ்வளவு சிரமம் அடைந்தேன்.

ஆனாலும் அந்த கதை தெரிவு செய்யப்பட்டது என்றதும். பட்ட கஷ்டம் காணாமல் போனது. அதற்கே, எவ்வளவு போராட்டம் என்றால், இம்மாதிரி தொகுப்புக்கு, எது மாதிரியான பிரச்சினைகளை சந்திக்க போகிறேனோ? சிறுகதை தொகுப்பு வெளியீடு சாமானியப்பட்ட வேலையா? என்ன?

லக்ஷ்மன் ஸ்ருதி சிக்னல் பக்கம் உள்ள ரம்பா அச்சகத்தில் கேட்டபோது,

“இது தொந்தரவு புடிச்ச வேலை சார். டிடிபி அடிச்சு, கரெக்ஷன்ஸ், நீங்க பார்த்து கொடுத்து, மறுபடியும் கரெக்ஷன் செஞ்சு, லே அவுட் பண்ணி, அட்டையை லேமினசன் பண்ணி, பிரிண்டிங் பண்ணி கொடுக்கணும் சார்.”

“இந்த வேலை பண்றதுக்கு பேசாம 4, 5 பக்கம் மட்டும் அடிச்சு வாங்கிட்டு போறே பத்து கஸ்டமர் வந்தாலே, வேலை ஈசியா போயிடும் சார்.”

நமக்கு தெரிந்த விஷயத்தையே, திரும்ப சொல்லி, பீலா விடுகிறார் என்று மட்டும் எனக்கு தெரிந்தது.

“சரிங்க, ஒரு வேலைன்னா சிரமங்கள், இருக்கத்தான் செய்யும். அதை பெரிசா பேசிக்கிட்டு”. இங்கே பாருங்க A4 சைஸ் ல 5 பக்கம் அல்லது 6 பக்கம் வரும். கதை புத்தகவடிவமா, 12இன்ச் பான்டில் இருக்கணும். மொத்தம் ஒரு கதை 12 பக்கம் வரும். அப்படி இப்படின்னு மொத்தம் 150 பக்கம் வரும். 100 புக் போடணும் ? “எவ்வளவு செலவு வரும் ன்னு சொல்லு ங்க?”

நான் கொஞ்சம் கோபமாகவே கேட்டேன்.

பின்னே என்ன, இந்த வேலைக்கு, இவ்வளவு கூலி ன்னு, சொன்னா, நமக்கு கட்டுபடி ஆச்சுன்னா, ஓ கே சொல்ல போறோம்.

எடுத்த எடுப்பிலே, கால்குலேட்டர் ல இரண்டு தட்டு தட்டி, “இந்த வேலைக்கு ரூ 28000 ஆகும் சார். சரின்னு சொன்னா, ஒரு வாரத்தில் ரெடி பண்ணிடலாம் சார். அட்வான்ஸ் ரூ 10000 கொடுத்துட்டு போங்க”.

அவர் பேச்சும், நடவடக்கையும், எனக்கு சரியா பட வில்லை. சரியான டுபாக்கூர் ஆளா இருப்பார் போல என்று நினைத்து, " யோசிச்சு சொல்றேன்“.”ஒங்க கார்ட் கொடுங்க, என்று வாங்கிக்கொண்டு வீடு வந்து சேர்ந்தேன்".

அடுத்த இரண்டு மூன்று நாளில், அவரிடம் இருந்து, ஓயாத போன் தொந்தரவு. நான் எடுக்கவே இல்லை

இன்னொரு எழுத்தாள நண்பர், ராயப்பேட்டையில் ஒரு அட்ரஸ் சொல்லி, “அவர் குழந்தைகளுக்கான நூல் மட்டும், செஞ்சு தருகிறார்.. வேணுமின்னா கேட்டு பாருங்க”என்றார்.

மறுநாள் அவரை, போனில் காண்டக்ட் செய்த போது, முதலில் நண்பர், சொன்ன விஷயத்தை உறுதி

படுத்தினார். ஆனால் நான் பேசிய விதம் பிடித்து போய் ஓகே சார்.பண்ணலாம். நண்பருக்கு சொன்ன ரேட் தான்.

இரண்டு நாள் கழித்து, போன் செய்த போது,

தனக்கு உடல் நலம் சரியில்லை, என்று சொன்னவர், அதற்கு பிறகு போன் செய்தாலும் எடுப்பதில்லை.

இனி இவர் நமக்கு சரி பட்டு வரமாட்டார்.

நம் ஆசையை குழி தோண்டி புதைக்கப்பட வேண்டும்.

என்று நினைத்து ஆறுதல் அடைந்தேன்.

அப்படி இப்படி என்று ஒரு மாதம் ஓடி விட்டது.

இடையில் “என்னப்பா? ஏதும் ஏற்பாடு செஞ்சியா.யார் யாருக்கு அழைப்பிதழ் அனுப்பணும் யாருக்கு என்ன ட்ரெஸ்வாங்கணும்?” உள்ளூர் குடும்ப வாத்தியார் ரூ18000 கேக்கிறார் அதோடு உப்பிலிப்பன் கோயில் போயிட்டு வர பஸ்சார்ஜ் ரூ 8000. வேற கொடுக்கணுமாம்."

“சரியான பகல் கொள்ளையா இருக்கு வேண்டாம்” என்றான்.

"நான் அங்கேயே எனக்கு தெரிஞ்ச கேட்டரிங் காண்ட்ராக்ட் ர் மூலம் பத்தர், பார்பர், வாத்தியார் ஏற்பாடு, காலை டிபன். மதியம் சிறப்பு சாப்பாடு, இரண்டு ஏசி ரூம் வாடகை சேர்த்து, பேக்கஜா ரூ 25000 கொடுத்தா போதும்;

“நீங்க ஒங்க குழந்தைக்கு ட்ரெஸ், நகை வாங்கிட்டு வாங்கோ டென்ஷன் பிரீ ட்ரிப் பா இருக்கட்டும். என்ன சரிதானே” என்று சொன்னது நியாயமான ஒன்றாய் தெரிந்தது.

பெண்ணிடமும் மாப்பிள்ளையிடமும் தகவல் சொல்லிய பிறகு, இடையில் காரில் போகலாமா ட்ரைனில் போகலாமா என்று குழம்பி ஒரு வழியா இரண்டு இன்னோவோ கார் மூலம் போகலாம் என்று முடிவு எடுக்க பட்டது.

ஒரு நாள், என் திண்டுக்கல் நண்பரிடம், புத்தக வெளியீட்டு பிரச்சனை பற்றி, பேசிக்கொண்டிருந்த போது, “கவலையை விடுங்க சார்.எனக்கு நெருக்கமான நண்பர், இது மாதிரி வேலைகளை, அழகா செஞ்சு கொடுக்கிறார். என் பேச்சுக்கு மறு பேச்சு பேசமாட்டார். நீங்க எழுதி வெச்ச கதைகளை, ஸ்பீட் போஸ்ட் ல் அனுப்புங்க. ஜனவரி முதல் வாரம் ரெடி ஆயிடும்”.

டிசம்பர் மத்தியில், அவர் டி டி பி செய்து அனுப்பிய கதைகளை, ப்ரூப் பார்ப்பதற்கு எனக்கு அனுப்பியிருந்தார்.

கடுமையான மழை, ஊர் பூரா வெள்ளம். நான் ப்ரூப் பார்த்த காப்பியை, அனுப்பி, அந்த பார்சல், மழையில் நனைந்து, எல்லாமே அழிந்து போய் விட்டால்? அந்த பயம் வேறு.

தயார் நிலையில் வைத்து இருந்தும், மழை விடட்டும் என்று டிசம்பர் 25ம் தேதி அனுப்பிய மறு வாரமே, புத்தக வடிவமைப்பு, கதைகள், பிடிஎப் வடிவில் என் மெயில்க்கு அனுப்பி. இருந்தார்

புத்தாண்டு பிறந்ததும், வாழ்த்து தெரிவித்து விட்டு, அவர் அனுப்பி இருந்த பைல் கரெக்ஷன் செய்து, அனுப்பிய அடுத்த நிமிடமே,

டிவி யில், கோரோனோ பரவல் அதிகமாக காணப்படுவதால் அரசு ஆணை படி ஒவ்வொருநாளும் இரவு 10 மணி முதல் மற்றும்ஞாயிறு முழுவதும் ஊரடங்கு அமுலில்

உள்ளது என்று அறிவித்து இருந்தது.

ஞாயிறு மட்டும் தானே லோக்ட்வுன். நம் நிகழ்ச்சி 18 செவ்வாய் தானே என்று திருப்தி அடைந்தாலும் அவ்வப்போது டிவி யில் கோரோனோ பரவல் தீவீரத்தை, சொல்லி சொல்லி பயமுறுத்தி கொண்டு இருந்தார்கள்.

12 ம் தேதி டிவி யில் வரும் 14 முதல் 18 வரை வழிபாட்டு தலங்கள் மூடப்படுவதாக அரசு அறிவித்துள்ளதுஎன்று செய்தியாளர் வாசித்து கொண்டுருந்தார்..

இந்த அறிவிப்பை பார்த்ததும், எல்லோருக்கும் மூட் அப்செட் ஆனது.

“உறவினர்கள், நண்பர்கள் எல்லோருக்கும் வாட்சப் மூலமும் போனிலும் செய்தி சொல்லிவிட்டோம். இனி என்ன செய்வது?”

கோரோனோ பிரச்னையுடன் இந்த கோயில் மூடல்பிரச்சனையும் கூட சேர்ந்து இருக்கே?

“ஒப்பிலியப்பா என்ன சோதனை?” ரம்யா புலம்பி கொண்டுருந்தாள்.

இடையில் ஸ்ரீரங்கத்திலிருக்கும் பெரியப்பா, உடம்பு திடீரென சரியில்லாமல் போகவே, தன்னால் கோயிலுக்கு வர முடியாதே, என்று சொல்லவும், மொத்த குடும்பமும், மீண்டும் குழப்பத்தில் ஆழ்ந்து சோகமயமானது.

பின்னே இருக்காதா? 80 வயது குடும்பத்தின் மூத்த உறுப்பினர். ரம்யாவின் கல்யாணம், சீமந்தம் ஆகியவற்றை தான். முன் நின்று நடத்தியவர்; அவரால் வர முடியவில்லை என்றால், நினைக்கேவே சங்கடமானது ரம்யாவுக்கு மட்டுமல்ல, எல்லோருக்கும் தான்.

“பேசாம, இங்கேயே ஆயுஷ்ஹோமமும், காது குத்தும் மட்டும் பண்ணிடுவோம். முடியை மட்டும் கொஞ்சம் கத்திரிச்சு கவரில் போட்டு வைத்து கொண்டு, இந்த கோரோனோ பிரச்சனை முடிஞ்ச பிற்பாடு போய், முடி காணிக்கை, பண்ணிக்கலாம்” என்றாள் என் மனைவி.

இது நீயோ நானோ சம்பந்தபட்ட விஷயம் அல்ல. பொண்ணு, மாப்பிள்ளை, சம்பந்தி சம்பந்தபட்ட விஷயம்.

“நாமே என்ன செய்யனுமோ அதை மட்டும் செஞ்சுட்டு வருவோம். நீ எதையும் நெகட்டிவ் தொனியில் பேசாதே”

“உன் ஆப்ஜெக்ஷன் ஓவர் ரூல்ட்” என்று மனைவியின் வாயை ஆப் செய்தேன்.

அடுத்து வரும் 6 மாத ஜென்ம நட்சத்திர நாளில், நல்ல நேரம் இல்லை, என்று வீட்டு வாத்தியார் சொல்லவே, என்ன பண்ணலாம்? என்று யோசித்து, யோசித்து, இனியும் தாமதிக்க முடியாது என்று பத்திரிக்கை அனுப்பிய எல்லோருக்கும், கோரோனோவை காரணம் காட்டி, பன்க்ஷன் தேதி குறிப்பிடாமல், ஒத்தி வைக்கபட்டுள்ளது, என்று வாட்சப் மூலம் மீண்டும் தகவல் தெரிவிக்கப்பட்டது..

அதே சமயம் இந்த பிரச்சனைகளின் ஆழத்தை உணர்ந்த நண்பர் 5 புக் மட்டும் 13 ம் தேதி அனுப்புகிறேன் மற்றவை அப்புறம் பிரிண்ட் பண்ணலாம். 14, 15, 16 லீவு எனவே 17ம் தேதிபுக் வந்துடும் திட்டமிட்ட படி 18 ம் தேதி, எங்கு நடத்தினாலும் அட்வான்ஸ் வாழ்த்துக்கள் என்று என்னை வாழ்த்திவிட்டு அவர் பொங்கல் விடுமுறை க்கு தன் சொந்த கிராமம் கிளம்பி போனார்.

எனக்கு இருந்த ஆர்வம் சுத்தமாக போய் விட்டது.

எவ்வளவு சோதனை? 14, 15, 16ம் போச்சு.

17 ம் தேதி காலை 11 மணிக்கு ஏற்கனவே கேட்டரிங் ஏற்பாடு பண்ணியவர், திடீரென போன் மூலம் " வரும் 18ம் தேதி ஒப்பிலியப்பன் மடவிளாகத்தில் உள்ள என் அகத்தில், எல்லாவற்றையும் செய்து கொள்ளுங்கள்.இது ஒப்பிலியப்பன்.பூமி.சன்னதி உள்ளே இல்லாது போனா என்ன? வெளி இடமும் அந்த பெருமாள் இடம் தான்.பேஷா பண்ணலாம் கிளம்பி வாங்கோ. மறுநாள் 19ம் தேதி ஒப்பலியப்பனை சேவித்து ஊர் கிளம்புங்கோ" "

என்று சொன்னது சாசாட் த் ஒப்பிலியப்பனே சொன்ன மாதிரின்னு முக மலர்ச்சியுடன் காணப்படடா ள் ரம்யா. இந்த தகவலை பெரியப்பாவிடம் சொல்ல, அவரும் உடனே எனக்கும் இப்போ உடம்பு நார்மல் ஆயிடுச்சு; நான் வந்து, குழந்தையை ஆசீர்வதிக்க வரேன்னு சொன்னதும், இரட்டிப்பு சந்தோசம் அடைந்தது சம்பந்தி குடும்பமும் எங்கள் குடும்பமும்.

17ம் தேதி மாலை 5 மணிக்கு, இரண்டு இனோவோ காரில், மொத்தம் 12 பேர் கிளம்பி போகலாம் என்று முடிவு எடுக்கப்பட்டது.

திண்டுக்கல் நண்பரை தொடர்பு கொண்டு நிகழ்ச்சி மாற்றம் செய்த விஷயத்தை சொல்லி கூரியர் நம்பர் கொடுங்க நான் ட்ராக் பண்ணி பார்க்கிறேன் என்றதும், “அய்யோ சார் நான் அனுப்பிய பையன் புக் பண்ணிய ரசீதை கொடுக்கமா போயிட்டான் சார். சாரி சார் இப்ப கேட்டு 10 நிமிஷத்தில்ஒங்களுக்கு போன் பண்றேன்”.

10 நிமிஷம் பல நிமிடங்கள் ஆனது. மதியம் 1 மணிக்கு நம்பர் கிடைத்து கூரியர் ஆபீஸ்ல கேட்கும் போது "சார் அந்த பார்சல் இன்னும் ராமாபுரம் வரலே

சார்.அது கிண்டியில் ஹெட் ஆஃபீஸ் ல இருக்கு சார். நாளைக்கு தான் டெலிவரி ஆகும் சார்.என்றதும் சுணங்கி போய் விட்டேன்.

17 ம் தேதி காலையலுருந்து கண மழை.7 கி. மீ தள்ளி கிண்டி போய் வர ஆட்டோவும் கிடைக்கல.

மறுபடியும் ராமாபுரம் கூரியர் ஆபிஸை தொடர்பு கொண்டு நாளை நடக்க போகும் விஷயத்தை சொன்ன போது, “இவ்வளவு தூரம் சொல்றீங்க. நிச்சயம் ஹெல்ப் பன்றேன் சார்.” நானே போய் வாங்கிட்டு வரேன் சார். நம்பர் இன்னொரு வாட்டி சொல்லுங்க" குறித்துக் கொண்டார்.

ஒரு மூணு மணிக்கு போன் அடிங்க என்று அந்த உரிமையாளர் சொன்ன போது நெகிழ்ந்து போனேன்.

மதியம் 1 மணியிலிருந்து.

3 மணி வரை மன உளைச்சல்.

3.10 க்கு கூரியர் உரிமையாளர் போன் செய்தார்.

“பார்சல் வந்து விட்டது வாங்கிட்டு போங்க”.

வீட்டுக்கும், கூரியர் ஆபிஸ்க்கும், 200 மீட்டர் தூரம் தான். மழை பெய்து கொண்டு இருந்தது. ஸ்கூட்டியை எடுத்தேன். பார்சல் வாங்கி கொண்டேன். இடையே ரம்யாவிடமிருந்து ஏகப்பட்ட போன் கால்கள் வேறு.

அவசர அவசரமாக, ஆட்டோ பிடித்து அசோக் நகர் வந்து காரில் ஏறி உக்காரும் வரை ஏதும் பேசவில்லை

ஒப்பிலியப்பன் கோயில் சேர்ந்தபோதுஇரவு மணி 12 ஆகி விட்டது.

மறுநாள் காலை 10 மணிக்கு, ஒப்பிலியப்பன் சன்னதியின் வாசலில் நின்றுந்த, நான் உள்ளே நுழைந்த அர்ச்சகரிடம், என் புக்யையும் ரூ100ம்

கொடுத்து, பெருமாள் பாதங்களில், சமர்பித்து கொண்டு வாருங்கள் என்ற என் வேண்டுகோளை ஏற்று, அடுத்த பத்தாவது நிமிடம் பூ குங்கும பிரசாதம் உடன் கொண்டு வந்து கொடுத்து விட்டு, சன்னதிக்குள் சென்று விட்டார்.

சனவரி 14 பொங்கல் முதல் 18 ம் தேதி வரை கோயில் லாக் டவுன் காரணத்தினால் மூடப்பட்டு இருந்ததாலும்,

18 ம் தேதி, நப்பின்னையின் பிறந்தநாள் நட்சத்திரம். அன்று, காது குத்தும் வைபவமும், எனது சிறுகதை தொகுப்பு விழாவும், விழாவில் தன் பிஞ்சு கரங்கள் மூலம், நான் எழுதிய புத்தகத்தின் முதல் பிரதியை வீட்டின் மூத்தவருக்கு கொடுத்ததும், அதை அவர் பெற்று கொண்டது எல்லாமே டி 20 மேட்ச் மாதிரி டென்ஷன் கொடுத்து முடிவில் எல்லாமே, நல்லபடியா முடித்து கொடுத்தது அந்த ஒப்பிலியப்பன் செயல்தானோ!!!!...

# கணியம் அறக்கட்டளை




தொலை நோக்கு – **Vision**

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழலை உருவாக்குதல்.

பணி இலக்கு – **Mission**

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

எமது பணிகள்

- கணியம் மின்னிதழ் - kaniyam.com
- கணிப்பொறி சார்ந்த கட்டுரைகள், காணொளிகள், மின்னூல்களை இங்கு வெளியிடுகிறோம்.
- கட்டற்ற தமிழ் நூல்கள் - FreeTamilEbooks.com
- இங்கு யாவரும் எங்கும் பகிரும் வகையில், கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமையில், தமிழ் மின்னூல்களை இலவசமாக, அனைத்துக்

கருவிகளிலும் படிக்கும் வகையில் epub, mobi, A4 PDF, 6 inch PDF வடிவங்களில் வெளியிடுகிறோம்.

- தமிழுக்கான கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்கம்
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்.

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், முழுமையான வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும். https://github.com/KaniyamFoundation/Organization/issues இந்த இணைப்பில் செயல்களையும், https://github.com/KaniyamFoundation/Organization/wiki இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக

வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.